



காவிரிப்பூம்பட்டினம் (மேலையூர்) தாசில் பண்ணை

உயர்திரு **K. S. இராமலிங்கம்** அவர்கள்

# முதலாண்டு நினைவு மலர்

தோற்றம்: 18-8-1897 மறைவு: 27-6-69

1005

# பொருளடக்கம்



" போகமெனும் கடல்கடந்து முத்தியெனும்
கரைகாண்பான் முதிர்ந்த நாலாம்
பாகமெனும் மலர்பறித்து பக்தியெனும்
நார்பூட்டிப் பரிந்து சாத்திச்
சோகமெனப் பாவித்துத் துரிய மெனும்
விளக்கேற்றித் துரிய நீங்கி
ஆக மெனும் கோயிலின் கண் அறிவென்னும்
கணபதிக்கே அன்பு செய்வாம்."

# முன்னுரை

“ அன்றே என்றன் ஆவியும் உடலும் உடைமை எல்லாமும்
குன்றே அணையாய்! என்னை ஆட்கொண்டபோதே
கொண்டிலையோ ?
இன்றோர் இடையூறு எனக்கு உண்டோ? எண்தோள் முக்கண்
எம்மானே!
நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ இதற்கு நாயகமே !”

இன்றோடு எனது சுவீகாரத் தந்தையார் காவிரிப்பூம்பட்டினம், மேலையூர் தாசில் பண்ணை உயர்திரு K. S. இராமலிங்கம் அவர்கள் இறைவன் திருவடி நீழல் சேர்ந்து ஓராண்டு காலம் ஆகின்றது. அதை ஒட்டி அவர்களது நினைவு மலர் பொலிவோடும், பயனோடும் இன்று வெளிவருகின்றது.

முதற்கண் இம்மலர்க்கு ஸ்ரீமுகம் தந்து ஆசிவழங்கியருளிய காஞ்சி காமகோடி பீடம் ஸ்ரீ சங்கராச்சாரியார் சுவாமிகள் அவர்கள் பொன்னார் திருவடிகட்கு என் வணக்கத்தைச் செலுத்துகிறேன். இந்த மலர் இந்த அளவுக்குச் சிறப்புற வெளிவர பெரிதும் துணை புரிந்த சைவப் பெருநாவலர் உயர்திரு. அ. நடேச முதலியார் அவர்கட்கும், மற்றும் கட்டுரைகள் வழங்கிய தமிழக முதல்வர், அரசியற் பெருமக்கள், இலக்கிய உலகின் இணையற்ற எழுத்தாளர்கள், எங்கள் குடும்பத்தோடு தொடர்புடையவர்கள், பத்திரிகைச் செய்திகளைத் தொகுத்துத் தந்த செந்தமிழ்ச் செல்வர் உயர்திரு கி. வா. ஜகந்நாதன் ஆகியோர்க்கும் எனது சுவீகார அன்னையார் திருமதி R. கௌரி அம்மாள் அவர்களின் சார்பிலும், என் சார்பிலும் நன்றி

தெரிவித்துக் கொள்கிறேன். மேலும் இந்த மலர் வெளிவருவதற்குப் பெரிதும் துணைபுரிந்த மேலையூர் திரு. M. S. சொக்கலிங்கம் பிள்ளை, மேலையூர் திரு. பரமசிவம் பிள்ளை ஆகியோர்க்கும், கட்டுரைகளைத் தொகுத்தும், பிரதி எடுத்தும், சரி பார்த்தும் தந்த தமிழாசிரியர் உயர்திரு M. சௌந்தரராசன் உள்ளிட்ட சீனிவாசா உயர்நிலைப் பள்ளி ஆசிரியர்கள் அனைவர்க்கும் மலரைச் சிறப்பாக அச்சிட்டுத் தந்த சிதம்பரம் "அழகு அச்சகத்தாருக்கும்" எங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

நன்றி, வணக்கம்.

அன்பன்

R. இராஜசேகரன்
"தாசில் பண்ணை"
மேலையூர்
பூம்புகார்





ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு
ஸ்ரீ சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதீ ஸ்வாமிகள்



உ

சிவ சிவ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

"சீரார் பெருந்துறை நம்தேவன் அடிபோற்றி
ஆராத இன்பம் அருளும் மலைபோற்றி"

**திருமந்திரம்**

1 சிவசிவ என்றே தெளிகிலர் ஊமர்
சிவசிவ வாயுவுந் தேர்ந்துள் அடங்கச்
சிவசிவ வாய தெளிவினுள் ளார்கள்
சிவசிவ வாகும் திருவரு ளாமே.

2 சிவாய நமவெனச் சித்தம் ஒருக்கி
அவாயம் அறவே யடிமைய தாக்கிச்
சிவாய சிவசிவ வென்றென்றே சிந்தை
அவாயங் கெடநிற்க ஆனந்த மாமே.

**கோயிற்புராணம்**

3 பூங்கமலத் தயனுமலர் புண்டரிகக் கண்ணனுந்
தாங்குபல புவனுமுமேற் சகலமுமா யகலாத
வோங்குமொளி வெளியேநின் றுலகுதொழ நடமாடுந்
தேங்கமழும் பொழிற்றில்லைத் திருச்சிற்றம் பலம்போற்றி

4 ஆரணங்கண் முடிந்தபதத் தானந்த வொளியுலகிற்
காரணங்கற் பனைகடந்த கருணைதிரு வுருவாகிப்
பேரணங்கி னுடனாடும் பெரும்பற்றப் புலியூர்சேர்
சீரணங்கு மணிமாடத் திருச்சிற்றம் பலம்போற்றி

13 கூவின பூங்குயில் கூவின கோழி
குருகுகள் இயம்பின இயம்பின சங்கம்
ஓவின தாரகை யொளிஒளி யுதயத்து
ஒருப்படு கின்றது விருப்பொடு நமக்குத்
தேவநற் செறிகழல் தாளிணை காட்டாய்
திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே
யாவரும் அரிவறி யாய்எமக் குஎளியாய்
எம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே

14 இன்னிசை வீணையர் யாழினர் ஒருபால்
இருக்கொடு தோத்திரம் இயம்பினர் ஒருபால்
துண்ணிய பிணைமலர்க் கையினர் ஒருபால்
தொழுகையர் அழுகையர் துவள்கையர் ஒருபால்
சென்னியில் அஞ்சலி கூப்பினர் ஒருபால்
திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே.
என்னையும் ஆண்டுகொண்டு இன்னருள் புரியும்
எம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே

15 பூதங்கள் தோறும்நின் றாய்எனின் அல்லால்
போக்கிலன் வரவிலன் எனநினைப் புலவோர்
கீதங்கள் பாடுதல் ஆடுதல் அல்லால்
கேட்டறி யோம்உனைக் கண்டுஅறி வாரைச்
சீதங்கொள் வயல்திருப் பெருந்துறை மன்னா
சிந்தனைக் கும்அரி யாய்எங்கள் முன்வந்து
ஏதங்கள் அறுத்துஎம்மை ஆண்டுஅருள் புரியும்
எம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே.

16 பப்பற வீட்டிருந்து உணரும் நின்னடியார்
பந்தனை வந்துஅறுத் தார்அவர் பலரும்
மைப்புறு கண்ணியர் மானுடத் தியல்பின்
வணங்குகின் றார்அணங் கின்மண வாளா
செப்புறு கமலங்கள் மலரும்தண் வயல்சூழ்
திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே
இப்பிறப்பு அறுத்தெமை ஆண்டருள் புரியும்
எம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே.

17 அதுபழச் சுவையென அமுதென அறிதற்கு
அரிதென எளிதென அமரரும் அறியார்
இதுஅவன் திருவரு இவன்அவன் எனவே
எங்களை ஆண்டுகொண் டுஇங்கெழுந் தருளும்
மதுவளர் பொழில்திரு உத்தர கோச
மங்கையுள் ளாய்திருப் பெருந்துறை மன்னு
எதுஎமைப் பணிகொளுமாறு அது கேட்போம்
எம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே.

18 முந்திய முதல்நடு இறுதியும் ஆனாய்
மூவரும் அறிகிலர் யாவர் மற்றுஅறிவார்
பந்தணை விரலியும் நீயும்நின் னடியார்
பழங்குடில் தொறும்எழுந் தருளிய பரனே
செந்தழல் புரைதிரு மேனியும் காட்டித்
திருப்பெருந் துறையுறை கோயிலும் காட்டி
அந்தணன் ஆவதும் காட்டிவந் துஆண்டாய்
ஆரமு தேபள்ளி யெழுந்தரு ளாயே

19 விண்ணகத் தேவரும் நண்ணவும் மாட்டா
விழுப்பொரு ளேஉன தொழுப்படி யோங்கள்
மண்ணகத் தேவந்து வாழச்செய் தானே
வண்திருப் பெருந்துறை யாய்வழி யடியோம்
கண்ணகத் தேநின்று களிதரு தேனே
கடல்அமு தேகரும் பேவிரும் படியார்
எண்ணகத் தாய்உல குக்குஉயி ரானாய்
எம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே.

20 புவனியில் போய்ப்பிற வாமையின் நாள்நாம்
போக்குகின் றோம்அவ மேஇந்தப் பூமி
சிவன்உய்யக் கொள்கின்ற வாறுஎன்று நோக்கித்
திருப்பெருந் துறையுறை வாய்திரு மாலாம்
அவன்விருப்பு எய்தவும் மலரவன் ஆசைப்
படவும்நின் அலர்ந்தமெய்க் கருணையும் நீயும்
அவனியில் புகுந்துஎமை ஆட்கொள்ள வல்லாய்
ஆரமு தேபள்ளி யெழுந்தரு ளாயே.

21 அம்புயா சனன்மா லின்னும் அளப்பருந் திறத்தாய்
போற்றி
நம்பனே போற்றி யெங்கள் நாதனே போற்றி கோதில்
செம்பொனே மணியே போற்றி சிவபெருமானே
போற்றி
எம்பிரான் போற்றி முக்கண் இறைவனே போற்றி
போற்றி

22 வேதநாயகனே போற்றி விண்ணவர் தலைவா போற்றி
மாதொரு பாகா போற்றி மறுசமய ங்கண் மாளப்
பேதகஞ் செய்வாய் போற்றி பிஞ்ஞகா போற்றி
யான்செய்
பாதக மனைத்துந் தீர்க்கும் பராபரா போற்றி போற்றி.

23 குறைவிலா நிறைவே குணக்குன்றே
கூத்தனே குழைக்கா துடையானே
உறவிலே னுனையன்றி மற்றடியேன்
ஒருபிழை பொறுத்தா லிழிவுண்டே
சிறைவண் டார்பொழில்சூழ் திருவாரூர்ச்
செம்பொனே திருவாவடு துறையுள்
அறவனேயெனை யஞ்சலென் றருளாய்
ஆரெனக் குறவமார்க ளேறே.

24 திருவேயென் செல்வமே தேனே வானோர்
செழுஞ்சுடரே செழுஞ்சுடர்நற் சோதீ மிக்க
உருவேயென் னுறவெயென் னூளே யூனின்
உள்ளமே யுள்ளத்தி னுள்ளே நின்ற
கருவேயென் கற்பகமே கண்ணே கண்ணிற்
கருமணியே மணியாடு பாவாய் காவாய்
அருவாய வல்வினைநோ யடையா வண்ணம்
ஆவடுதண் டுறையுறையு மமர ரேறே.

25 அத்தாவுன் அடியேனை அன்பா லார்த்தாய்
அருள்நோக்கில் தீர்த்தநீ ராட்டிக் கொண்டாய்
எத்தனையும் அரியைநீ எளியை யானாய்
எனையாண்டு கொண்டிரங்கி யேன்று கொண்டாய்

பித்தனேன் பேதையேன் பேயேன் நாயேன்
பிழைத்தனகள் எத்தனையும் பொறுத்தா யன்றே
இத்தனையும் எம்பரமோ ஐயஐயோ
எம்பெருமான் திருக்கருணை யிருந்த வாறே.

26 கடையவ னேனைக் கருணையி னாற்கலந்
தாண்டு கொண்ட
விடையவ னேவிட் டிடுதிகண் டாய்விறல்
வேங்கையி ன்றோ
லுடையவ னேமன்னு முத்தர கோசமங் கைக்கரசே
சடையவ னேதளர்ந் தேனெம் பிரானென்னைத்
தாங்கிக் கொள்ளே.

27 ஒளிவளர் விளக்கே யுலப்பிலா வொன்றே
உணர்வுசூழ் கடந்ததோ ருணர்வே
தெளிவளர் பளிங்கின் றிரண்மணிக் குன்றே
சித்தத்துட் டித்திக்குந் தேனே
அளிவள ருள்ளத் தானந்தக் கனியே
அம்பல மாடரங் காக
வெளிவளர் தெய்வக் கூத்துகந் தாயைத்
தொண்டனேன் விளம்புமா விளம்பே.

28 சொல்லாண்ட சுருதிப்பொருள் சோதித்த தூய்மனத்
தொண்டருள்ளீர்
சில்லாண்டிற் சிதையுஞ் சிலதேவர் சிறுநெறி சேராமே
வில்லாண்ட கனகத் திரண்மேரு
விடங்கன் விடைப்பாகன்
பல்லாண்டென் னும்பதங்கடந் தானுக்கே பல்லாண்டு
கூறுதுமே.

29 உலகெ லாம்உணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்.

30 கருப்பத் தூறிப் — பிறவாதே
கனக்கப் பாடுற் — றுழலாதே
திருப்பொற் பாதத் — தனுபூதி
சிறக்கப் பாலித் — தருள்வாயே
பரப்பற் ருருக் — குரியோனே
பரத்தப் பாலுக் — கணியோனே
திருக்கைச் சேவற் — கொடியோனே
செகத்திற் சோதிப் — பெருமாளே

## 3. உமாதேவியார்

31 பொங்குருச் செல்வம் கல்வி பொருவிலா வாய்மை
தூய்மை
இங்கெமக் கருளவல்ல இணையிலா எம்பி ராட்டி
பங்கயத் தடஞ்சூழ் கூடற் பவளமால்
வரையை நீங்கா
அங்கயற் கண்ணி மங்கை அடிக்கம லங்கள் போற்றி

32 சுரும்புமுரல் கடிமலர்ப்பூங் குழல்போற்றி
உத்தரியத் தொடித்தோள் போற்றி
கரும்புருவச் சிலைப்போற்றி கவுணியர்க்குப்
பால்சுரந்த கலசம் போற்றி
இரும்புமனம் குழைத்தென்னை எடுத்தாண்ட
அங்கயற்கண் எம்பிராட்டி
அரும்பும்இள நகைபோற்றி ஆரண நூ
புரஞ்சிலம்பும் அடிகள் போற்றி.

33 தொடுக்கும் கடவுட் பழம்பாடல்
தொடையின் பயனே! நறைபழுத்த
துறைத்தீந் தமிழின் ஒழுகுநறும்
சுவையே! அகந்தைக் கிழங்கை அகழ்ந்து
எடுக்கும் தொழும்பர் உளக்கோயிற்கு
ஏற்றும் விளக்கே! வளர்சிமய
இமயப் பொருப்பில் விளையாடும்
இளமென் பிடியே! எறிதரங்கம்

உடுக்கும் புவனம் கடந்துநின்ற
ஒருவன் திருவுள்ளத்தில் அழகு
ஒழுக எழுதி பார்த்திருக்கும்
உயிரோ வியமே! மதுகரம்வாய்

மடுக்கும் குழற்காடு ஏந்தும்இள
வஞ்சிக் கொடியே! வருகவே;
மலையத் துவசன் பெற்றபெரு
வாழ்வே! வருக வருகவே.

34. காலத்தொடு கற்பனை கடந்த
கருவூலத்துப் பழம்பாடல்
கலைமாச் செல்வர் தேடிவைத்த
கடவுள் மணியே! உயிரால்

வாலத்து உணர்வுநீர் பாய்ச்சி
வளர்ப்பார்க்கு ஒளிபூத்து அளிபழுத்த
மலர்க் கற்பகமே! எழுதாச்சொல்
மழலை ததும்பு பசுங்குதலைச்

சோலைக் கிளியே! உயிர்த்துணையாம்
தோன்றுத் துணைக்கோர் துணையாகித்
துவாத சாந்தப் பெருவெளியில்
துரியங் கடந்த பரநாத

மூலத் தலத்து முளைத்தமுழு
முதலே! முத்தந் தருகவே!
முக்கட் சுடர்க்கு விருந்திடும்
முலையாய்! முத்தந் தருகவே

35 பெருந்தேன் இறைக்கும் நறைக்கூந்தற் பிடியே
வருக முழுஞானப்
பெருக்கே வருக பிறைமௌலிப் பெம்மான்
முக்கட் சுடர்கிடுநல்
விருந்தே வருக மும்முதற்கும் வித்தே
வருக வித்தின்றி
விளைக்கும் பரமா னந்தத்தின் விளைவே
வருக பழமறையின்

1005

குருந்தேவருக அருள்பழுத்த கொம்பே
வருக திருக்கடைக்கண்
கொழித்த கருணைப் பெருவெள்ளம் குடைவார்
பிறவிப் பெரும்பிணிக்கோர்
மருந்தே வருக பசுங்குதலை மழலைக்
கிளியே வருகவே
மலையத் துவசன் பெற்றபெரு வாழ்வே
வருக வருகவே.

36 பொன்னே வருக மூவுலகும் பூத்தாய்
வருக நாயேனைப்
புரந்தாய் வருக வழுதியர்கோன்
புதல்வீ வருக முகிற்கிளைய
மின்னே வருக மெய்ஞ்ஞான விளக்கே
வருக மறைநான்கின்
விரிவே வருக பேரின்ப விளைவே
வருக மிகுங்கருணை
அன்னே வருக அகநெகுவார்க் கணியே
வருக அலர்மடவார்க்கு
அரசே வருக உரைப்பருஞ்சீர் அம்மே
வருக அழற்கரத்து
மன்னோர் உடலம் பகிர்ந்தஇள
மயிலே வருக வருகவே
மதமா தங்க வனத்துமட மானே
வருக வருகவே.

## 4 சித்சபாநாயகர்

37 ஆதியாய் நடுவு மாகி யளவிலா வளவுமாகிச்
சோதியா யுணர்வு மாகித் தோன்றிய பொருளு மாகிப்
பேதியா வேக மாகிப் பெண்ணுமா யாணு மாகிப்
போதியா நிற்குந்தில்லைப் பொதுநடம் போற்றிபோற்றி

38 கற்பனை கடந்த சோதி கருணையே யுருவ மாகி
அற்புதக் கோல நீடி யருமறைச் சிரத்தின் மேலாஞ்
சிற்பர வியோம மாகுந் திருச்சிற்றம்பலத் துணின்று
பொற்புட னடஞ்செய் கின்ற பூங்கழல் போற்றி போற்றி



ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் ஜகத்குரு
ஸ்ரீ ஜயேந்த்ர ஸரஸ்வதி ஸ்வாமிகள்

( ஸ்ரீ புதுப்பெரியவாள் )

## 6 தக்ஷிணாமூர்த்தி

44 கல்லாலின் புடையமர்ந்து நான்மறையா
றங்கமுதற் கற்ற கேள்வி
வல்லார்க ளுல்வருக்கும் வாக்கிறந்த
பூரணமாய் மறைக்கப் பாலாய்
எல்லாமா யல்லதுமா யிருந்ததனை
யிருந்தபடி யிருந்து காட்டிச்
சொல்லாமற் சொன்னவரை நினையாம
னினைந்துபவத் தொடக்கை வெல்வாம்.

45 மும்மலம் வேறுபட் டொழிய மொய்த்துயிர்
அம்மலர்த் தாணிழ லடங்கு முண்மையைக்
கைம்மலர்க் காட்சியிற்கதுவ நல்கிய
செம்மலை யலதுளஞ் சிந்தி யாதரோ.

## 7. திருமால்

46 கதிரவன் குணதிசைச் சிகரம்வந் தணைந்தான்
கனவிருள் அகன்றது காலையம் பொழுதாய்
மதுவிரிந் தொழுகின மாமலர் எல்லாம்
வானவர் அரசர்கள் வந்துவந் தீண்டி
எதிர்திசை நிறைந்தனர் இவரொடும் புகுந்த
இருங்களிற் றீட்டமும் பிடியொடு முரசும்
அதிர்தலில் அலைகடல் போன்றுள தெங்கும்
அரங்கத்தம் மாபள்ளி எழுந்தரு ளாயே.

47 சீர்பூத்த பரஞ்சுடராய்ச் சித்தாகிக் கானலிடை
நீர்பூத்த தெனஉலகம் நிறைந்தொளிதன்
பால்தோன்ற
ஏர்பூத்த முத்தொழிலும் இனிதியற்றித் தனிநின்ற
கார்பூத்த திருமேனிக் கடவுள்மலர் அடிபணிவாம்

48 வேதமும் வேதம் விளம்புமெய்ப் பொருளும்
அப்பொருள் விதங்களும் பஞ்ச
பூதமும் புலமும் புலன்களின் பயனும்
அப்பயன் பொலிவுற நுகரும்

ஞாதமும் உலகம் படைத்தளித் தழித்து
ஞானமாய் அகிலமும் நிறைவுற்று
ஆதியும் நடுவும் முடிவுமாய் நின்ற
ஆதியான் அடியிணை பணிவாம்.

49 பல்லாண்டு பல்லாண்டு பல்லா யிரத்தாண்டு
பல்கோடி நூருயிரம்
மல்லாண்ட திண்தோள் மணிவண் ணுஉன்
செவ்வடி செவ்வி திருக்காப்பு

50 அடியோ மோடும்; நின்னேடும் பிரிவின்றி
ஆயிரம் பல்லாண்டு
வடிவாய் நின்வல மார்பினில் வாழ்கின்ற
மங்கையும் பல்லாண்டு
வடிவார் சோதி வலத்துறை யும்சுட
ராழியும் பல்லாண்டு
படைபோர் புக்குமுழங்கும் அப்பாஞ்சசன்
னியமும் பல்லாண்டே.

51 தெரியேன் பாலகனுய்ப் பலதீமை கள்செய்து
விட்டேன்
பெரியேன் ஆயினபின் பிறர்க்கே யுழைத்தேழை
யானேன்
கரிசேர் பூம்பொழில்சூழ் கனமா மலேவேங் கடவா
அரியே வந்தடைந்தேன் அடியேனை ஆட்கொண்
டருளே

## 8. திருமகள்

52 செங்கமலப் பொலந்தாதிற் றிகழ்ந்தொளிரு
மெழின்மேனித் திருவே வேலை
யங்கணுல கிருடுரக்கு மலர்கதிராய்
வெண்மதியா யமரர்க் கூட்டும்
பொங்கழலா யுலகளிக்கும் பூங்கொடியே
நெடுங்கானிற் பொருப்பின் மண்ணில்
எங்குளை நீ யவணன்றே மல்லல்வளஞ்
சிறந்தோங்கி யிருப்ப தம்மா

53 உலகம் புரக்கும் பெருமான்தன்
உளத்தும் புயத்தும் அமர்ந்தருளி
உவகை யளிக்கும் பேரின்ப
உருவே எல்லாம் உடையாளே

திலகம் செறிவாள் நுதற்கரும்பே
தேனே கனிந்த செழுங்கனியே
தெவிட்டாது அன்பர் உளத்துள்ளே
தித்தித் தெழுமோர் தெள்ளமுதே

மல கஞ்சுகத்தேற்கு அருள் அளித்த
வாழ்வே என்கண் மணியேஎன்
வருத்தந் தவிர்க்க வருங்குருவாம்
வடிவே ஞான மணிவிளக்கே

சல கந்தரம்போல் கருணைபொழி
தடங்கண் திருவே கண்ணமங்கைத்
தாயே சரணம் சரணம் இது
தருணம் கருணை தருவாயே.

## 9. சுப்பிரமணியர்

54 நங்க டம்பனைப் பெற்றவள் பங்கினன்
தென்க டம்பைத் திருக்கரக் கோயிலான்
தன்க டன்அடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே

55 சமர சூரபன் மாவைத் தடிந்தவேற்
குமரன் தாதைநற் கோழம்ப மேவிய
அமரர் கோவினுக் கன்புடைத் தொண்டர்கள்
அமர லோகம தாள்வுடை யார்களே

56 மூவிரு முகங்கள் போற்றி முகம்பொழி கருணை போற்றி
ஏவருந் துதிக்க நின்ற விராறுதோள் போற்றி காஞ்சி
மாவடி வைகுஞ் செவ்வேண் மலரடி போற்றி யன்னான்
சேவலு மயிலும் போற்றி திருக்கைவேல் போற்றி
[போற்றி.

57 எந்தாயும் எனக்கு அருள் தந்தையும் நீ
சிந்தாகுலம் ஆனவை தீர்த்து எனையாள்
கந்தா கதிர்வேலவனே ! உமையாள்
மைந்தா ! குமரா ! மறை நாயகனே !

58 இல்லறத்தான் அல்லேன்
இயற்கைத் துறவியல்லேன்
நல்லறத்து ஞானியல்லேன்
நாயினேன்–சொல்லறத்தின்
ஒன்றேனும் இல்லேன்
உயர்ந்ததிருப் போரூரா
என்றேநான் ஈடேறு வேன்.

59 அன்னைசொற்கு ஒருசெவி ஐயர்சொற்கு ஒருசெவி
அம்மான் துதிக்கு ஒருசெவி
ஆனைசொற்கு ஒருசெவி வீரர் சொற்கு ஒருசெவி
அயன்துதிக்கு ஒருசெவிவிண்ணோர்
மன்னர்சொற்கு ஒருசெவி வள்ளிசொற்கு ஒருசெவி
வான்வனிதை சொற்கு ஒருசெவி
மறைதுதிக்கு ஒருசெவி அடியார் சொற்கு ஒருசெவி
வல்லசுரர் சொற்கு ஒருசெவி
பன்னிரண்டுங் கொடுத்து என்சொல்கேளாமல்
பராமுகமதா யிருந்தால்
பாவியேன் மெலிவுகுறை எவர்செவியிலேற்றிப்
படுந்துயர் களைந்துகொள்வேன்
முன்னம்மறை நாலும்வந் துன்னு புள்ளூரனே
முக்கட் குருக்கள் குருவே
முத்தர்குரு வேயோக சித்தர்குருவேபால
முத்துக் குமார குருவே.

## 10. வைரவர்

60 பரமனை மதித்திடாப் பங்க யாசனன்
ஒருதலை கிள்ளியே யொழிந்த வானவர்
குருதியு மகந்தையுங் கொண்டு தண்டமுன்
புரிதரு வடுகனைப் போற்றி செய்குவாம்,

## 11. வீரபத்திரர்

61 அடைந்தவி யுண்டிடு மமரர் யாவரும்
முடிந்திட வெருவியே முனிவர் வேதியர்
உடைந்திட மாமக மொடியத் தக்கனைத்
தடிந்திடு சேவகன் சரணம் போற்றுவோம்.

## 12. திருநந்தி தேவர்

62 அங்கணன் கயிலைகாக் குமகம்படித் தொழின்மை
பூண்டு

நங்குரு மரபுக்கெல்லா முதற்குரு நாத னாகிப்
பங்கயந் துளவநாறும் வேத்திரப் படைபொ றுத்த
செங்கையம் பெருமானந்தி சீரடிக் கமலம்போற்றி.

63 கரநான்குங் கறைமிடறு மூன்று கண்ணுங்
கங்கைமதிச் சடைமுடியுங் கரங்க டம்மில்
விரவாரை வெல்மழுவு மானுமிக்க
விரற்சுரிகை பொற்பிரம்பும் விளங்கி யோங்க
அரனார்தம் அருளதனாற் பெற்றே நாளு
மபரபர மேசுரனென் றறைய வுண்டாய்த்
திரமேவு திருநந்தி தேவன் பொற்றாள்
சிந்தையினுஞ் சிரத்தினுலுஞ் சேர்த்தல் செய்வாம்

## 13. சமயாச்சாரியார்

64 பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன்
கழல்போற்றி
ஆழிமிசைக் கன்மிதப்பி லணைந்தபிரா னடிபோற்றி
வாழிதிரு நாவலூர் வன்றொண்டர் பதம்போற்றி
ஊழிமலி திருவாதவூரர்திருத் தாள்போற்றி.

1. திருஞானசம்பந்தர்:-

65 வேதநெறி தழைத்தோங்க
மிகுசைவத் துறைவிளங்கப்
பூதபரம் பரைபொலியப்
புனிதவாய் மலர்ந்தழுத

சீதவள வயற்புகலித்
திருஞான சம்பந்தர்
பாதமலர் தலைக்கொண்டு
திருத்தொண்டு பரவுவாம்.

2. திருநாவுக்கரசர்:-

66. இடையருப் பேரன்பு மழைவாரு
மிணைவிழியு முழவா ரத்திண்
படையருத் திருக்கரமுஞ் சிவபெருமான்
றிருவடிக்கே பதித்த நெஞ்சும்
நடையருப் பெருந் துறவும் வாகீசப்
பெருந்த கைதன் ஞானப் பாடற்
றொடையருச் செவ்வாயுஞ் சிவவேடப்
பொலிவழகுந் துதித்து வாழ்வாம்.

3. சுந்தரர்:-

67 வறந்திடு பொய்கை முன்னிரம்ப மற்றவண்
உறைந்திடு முதலைவந் துதிப்ப வன்னதால்
இறந்திடு மகன்வளர்ந் தெய்தப் பாடலொன்
றறைந்திடு சுந்தர னடிகள் போற்றுவாம்.

4. மாணிக்கவாசகர்:-

68 பெருந்துறையிற் சிவபெருமா னருளுதலும்
பெருங்கருணைப் பெற்றி நோக்கிக்
கரைந்துகரைந் திருகண்ணீர் மழைவாரத்
துரியநிலை கடந்து போந்து
திருந்துபெருஞ் சிவபோகக் கொழுந்தேறல்
வாய்மடுத்துத் தேக்கிச் செம்மாந்
திருந்தருளும் பெருங்கீர்த்தி வாதவூ
ரடிகளடி யிணைகள் போற்றி.

## 14. அறுபத்துமூவர்

69 தத்து முதையின் மூன்றுந் தழலெழ
முத்து மூரன் முகிழ்த்த நிராமய
சித்து மூர்த்திதன் றாளிணை சோறு
பத்து மூவர் பதமலர் போற்றுவாம்.

## 15. சண்டேசுரர்

70 பொன்னங் கடுக்கை முடிவேய்ந்தபுனிதற்
கமைக்கும் பொருளன்றி
மின்னுங் கலனு டைகள்பிறவும் வேறு
தனக்கென் றமையாமே
மன்னுந் தலைவன்பூ சனையின் மல்கும்
பயனை யடியார்கள்
துன்னும்படி பூசனை கொள்ளுந் தூயோனடித்
தாமரை தொழுவாம்.

71 தாதையத் தாளற வீசிய சண்டிக்கிவ்
அண்டத்தொடு முடனே
பூதலத் தோரும் வணங்கபொற் கோயிலும்
போனகமும் அருளிச்,
சோதி மணிமுடித் தாமமும் நாமமும்
தொண்டர்க்கு நாயகமும்,
பாதகத் துக்குப் பரிசுவைத் தானுக்கே
பல்லாண்டு கூறுதுமே.

## 16. சாந்தனுச்சாரியார்

### அகச்சந்தானகுரவர்

72 அருட்குழக ரெழிற்கயிலை முழுக்காவல் நந்திபிரான்
அடிகள் போற்றி
தெருட்சிபெறு மனக்கமல சனற்குமர முனிவன் இரு
திருத்தாள் போற்றி
இருட்டுமலத் தகல்சத்ய ஞானதரி சனிசரண
இணைகள் போற்றி
மருட்சியறு பரஞ்சோதி யருஞ்சில குருபரன்கால்
மலர்கள் போற்றி.

### புறச்சந்தான குரவர்

73 ஈராண்டிற் சிவஞானம் பெற்றுயர்ந்த மெய்கண்டார்
இணைத்தாள் போற்றி
நாராண்ட பல்லடியார்க் கருள்புரிந்த அருணந்தி
நற்றுள் போற்றி

நீராண்ட கடந்தைநகர் மறைஞான சம்பந்தர்
நிழற்ருள் போற்றி
சீராண்ட தில்லைநகர் உமாபதியார் செம்பதுமத்
திருத்தாள் போற்றி.

### 1. மெய்கண்ட சிவாச்சாரியார்

74 நற்றமி ழாற்சிவ ஞான போதநூல்
சொற்றுயிர்க் கியல்பதாம் சுகோத யந்தரக்
கற்றவன் வெண்ணெய்மெய் கண்ட தேதிகன்
கொற்றமார் குரைகழல் குழைந்து போற்றுவாம்.

### 2. அருள்நந்தி சிவாச்சாரியார்

75 புன்நெறி அகற்றிய போத சூத்திரத்து
இந்நெறி விளக்கநூல் இலங்கச் செய்துமே
நன்நெறி காட்டருள் நந்தி தேசிகன்
தன்இரு பங்கய சரணம் போற்றுவாம்.

### 3. மறைஞானசம்பந்த சிவாச்சாரியார்

76 திருவளருஞ் சாமமறை திகழ்பார சரன்மரபோன்
விரசுனர்பான் மறையுணர்வு விரிந்தொளிரப்
புணர்த்துவோன்
மருதமொடு கடந்தையையாள் மறைஞான சம்பந்த
குருமணிதன் மருமலர்த்தாள் குறித்துருகிப் பரசிடுவாம்

### 4. உமாபதி சிவாச்சாரியார்

77 அடியார்க் கெளியன் எனத்தில்லை
யண்ணல் அருளுந் திருமுகத்தின்
படியே பெற்ருன் சாம்பாற்குப்
பரம முத்தி அப்பொழுதே
உடலுங் கரைவுற் றடைந்திடுவான்
உயர்தீக் கையினை அருள்நோக்காற்
கடிதிற் புரிகொற் றங்குடியார்
கமல மலரின் கழல்போற்றி.

## நமசிவாய தேசிகர்

78 கயிலாய பரம்பரையிற் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணெய்
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பானு வாகிக்
குயிலாரும் பொழில்திருவா வடுதுறைவாழ்
குருநமச்சி வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் திருமரபு
நீடூழி தழைக மாதோ.

79 பண்ணிசைவெம் பரிதிமதி திலதயிலம்
தீயிரும்பு பாணி யுப்பு
விண்ணநில முடலுயிர் நீர் நிழலுச்சிப்
பளிங்குபகல் விளக்குப் பானீர்
கண்ணிரவி யுணர்வொளிபோற் பிரிவரிய
அத்துவிதக் கலவி காட்டித்
தண்ணளிவைத் தெனையாண்ட துறைசைநமச்
சிவாயகுரு சரணம் போற்றி

80 அரணங்கள் மூன்றும் எரித்தாய்சரணம் அதினுமன்பர்
மரணம்படாது அருள்வைத்தாய் சரணம் வலியஅந்தக்
கரணங்களான் மெலிந்து எய்த்தேன் சரணம் நின்
பொற்கழலே
சரணம் தென் கோமுத்தி முத்தி பஞ்சாக்கர
சற்குருவே!

## ஞானப்பிரகாச தேசிகர்

81 இருந்தமிழ்ப் புலவர் உய்வான் இபவன மழவை
யென்னுந்
திருந்துசீர்த் தலபுராணத் தெள்ளமு தளித்த செல்வப்
பெரும்புகழ்க் கமலஞானப் பிரகாசனெனும்பேர் பெற்ற
அருங்கலைத் திரையுருத அருட்கடற்கு அன்பு
செய்வாம்.

## 17. சரசுவதி

82 சொல்விற் பனமும் அவதான
முங்கல்வி சொல்லவல்ல
நல்வித்தை யுந்தத் தடிமைகொள்
வாய்;நளி னுசனஞ்சேர்
செல்விக் கரிதென் றெருகால
முஞ்சிதை யாமைநல்கும்
கல்விப் பெருஞ்செல்வப் பேறே!
சகல கலாவல்லியே!

## 18. பல்லாண்டும் வாழ்த்தும்

83 மன்னுக தில்லை வளர்கநம் பத்தர்கள்
வஞ்சகர் போயகலப்,
பொன்னின்செய் மண்டபத்துள்ளே புகுந்து
புவனியெல்லாம் விளங்க,
அன்னநடை மடவாள் உமைகோன்
அடியோமுக் கருள்புரிந்து,
பின்னைப்பிறவி யறுக்க நெறி தந்த
பித்தற்குப் பல்லாண்டு கூறுதுமே.

84 வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயது எல்லாம் அரன்நாமமே
சூழ்க வையகமும் துயர் தீர்கவே.

85 வான்முகில் வாழாது பெய்க
மலிவளம் சுரக்க மன்னன்
கோன்முறை அரசு செய்க
குறைவிலாது உயிர்கள் வாழ்க
நான்மறை அறங்கள் ஓங்க
நற்றவம் வேள்வி மல்க
மேன்மைகொள் சைவ நீதி
விளங்குக உலகம் எல்லாம்.

## 19. பஞ்சபூதத்தலங்கள்

### 1. திரு ஆரூர். (பிருதிவி-மண்)

86 கற்றவர்க ளுண்ணுங் கனியே போற்றி
கழலடைந்தார் செல்லுங் கதியே போற்றி
அற்றவர்கட் காரமுத மானாய் போற்றி
யல்லலறுத் தடியேனை யாண்டாய் போற்றி
மற்றொருவ ரொப்பில்லா மைந்தா போற்றி
வானவர்கள் போற்று மருந்தே போற்றி
செற்றவர்தம் புரமெரித்த சிவனே போற்றி
திருமூலட்டானனே போற்றி போற்றி.

### 2. திருவானைக்கா (அப்பு-நீர்)

87 தார மாகிய பொன்னித்
தண்டுறை யாடி விழுத்தும்
நீரி னின்றடி போற்றி
நின்மலா கொள்ளென வாங்கே
ஆரங் கொண்டவெம் மானைக்
காவுடை யாதியை நாளும்
ஈர முள்ளவர் நாளும்
எம்மையு மாளுடை யாரே.

88 ஆழி யாற்கரு ளானைக்
காவுடை யாதிபொன் னடியின்
நீழ லேசர ணாக
நின்றருள் கூர நினைந்து
வாழ வல்லவன் றொண்டன்
வண்டமிழ் மாலைவல் லார்போய்
ஏழு மாபிறப் பற்று
எம்மையு மாளுடை யாரே.

### 3. திருவண்ணாமலை (தேயு-தீ)

89 உண்ணாமுலை யுமையாளொடு முடனாகிய வொருவன
பெண்ணாகிய பெருமான்மலை திருமாமணி திகழ
மண்ணார்ந்தன வருவித்திரண் மழலைம் முழவதிரும்
அண்ணாமலை தொழுவார்வினை வழுவாவண்ண மறுமே.

### 4. திருக்காளத்தி (வாயு-காற்று)

90 மனத்தகத்தான் றலைமேலான் வாக்கி னுள்ளான்
வாயாரத் தன்னடியே பாடுந் தொண்டர்
இனத்தக்கத்தா னிமையவர்தஞ் சிரத்தின் மேலா
னேழண்டத் தப்பாலா னிப்பாற் செம்பொன்
புனத்தகத்தார் நறுங்கொன்றைப் போதி னுள்ளான்
பொருப்பிடையா னெருப்பிடையான் காற்றி
னுள்ளான்.
கனத்தகத்தான் கயிலாயத் துச்சி யுள்ளான்
காளத்தி யானவனென் கண்ணு ளானே.

### 5. கோயில்-சிதம்பரம் (ஆகாயம்-வெளி)

91 உடையா ளுன்ற னடுவிருக்கு
முடையா ணடுவு ணீயிருத்தி
அடியே னடுவு ளிருவீரு
மிருப்ப தானு லடியேனுன்
னடியார் நடுவு ளிருக்குமரு
ளைப்புரி யாப்பொன் னம்பலத்தெம்
முடியா முதலே யென் கருத்து
முடியும் வண்ண முன்னின்றே.

## 20. சப்தவிடங்கத் தலங்கள்

### 1. திருவாரூர் (வீதிவிடங்கர்) (அசபா நடனம்)

92 தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்
திருநீல கண்டத்துக் குயவனுர்க் கடியேன்
இல்லையே என்னுத இயற்பகைக்கும் அடியேன்
இளையான்றன் குடிமாறன் அடியார்க்கு மடியேன்
வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக் கடியேன்
விரிபொழில்சூழ் குன்றையான்விறன்மிண்டர்க்
(கடியேன்
அல்லிமென் முல்லையந்தார் அமர்நீதிக் கடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே.

2. திருக்காருயில் (ஆதிவிடங்கர்) (குக்குடநடனம்)

93 தாயானே தந்தையு மாகிய தன்மைகள்
ஆயானே யாயநல் லன்பர்க் கணியானே
சேயானே சீர்திக ழுந்திருக் காருயில்
மேயானே யென்பவர் மேல்வினை மேவாவே.

3. திருக்கோளிலி (அவனிவிடங்கர்) (பிருங்கநடனம்)

94 நாளாய போகாமே நஞ்சனியுங் கண்டனுக்கு
ஆளாய அன்புசெய்வோ மடனெஞ்சே யரனுமம்
கேளாய்நங் கிளைகிளைக்குங் கேடுபடாத் திறமருளிக்
கோளாய நீக்குமவன் கோளிலியெம் பெருமானே.

4. திருநள்ளாறு (நகவிடங்கர்) (உன்மத்த நடனம்)

95 ஆதிக்க ணுன்முகத்தி லொன்று சென்று
வல்லாத சொல்லுரைக்கத் தன்கை வாளால்
சேதித்த திருவடியைச் செல்ல நல்ல
சிவலோக நெறிவகுத்துக் காட்டுவானை
மாதிமைய மாதொருகூ ருயி னானை
மாமலர்மே லயனோடு மாலுங் காணு
நாதியை நம்பியை நள்ளாற்றானை
நானடியே னினைக்கப்பெற் றுய்ந்த வாறே.

5. திருநாகைக்காரோணம் (சுந்தரவிடங்கர்)
(தரங்கநடனம்)

96 நெடியானு மலரவனு நேடி யாங்கே
நேருருவம் காணுமே சென்று நின்ற
படியானைப் பாம்புரமே காத லானைப்
பாம்பரையோ டார்த்த படிறன் றன்னைச்
செடிநாறும் வெண்டலையில் பிச்சைக் கென்று
சென்றானை நின்றியூர் மேயான் றன்னைக்
கடிநாறு பூஞ்சோலை யந்த ணாகைக்
காரோணத் தென்றான்றும் காண லாமே.



காவிரிப்பூம்பட்டினம் (மேலையூர்)
தாசில் பண்ணை
திரு. K. S. ராமலிங்கம் பிள்ளை அவர்கள்



காவிரிப்பூம்பட்டினம் (மேலையூர்) தாசில் பண்ணை
திரு. சீனுவாசம் பிள்ளை அவர்களின் திருமகள்
திரு. K. S. ராமலிங்கம் அவர்களின் துணைவியார்
திருமதி. கௌரியம்மாள் அவர்கள்

6. திருவாய்மூர் (நீலவிடங்கர்) (கமலநடனம்)

97 தளிரிளவளரென வுமைபாடத்
தாளம்மிடவோர் கழல்வீசிக்
கிளரிளமணியர வரையார்த்
தாடும்வேடக் கிறிமையார்
விளரிளமுலையவர்க் கருணல்கி
வெண்ணீறணிந்தோர் சென்னியின்மேல்
வளரிளமதியமொ டிவராணீர்
வாய்மூரடிகள் வருவாரே

7. திருமறைக்காடு (புவனவிடங்கர்) (ஹம்சநடனம்)

98 தூண்டு சுடரனைய சோதி கண்டாய்
தொல்லமரர் சூளா மணிதான் கண்டாய்
காண்டற் கரிய கடவுள் கண்டாய்
கருதுவார்க் காற்ற வெளியான் கண்டாய்
வேண்டுவார் வேண்டுவதே ஈவான் கண்டாய்
மெய்ந்நெறி கண்டாய் விரத மெல்லாம்
மாண்ட மனத்தார் மனத்தான் கண்டாய்
மறைக்காட் டுறையு மணாளன் றானே.

## 21. அட்டவீரட்டத் தலங்கள்

1. திருக்கண்டியூர் வீரட்டம் (பிரமன் சிரம் கொய்தது)

99 இயலுமாறெனக் கியம்புமின்னிறை
வன்னுமாய்நின்ற செய்கையைக்
கயனெடுங்கண்ணி ணர்கடாம்பொலி
கண்டியூருறை வீரட்டன்
புயல்பொழிந்திழி வானுளோர்களுக்
காகவன்றயன் பொய்ச்சிரம்
அயனகவ்வ தரிந்துமற்றதி
லூனுகந்த வருத்தியே.

## 2. திருக்கோவலூர் வீரட்டம்

## (அந்தகனைச் சம்ஹரித்தது)

100 செத்தையேன் சிதம்ப நாயேன் செடியேனே னழுக்குப்
பாயும்
பொத்தையே போற்றிநாளும் புகலிட மறியமாட்டேன்
எத்தைநான் பற்றிநிற்கேன் இருளற நோக்கமாட்டாக்
கொத்தையேன் செய்வதென்னே கோவல்வீ
ரட்டனீரே.

## 3. திருஅதிகை வீரட்டம் (முப்புரம் எரித்தது)

101 எல்லாஞ் சிவனென்ன நின்றாய் போற்றி
யெரிசுடராய் நின்ற விறைவா போற்றி
கொல்லார் மழுவாட் படையாய் போற்றி
கொல்லுங் கூற்றொன்றை யுதைத்தாய் போற்றி
கல்லாதார் காட்சிக் கரியாய் போற்றி
கற்றா ரிடும்பை களைவாய் போற்றி
வில்லால் வியனரண மெய்தாய் போற்றி
வீரட்டங் காதல் விமலா போற்றி.

## 4. திருப்பறியலூர் வீரட்டம்

## (தட்சன் தலையை வெட்டியது)

102 விளங்கொண் மலர்மே லயனோத வண்ணன்
துளங்கும் மனத்தார் தொழுத்தழ லாய்நின்றான்
இளங்கொம் பனாளோ டிணைந்தும் பிணைந்தும்
விளக்குந் திருப்பறியல் வீரட்டத் தானே.

## 5. திருவிற்குடி வீரட்டம் (சலந்தரனைச் சம்ஹரித்தது)

103 வடிகொண் மேனியர் வா னமாமதியினர்
நதியினர் மதுவார்ந்த
கடிகொள் கொன்றையஞ் சடையினர்
கொடியின ருடைபுலிய தளார்ப்பர்
விடையதேறு மெம்மானமர்ந் தினிதுறை
விற்குடி வீரட்டம்
அடியராகிநின் றேத்தவல் லார்தமை
யருவினை யடையாவே.

6. திருவழுவூர் வீரட்டம் (யானையை உரித்தது)

7. திருக்குறுக்கை வீரட்டம் (காமனை எரித்தது)

104 சிலந்தியு மானைக்காவிற் றிருநிழற் பந்தர்செய்து
உலந்தவ ணிறந்தபோதே கோச்செங்க ணுனுமாகக்
கலந்தநீர்க் காவிரிசூழ் சோணுட்டுச் சோழர் தங்கள்
குலந்தனிற் பிறப்பித்திட்டார் குறுக்கைவீ ரட்டனுரே.

8. திருக்கடவூர் வீரட்டம் (எமனை உதைத்தது)

105 மருட்டுயர் தீரவன் றர்ச்சித்த மாணிமார்க் கண்டேயற்காய்
இருட்டிய மேனி வளைவா ளெயிற்றெரி போலுங்குஞ்சிச்
சுருட்டிய நாவில்வெங் கூற்றம் பதைப்ப வுதைத்துங்ஙனே
உருட்டிய சேவடி யான் கடவூருறை யுத்தமனே.

## 22. பஞ்ச சபைகள்

### 1. திருவாலங்காடு (இரத்தின சபை)

106 கூடினு ருமைதனேடே குறிப்புடை வேடங்கொண்டு
சூடினுர் கங்கையாளைச் சுவறிடு சடையர்போலும்
பாடினுர் சாமவேதம் பைம்பொழில் பழனமேயார்
ஆடினுர் காளிகாண ஆலங்காட் டடிகளாரே.

### 2. சிதம்பரம் (கோயில்) பொற் சபை

107 குனித்த புருவமும் கொவ்வைச்
செவ்வாயிற் குமிண்சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போன்
மேனியிற் பால் வெண்ணீறும்
இனித்த முடைய வெடுத்தபொற்
பாதமுங் காணப் பெற்ருல்
மனித்தப் பிறவியும் வேண்டுவதே
யிந்தமா நிலத்தே.

### 3. மதுரை (வெள்ளிச் சபை)

108 முளைத்தானை யெல்லார்க்கு முன்னே தோன்றி
முதிருஞ் சடைமுடிமேன் முகிழ்வெண் டிங்கள்
வளைத்தானை வல்லசுரர் புரங்கண் மூன்றும்
வரைசிலையா வாசுகிமா நாணுக் கோத்துத்

துளைத்தானைச் சுடுசரந்தாற் றுவள நீருத்
தூமுத்த வெண்முறுவ லுமையோ டாடித்
திளைத்தானை தென்கூடற் றிருவா லவாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றே னானே.

4. திருநெல்வேலி (தாமிர சபை)

109 மருந்தவை மந்திர மறுமைநன்
னெறியவை மற்று மெல்லாம்
அருந்துயர் கெடுமவர் நாமமே
சிந்தைசெய் நன்னெஞ் சமே
பொருந்துதண் புறவினிற் கொன்றைபொன்
சொரிதரத் துன்றுபைம்பூம்
செருந்திசெம் பொன்மலர் திருநெல்வே
லியுறை செல்வர் தாமே.

5. திருக்குற்றாலம் (சித்திரசபை)

110 வம்பார் குன்றந் நீடுயர் சாரல் வளர்வேங்கைக்
கொம்பார்சோலைக் கோலவண்டியாழ்செய் குற்றாலம்
அம்பானெய்யோ டாடலமர்ந்தா னலர்கொன்றை
நம்பான்மேய நன்னகர்போலுந் நமரங்காள்.

## 22. பிற

### 1. திருவாசகம்

111 நமச்சிவாய வாஅழ்க நாதன்தாள் வாழ்க
இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான்
தாள்வாழ்க
கோகழி யாண்ட குருமணிதன் தாள்வாழ்க
ஆகமம் ஆகிநின் றண்ணிப்பான் தாள்வாழ்க
ஏகன் அனேகன் இறைவ னடிவாழ்க
வேகங் கெடுத்தாண்ட வேந்த னடிவெல்க
பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்தன் பெய்கழல்கள் வெல்க
புறத்தார்க்குச் சேயோன்தன் பூங்கழல்கள் வெல்க
கரங்குவிவார் உள்மகிழுங் கோன்கழல்கள் வெல்க
சிரங்குவிவார் ஓங்குவிக்குஞ் சீரோன் கழல்வெல்க
ஈசனடிபோற்றி யெந்தையடி போற்றி

தேச னடிபோற்றி சிவன்சே வடிபோற்றி
நேயத்தே நின்ற நிமல னடி போற்றி
மாயப் பிறப்பறுக்கும் மன்ன னடிபோற்றி
சீரார் பெருந்துறைநம் தேவ னடிபோற்றி
ஆராத இன்பம் அருளுமலை போற்றி
சிவனவனென் சிந்தையுள் நின்ற அதனுல்
அவனரு ளாலே அவன்தாள் வணங்கிச்
சிந்தை மகிழச் சிவபுரா ணந்தன்னை
முந்தை வினைமுழுதும் ஓய உரைப்பனியான்
கண்ணுதலான் தன்கருணைக் கண்காட்ட வந்தெய்தி
எண்ணுதற் கெட்டா எழிலார் கழலிறைஞ்சி
விண்ணிறைந்து மண்ணிறைந்து மிக்காய்
விளங்கொளியாய்

எண்ணிறந் தெல்லை யிலாதானே நின்பெருஞ்சீர்
பொல்லா வினையேன் புகழுமா றென்றறியேன்
புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராயப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றஇத் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்
மெய்யேஉன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்
உய்யஎன் உள்ளத்துள் ஓங்கார மாய்நின்ற
மெய்யா விமலா விடைப்பாகா வேதங்கள்
ஐயா எனவோங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே
வெய்யாய் தணியாய் இயமான னும்விமலா
பொய்யா யினவெல்லாம் போயகல வந்தருளி
மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே
எஞ்ஞானம் இல்லாதேன் இன்பப் பெருமானே
அஞ்ஞானம் தன்னை அகல்விக்கும் நல்லறிவே
ஆக்கம் அளவிறுதி யில்லாய் அனைத்துலகும்
ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருள்தருவாய்
போக்குவாய் என்னைப் புகுவிப்பாய் நின்தொழும் பின்
நாற்றத்தின் நேரியாய் சேயாய் நணியானே
மாற்றம் மனங்கழிய நின்ற மறையோனே

கறந்தபால் கன்னலொடு நெய்கலந் தாற்போலச்
சிறந்தடியார் சிந்தனையுள் தேனூறி நின்று
பிறந்த பிறப்பறுக்கும் எங்கள் பெருமான்
நிறங்களோ ரைந்துடையாய் விண்ணோர்க ளேத்த
மறைந்திருந்தாய் எம்பெருமான் வல்வினையேன் தன்னை
மறைந்திட மூடிய மாய இருளை
அறம்பாவம் என்னும் அருங்கயிற்றாற் கட்டிப்
புறந்தோல் போர்த்தெங்கும் புழு அழுக்கு மூடி
மலஞ்சோரும் ஒன்பது வாயிற் குடிலை
மலங்கப் புலனைந்தும் வஞ்சனையைச் செய்ய
விலங்கு மனத்தால் விமலா உனக்குக்
கலந்த அன் பாகிக் கசிந்துள் ளுருகும்
நலந்தான் இலாத சிறியேற்கு நல்கி
நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காட்டி
நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்குத்
தாயிற் சிறந்த தயாவான தத்துவனே
மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே
தேசனே தேனார் அமுதே சிவபுரனே
பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனே
நேச அருள்புரிந்து நெஞ்சில்வஞ் சங்கெடப்
பேராது நின்ற பெருங்கருணைப் பேராறே
ஆரா அமுதே அளவிலா பெம்மானே
ஓராதார் உள்ளத் தொளிக்கும் ஒளியானே
நீராய் உருக்கியென் ஆருயிராய் நின்றானே
இன்பமும் துன்பமும் இல்லானே உள்ளானே
அன்பருக் கன்பனே யாவையுமாய் அல்லையுமாம்
சோதியனே துன்னிருளே தோன்றாப் பெருமையனே
ஆதியனே அந்தம் நடுவாகி அல்லானே
ஈர்த்தென்னை யாட்கொண்ட எந்தை பெருமானே
கூர்த்தமெய்ஞ் ஞானத்தாற் கொண்டுணர்வார் தங்கருத்தின்
நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணர்வே
போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே
காக்குமெங் காவலனே காண்பரிய பேரொளியே
ஆற்றின்ப வெள்ளமே அர்த்தாமிக் காய்நின்ற
தோற்றச் சுடரொளியாய்ச் சொல்லாத நுண்ணுணர்வாய்

மாற்றமாம் வையகத்தின் வெவ்வேறே வந்தறிவாம்
தேற்றனே தேற்றத் தெளிவேயென் சிந்தனையுள்
ஊற்றான உண்ணா ரமுதே உடையானே
வேற்று விகார விடக்குடம்பி னுட்கிடப்ப
ஆற்றேனெம் ஐயா அரனேயோ என்றென்று
போற்றிப் புகழ்ந்திருந்து பொய்கெட்டு மெய்யானார்
மீட்டிங்கு வந்து வினைப்பிறவி சாராமே
கள்ளப் புலக்குரம்பை கட்டழிக்க வல்லானே
நள்ளிருளில் நட்டம் பயின்றாடு நாதனே
தில்லையுட் கூத்தனே தென்பாண்டி நாட்டானே
அல்லற் பிறவி அறுப்பானே யோஎன்று
சொல்லற் கரியானைச் சொல்லித் திருவடிக்கீழ்ச்
சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தி னுள்ளார் சிவனடிக்கீழ்ப்
பல்லோரு மேத்தப் பணிந்து.

## 23. கோளறு பதிகம்

112 வேயுறு தோளிபங்கன் விடமுண்ட கண்டன்
மிகநல்ல வீணை தடவி
மாசறு திங்கள் கங்கை முடிமே லணிந்தென்
உளமே புகுந்த அதனால்
ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழன்வெள்ளி
சனிபாம் பிரண்டும் உடனே
ஆசறு நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே.

113 என்பொடு கொம்பொ டாமை இவைமார் பிலங்க
எருதேறி ஏழை யுடனே
பொன்பொதி மத்த மாலை புனல்சூடி வந்தென்
உளமே புகுந்த அதனால்
ஒன்பதொ டொன்றொடேழு பதினெட்டொடாறும்
உடனாய நாள்க ளவைதாம்
அன்பொடு நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே.

114 உருவளர் பவளமேனி ஒளிநீ றணிந்து
உமையோடும் வெள்ளை விடைமேல்
முருகலர் கொன்றை திங்கள் முடிமே லணிந்தென்
உளமே புகுந்த அதனல்
திருமகள் கலைய தூர்தி செயமாது பூமி
திசைதெய்வ மான பலவும்
அருநெதி நல்லநல்ல அவை நல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே.

115 மதிநுதல் மங்கையோடு வடவா லிருந்து
மறையோது மெங்கள் பரமன்
நதியொடு கொன்றை மாலை முடிமே லணிந்தென்
உளமே புகுந்த அதனல்
கொதியுறு காலன் அங்கி நமனேடு தூதர்
கொடுநோய்க ளான பலவும்
அதிகுண நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே.

116 நஞ்சணி கண்டன் எந்தை மடவாள்த னேடும்
விடையேறும் நங்கள் பரமன்
துஞ்சிருள் வன்னி கொன்றை முடிமே லணிந்தென்
உளமே புகுந்த அதனல்
வெஞ்சின அவுணரோடும் உரும்இடியும் மின்னும்
மிகையான பூத மவையும்
அஞ்சிடும் நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே.

117 வாள்வரி அதள தாடை வரிகோவ ணத்தர்
மடவாள் தனேடும் உடனய்
நாண்மலர் வன்னி கொன்றை நதிசூடி வந்தென்
உளமே புகுந்த அதனல்
கோளரி உழுவை யோடு கொலையானை கேழல்
கொடுநாக மோடு கரடி
ஆளரி நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே.



காவிரிப்பூம்பட்டினம் (மேலையூர்) தாசில் பண்ணை
திரு. K. S. இராமலிங்கம் அவர்கள் இராஜராஜேசுவரி யந்திரத்திற்குப் பூசை செய்தல்

118 செப்பிள முலைநன் மங்கை ஒருபாகம் ஆக
விடையேறு செல்வன் அடைவார்
ஒப்பிள மதியும் அப்பும் முடிமே லணிந்தென்
உளமே புகுற்த அதனல்
வெப்பொடு குளிரும் வாத மிகையான பித்தும்
வினையான வந்து நலியா
அப்படி நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே.

119 வேள்பட விழிசெய் தன்று விடைமேல் இருந்து
மடவாள் தனேடும் உடனய்
வான்மதி வன்னி கொன்றை மலர்சூடி வந்தென்
உளமே புகுந்த அதனல்
ஏழ்கடல் சூழி லங்கை அரையன்ற னேடும்
இடரான வந்து நலியா
ஆழ்கடல் நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே

120 பலபல வேடமாகும் பரன்நாரி பாகன்
பசுவேறும் எங்கள் பரமன்
சலமக ளோடெருக்கும் முடிமேலணிந்தென்
உளமே புகுந்த அதனல்
மலர்மிசை யோனும் மாலும் மறையொடு தேவர்
வருகால மான பலவும்
அலைகடல் மேரு நல்ல அவை நல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே.

121 கொத்தலர் குழலி யோடு விசையற்கு நல்கு
குணமாய வேட விகிர்தன்
மத்தமும் மதியும் நாகம் முடிமே லணிந்தென்
உளமே புகுந்த அதனல்
புத்தரொ டமணை வாதில் அழிவிக்கும் அண்ணல்
திருநீறு செம்மை திடமே
அத்தகு நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே

122 தேனமர் பொழில்கொ ளாலை விளைசெந்நெல் துன்னி
வளர் செம்பொ னெங்கும் நிகழ
நான்முக னாதி யாய பிரமா புரத்து
மறைஞான ஞான முனிவன்
தானுறு கோளும் நாளும் அடியாரை வந்து
நலியாத வண்ணம் உரைசெய்
ஆனசொன் மாலை ஓதும் அடியார்கள் வானில்
அரசாள்வர் ஆணை நமதே.

## 24. இடர் களையும் பதிகம்

123 மறையுடையாய் தோலுடையாய் வார்சடைமேல்
வளரும்
பிறையுடையாய் பிஞ்ஞகனே என்றுனைப்பே
சினல்லால்
குறையுடையார் குற்றம்ஓராய் கொள்கையினா
லுயர்ந்த
நிறையுடையார் இடர்களையாய் நெடுங்களமே
யவனே.

124 கனைத்தெழுந்த வெண்டிரைசூழ் கடலிடைநஞ்
சுதன்னைத்
தினைத்தனையா மிடற்றில்வைத்த திருந்தியதே
வநின்னை
மனத்தகத்தோர் பாடலாடல் பேணியிராப் பகலும்
நினைத்தெழுவார் இடர்களையாய் நெடுங்களமே
யவனே.

125 நின்னடியே வழிபடுவான் நிமலாநினைக் கருத
என்னடியான் உயிரைவவ்வேல் என்றடற்கூற்
றுதைத்த
பொன்னடியே பரவிநாளும் பூவொடுநீர் சுமக்கும்
நின்னடியார் இடர்களையாய் நெடுங்களம்மே
யவனே.

126 மலைபுரிந்த மன்னவன்றன் மகளையோர்பால்
மகிழ்ந்தாய்
அலைபுரிந்த கங்கைதங்கும் அவிர்சடைஆரூரா
தலைபுரிந்த பலிமகிழ்வாய் தலைவநின்தாள் நீழற்கீழ்
நிலைபுரிந்தார் இடர்களையாய் நெடுங்களம்மே
யவனே.

127 பாங்கினல்லார் படிமஞ்செய்வார் பாரிடமும் பலிசேர்
தூங்கிநல்லார் பாடலோடு தொழுகழலே வணங்கித்
தாங்கிநில்லா அன்பினோடுந் தலைவநின் தாள்
நிழற்கீழ்
நீங்கிநில்லார் இடர்களையாய் நெடுங்களமேயவனே.

128 விருத்தனாகிப் பாலனாகி வேதமோர்நான் குணர்ந்து
கருத்தனாகிக் கங்கையாளைக் கமழ்சடைமேற்
கரந்தாய்
அருத்தனாய ஆதிதேவன் அடியிணையே பரவும்
நிருத்தர்கீதர் இடர்களையாய் நெடுங்களம்மே
யவனே.

129 கூறுகொண்டாய் மூன்றுமொன்றாக் கூட்டியோர்
வெங்கணையால்
மாறுகொண்டார் புரமெரித்த மன்னனே கொடிமேல்.
ஏறுகொண்டாய் சாந்தமீதென் றெம்பெருமான்
அணிந்த
நீறுகொண்டார் இடர்களையாய் நெடுங்களம்மேய
வனே.

130 குன்றினுச்சி மேல்விளங்குங் கொடிமதில்சூ ழிலங்கை
அன்றிநின்ற அரக்கர்கோனை அருவரைக்கீ
ழடர்த்தாய்.
என்றுநல்ல வாய்மொழியால் ஏத்தியிராப் பகலும்
நின்றுநைவார் இடர்களையாய் நெடுங்களம்மே
யவனே

131 வேழவெண் கொம்பு ஒசித்த மாலும் விளங்கி
நான்முகனுஞ்
சூழஎங்கும் நேடஆங்கோர் சோதியுளா கிநின்றாய்
கேழல்வெண்கொம் பணிந்தபெம்மான் கேடிலாப்
பொன்னடியின்
நீழல்வாழ்வார் இடர்களையாய் நெடுங்களம்மே
யவனே.

132 வெஞ்சொல் தஞ்சொல் ஆக்கி நின்ற வேடமிலாச்
சமணும்
தஞ்சமில்லாச் சாக்கியருந் தத்துவம்ஒன் றறியார்
துஞ்சலில்லா வாய்மொழியால் தோத்திரம்நின்
னடியே
நெஞ்சில் வைப்பார் இடர்களையாய் நெடுங்களம்மே
யவனே

133 நீடவல்ல வார்சடையான் மேயநெடுங் களத்தைச்
சேடர்வாழும் மாமறுகிற் சிரபுரக்கோன் நலத்தால்
நாடவல்ல பனுவன்மாலை ஞானசம்பந்தன் சொன்ன
பாடல்பத்தும் பாடவல்லார் பாவம்ப றையுமே.

## 25. உய்வகை வேண்டும் பதிகம்

134 கழுதை குங்குமந் தான்சுமந் தெய்த்தாற்
கைப்பர் பாழ்புக மற்றது போலப்,
பழுது நான்உழன் றுட்டடு மாறிப்
படுசு ழித்தலைப் பட்டனன் எந்தாய்,
அழுது நீஇருந் தென்செய்தி மனனே
அங்க ணாஅர னேஎன மாட்டா
இழுதை யேனுக்கோர் உய்வகை அருளாய்
இடைம ருதுறை எந்தைபி ரானே.

135 நரைப்பு மூப்பொடு பிணிவரும் இன்னே
நன்றி யில்வினை யேதுணிந் தெய்த்தேன்
அரைத்த மஞ்சள தாவதை அறிந்தேன்
அஞ்சி னேன்நம னாரவர் தம்மை
உரைப்பன் நான்உன் சேவடி சேர
உணரும் வாழ்க்கையை ஒன்றறியாத,
இரைப்பனே னுக்கோர் உய்வகை அருளாய்
இடைம ருதுறை எந்தைபி ரானே.

136 புன்னு னைப்பனி வெங்கதிர் கண்டாற்
போலும் வாழ்க்கை பொருள்இலை நாளும்,
என்னெ னக்கினி இற்றைக்கு நாளை
என்றி ருந்திடர் உற்றனன் எந்தாய்,

முன்ன மேஉன் சேவடி சேரா
மூர்க்க ஞகிக் கழிந்தன காலம்,
இன்னம் என்றனக் குய்வகை அருளாய்
இடைம ருதுறை எந்தைபி ரானே.

137 முந்திச் செய்வினை இம்மைக்கண் நலிய
மூர்க்க ஞகிக் கழிந்தன காலம்
சிந்தித் தேமனம் வைக்கவும் மாட்டேன்
சிறுச்சிறி தேஇரப் பார்கட்கொன் றீயேன்
அந்தி வெண்பிறை சூடும்எம் மானே
ஆரூர் மேவிய அமரர்கள் தலைவா,
எந்தை நீஎனக் குய்வகை அருளாய்
இடைம ருதுறை எந்தைபி ரானே.

138 அழிப்பர் ஐவர் புரவுடை யார்கள்
ஐவ ரும்புர வாசற ஆண்டு,
கழித்துக் காற்பெய்து போயின பின்னைக்
கடைமு றைஉனக் கேபொறை ஆனேன்
விழித்துக் கண்டனன் மெய்ப்பொருள் தன்னை
வேண்டேன் மானுட வாழ்க்கைஈ தாகில்,
இழித்தேன் என்றனக் குய்வகை அருளாய்
இடைம ருதுறை எந்தைபி ரானே.

139 குற்றந் தன்னெடு குணம்பல பெருக்கிக்
கோல நுண்ணிடை யாரொடு மயங்கிக்
கற்றி லேன்கலை கள்பல ஞானங்
கடிய ஆயின கொடுமைகள் செய்தேன்;
பற்ற லாவதோர் பற்றுமற் றில்லேன்
பாவி யேன்பல பாவங்கள் செய்தேன்;
ஏற்று ளேன்எனக் குய்வகை அருள்வாய்
இடைம ருதுறை எந்தைபி ரானே.

140 கொடுக்க கிற்றிலேன் ஒன்பொருள் தன்னைக்
குற்றஞ் செற்றம் இவைமுத லாக,
விடுக்க கிற்றிலேன் வேட்கையுஞ் சினமும்
வேண்டில் ஐம்புலன் என்வசம் அல்ல,

நடுக்கம் உற்றதோர் மூப்புவந் தெய்த
நமன்த மர்நர கத்திடல் அஞ்சி,
இடுக்கண் உற்றனன் உய்வகை அருள்வாய்
இடைம ருதுறை எந்தைபி ரானே.

141 ஐவ கையர் ஐயரவ ராகி
ஆட்சி கொண்டொரு காலவர் நீங்கார்,
அவ்வ கையவர் வேண்டுவ தானல்
அவர வர்வழி ஒழுகிநான் வந்து,
செய் வகைஅறி யேன்சிவ லோகா
தீவ ணாசிவ னேஎரி யாடீ,
எவ்வ கைஎனக் குய்வகை அருளாய்
இடை மருதுறை எந்தைபி ரானே.

142 ஏழை மானுட இன்பினை நோக்கி
இளைய வர்வலைப் பட்டிருந் தின்னம்,
வாழை தான்பழுக் குந்நமக் கென்று
வஞ்ச வல்வினை யுள்வலைப் பட்டுக்,
கூழை மாந்தர்தஞ் செல்கதிப் பக்கம்
போக மும்பொருள் ஒன்றறியாத,
ஏழை யேனுக்கோர் உய்வகை அருளாய்
இடைம ருதுறை எந்தைபி ரானே.

143 அரைக்குஞ் சந்தனத் தோடகில் உந்தி
ஐவ னஞ்சுமந் தார்த்திரு பாலும்,
இரைக்குங் காவிரித் தென்கரை தன்மேல்
இடைம ருதுறை எந்தைபி ரானை,
உரைக்கும் ஊரன் ஒளிதிகழ் மாலை
உள்ளத் தால்உகந் தேத்தவல்லார்கள்
நரைப்பு மூப்பொடு நடலையும் இன்றி
நாதன் சேவடி நண்ணுவர் தாமே.

## 26. பட்டினத்தார் பாடல்

144 கல்லாப் பிழையும் கருதாப்
பிழையும் கசிந்துருகி
நில்லாப் பிழையும் நினையாப்
பிழையும்நின் அஞ்செழுத்தைச்

சொல்லாப் பிழையும் துதியாப்
பிழையும் தொழாப்பிழையும்
எல்லாப் பிழையும் பொருத்தருள்வாய்
கச்சி ஏகம்பனே.

145 சொல்லால் வரும்குற்றம் சிந்தனையால்
வரும் தோடம் செய்த
பொல்லாத தீவினைப் பார்வையிற்
பாவங்கள் புண்ணியநூல்
அல்லாத கேள்வியைக் கேட்டிடும்
தீங்குகள் ஆயவும்மற்று
எல்லாப் பிழையும் பொருத்தருள்வாய்
கச்சி ஏகம்பனே.

## 27. தாயுமானுர் பாடல்

146 செய்யுந் தவஞ்சற்றும் இல்லாத
நான்உன் திருவடிக்கே
கொய்யும் புதுமலர் இட்டுமெய்
யன்பர் குழாத்துடனே
கையும் சிரமிசைக் கூப்பிநின்
ருடிக் கசிந்துருகி
உய்யும் படிக்கருள் செய்வ
தென்ருேபுலி யூர்அத்தனே.

## 28. இராமலிங்கர் பாடல்

147 அப்பாநான் வேண்டுதல்கேட்
டருள்புரிதல் வேண்டும்
ஆருயிர்கட் கெல்லாம்நான்
அன்புசெயல் வேண்டும்
எப்பாரும் எப்பதமும்
எங்கணும்நான் சென்றே
எந்தைநின தருட்புகழை
இயம்பியிடல் வேண்டும்
செப்பாத மேல் நிலைமேல்

சுத்தசிவ மார்க்கம்
திகழ்ந்தோங்க அருட்சோதி
செலுத்தியிடல் வேண்டும்
தப்பேது நான்செயினும்
நீபொறுத்தல் வேண்டும்
தலைவநினைப் பிரியாத
நிலைமையும் வேண்டுவனே.

## 29 திருக்கயிலைப் பதிகம்

148 வேற்றாகி விண்ணாகி நின்றாய் போற்றி
மீளாமே ஆளென்னைக் கொண்டாய் போற்றி
ஊற்றாகி உள்ளே ஒளித்தாய் போற்றி
ஓவாத சத்தத் தொலியே போற்றி.
ஆற்றாகி அங்கே அமர்ந்தாய் போற்றி
ஆறங்கம் நால்வேத மானாய் போற்றி
காற்றாகி யெங்குங் கலந்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி

149 பிச்சாடல் பேயோ டுகந்தாய் போற்றி
பிறவி யறுக்கும் பிரானே போற்றி
வைச்சாடல் நன்று மகிழ்ந்தாய் போற்றி
மருவியென் சிந்தை புகுந்தாய் போற்றி
பொய்ச்சார் புரமூன்று மெய்தாய் போற்றி
போகாதென் சிந்தை புகுந்தாய் போற்றி
கச்சாக நாக மசைத்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி

150 மருவார் புரமூன்று மெய்தாய் போற்றி
மருவியென் சிந்தை புகுந்தாய் போற்றி
உருவாகி யென்னைப் படைத்தாய் போற்றி
யுள்ளாவி வாங்கி யொளித்தாய் போற்றி
திருவாகி நின்ற திறமே போற்றி
தேசம் பரவப் படுவாய் போற்றி
கருவாகி யோடும் முகிலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி

151 வானத்தார் போற்றும் மருந்தே போற்றி
வந்தென்றன் சிந்தை புகுந்தாய் போற்றி
ஊனத்தை நீக்கு முடலே போற்றி
ஓங்கி அழலாய் நிமிர்ந்தாய் போற்றி
தேனத்தை வார்த்த தெளிவே போற்றி
தேவர்க்குந் தேவனாய் நின்றாய் போற்றி
கானத்தீ யாட லுகந்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி.

152 ஊராகி நின்ற உலகே போற்றி
ஓங்கி அழலாய் நிமிர்ந்தாய் போற்றி
பேராகி யெங்கும் பரந்தாய் போற்றி
பெயராதென் சிந்தை புகுந்தாய் போற்றி
நீராவி யான நிழலே போற்றி
நேர்வா ரொருவரையு மில்லாய் போற்றி
காராகி நின்ற முகிலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி.

153 சில்லுருவாய்ச் சென்று திரண்டாய் போற்றி
தேவ ரறியாத தேவே போற்றி
புல்லுயிர்க்கும் பூட்சி புணர்த்தாய் போற்றி
போகாதென் சிந்தை புகுந்தாய் போற்றி
பல்லுயிராய்ப் பார்தோறும் நின்றாய் போற்றி
பற்றி யுலகை விடாதாய் போற்றி
கல்லுயிராய் நின்ற கனலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி,

154 பண்ணின் இசையாகி நின்றாய் போற்றி
பாவிப்பார் பாவ மறுப்பாய் போற்றி
எண்ணு மெழுத்துஞ்சொல் லானாய் போற்றி
என் சிந்தை நீங்கா இறைவா போற்றி
விண்ணும் நிலனுந்தீ யானாய் போற்றி
மேலவர்க்கும் மேலாகி நின்றாய் போற்றி
கண்ணின் மணியாகி நின்றாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி.

155 இமையா துயிரா திருந்தாய் போற்றி
என்சிந்தை நீங்கா இறைவா போற்றி
உமைபாக மாகத் தணைத்தாய் போற்றி
ஊழி யேழான வொருவா போற்றி
அமையா வருநஞ்ச மார்ந்தாய் போற்றி
ஆதி புராணனுய் நின்ருய் போற்றி
கமையாகி நின்ற கனலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி.

156 மூவாய் பிறவாய் இறவாய் போற்றி
முன்னமே தோன்றி முளைத்தாய் போற்றி
தேவாதி தேவர்தொழுந் தேவே போற்றி
சென்றேறி யெங்கும் பரந்தாய் போற்றி
ஆவா அடியேனுக் கெல்லாம் போற்றி
யல்லல் நலிய அலைந்தேன் போற்றி
காவாய் கனகத் திரளே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி.

157 நெடிய விசும்போடு கண்ணே போற்றி
நீள அகல முடையாய் போற்றி
அடியும் முடியும் மிகலிப் போற்றி
யங்கொன் றறியாமை நின்ருய் போற்றி
கொடிய வன்கூற்றம் உதைத்தாய் போற்றி
கோயிலா என்சிந்தை கொண்டாய் போற்றி
கடிய உருமொடு மின்னே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி

158 உண்ணு துறங்கா திருந்தாய் போற்றி
ஓகாதே வேத முணர்ந்தாய் போற்றி
எண்ணு இலங்கைக்கோன் தன்னைப் போற்றி
இறைவிரலால் வைத்துகந்த ஈசா போற்றி
பண்ணு ரிசையின்சொற் கேட்டாய் போற்றி
பண்டேயென் சிந்தை புகுந்தாய் போற்றி
கண்ணு யுலகுக்கு நின்ருய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி

## 30. போற்றித் திருஅகவல்

159 நான்முகன் முதலா வானவர் தொழுதெழ
ஈரடி யாலே மூவுல களந்து
நாற்றிசை முனிவரும் ஐம்புலன் மலரப்
போற்றிசெய் கதிர்முடித் திருநெடு மாலன்
றடிமுடி யறியும் ஆதர வதனிற்
கடுமுரண் ஏன மாகி முன்கலந்
தேழ்தலம் உருவ இடந்து பின்னெய்த்
தூழி முதல்வ சயசய வென்று
வழுத்தியுங் காணா மலரடி யிணைகள்
வழுத்துதற் கெளிதாய் வார்கடல் உலகினில்
யானை முதலா எறும்பீ றாய
ஊனமில் யோனியி னுள்வினை பிழைத்தும்
மானுடப் பிறப்பினுள் மாதா உதரத்
தீனமில் கிருமிச் செருவினிற் பிழைத்தும்
ஒருமதித் தான்றியின் இருமையிற் பிழைத்தும்
இருமதி விளைவின் ஒருமையிற் பிழைத்தும்
மும்மதி தன்னுள் அம்மதம் பிழைத்தும்
ஈரிரு திங்களிற் பேரிருள் பிழைத்தும்
அஞ்சு திங்களின் முஞ்சுதல் பிழைத்தும்
ஆறு திங்களின் ஊறலர் பிழைத்தும்
ஏழு திங்களில் தாழ்புவி பிழைத்தும்
எட்டுத் திங்களிற் கட்டமும் பிழைத்தும்
ஒன்பதில் வருதரு துன்பமும் பிழைத்துந்
தக்க தசமதி தாயொடு தான்படுந்
துக்க சாகரத் துயரிடைப் பிழைத்தும்
ஆண்டுகள் தோறும் அடைந்தவக் காலை
ஈண்டியும் இருத்தியும் எனைப்பல பிழைத்தும்
காலை மலமொடு கடும்பகற் பசிநிசி
வேலை நித்திரை யாத்திரை பிழைத்துங்
கருங்குழற் செவ்வாய் வெண்ணகைக் கார்மயில்
ஒருங்கிய சாயல் நெருங்கியுள் மதர்த்துக்
கச்சற நிமிர்ந்து கதிர்த்து முன்பணைத்
தெய்த்திடை வருந்த எழுந்து புடைபரந்
தீர்க்கிடை போகா இளமுலை மாதர்தங்

கூர்த்த நயனக் கொள்ளையிற் பிழைத்தும்
பித்த வுலகர் பெருந்துறைப் பரப்பினுள்
மத்தக் களிறெனும் அவாவிடைப் பிழைத்துங்
கல்வி யென்னும் பல்கடற் பிழைத்துஞ்
செல்வ மென்னும் அல்லலிற் பிழைத்தும்
நல்குர வென்னுந் தொல்விடம் பிழைத்தும்
புல்வரம் பாய பலதுறை பிழைத்துந்
தெய்வ மென்பதோர் சித்தமுண் டாகி
முனிவி லாததோர் பொருளது கருதலும்
ஆறு கோடி மாயா சக்திகள்
வேறு வேறுதம் மாயைகள் தொடங்கின
ஆத்த மானார் அயலவர் கூடி
நாத்திகம் பேசி நாத்தழும் பேறினர்
சுற்ற மென்னுந் தொல்பசுக் குழாங்கள்
பற்றி யழைத்துப் பதறினர் பெருகவும்
விரத மேபர மாகவே தியருஞ்
சரத மாகவே சாத்திரங் காட்டினர்
சமய வாதிகள் தத்தம் மதங்களே
அமைவ தாக அரற்றி மலைந்தனர்
மிண்டிய மாயா வாத மென்னுஞ்
சண்ட மாருதஞ் சுழித்தடித் தாஅர்த்
துலோகா யதனெனும் ஒண்டிறற் பாம்பின்
கலாபே தத்த கடுவிட மெய்தி
அதிற்பெரு மாயை யெனைப்பல சூழவுந்
தப்பா மேதாம் பிடித்தது சலியாத்
தழலது கண்ட மெழுகது போலத்
தொழுதுள முருகி அழுதுடல் கம்பித்
தாடியும் அலறியும் பாடியும் பரவியுங்
கொடிறும் பேதையுங் கொண்டது விடாதெனும்
படியே யாகிநல் லிடையறு அன்பிற்
பசுமரத் தாணி அறைந்தாற் போலக்
கசிவது பெருகிக் கடலென மறுகி
அகங்குழைந் தனுகுல மாய்மெய் விதிர்த்துச்
சகம்பேய் என்று தம்மைச் சிரிப்ப
நாணது வொழிந்து நாடவர் பழித்துரை

பூணது வாகக் கோணுத லின்றிச்
சதுரிழந் தறிமால் கொண்டு சாருங்
கதியது பரமா அதிசய மாகக்
கற்ரு மனமெனக் கதறியும் பதறியும்
மற்ரேர் தெய்வங் கனவிலும் நினையா
தருபரத் தொருவன் அவனியில் வந்து
குருபர ஞகி யருளிய பெருமையைச்
சிறுமையென் றிகழாதே திருவடி யிணையைப்
பிறிவினை யறியா நிழலது போல
முன்பின் ஞகி முனியா தத்திசை
என்புநைந் துருகி நெக்குநெக் கேங்கி
அன்பெனும் ஆறு கரையது புரள
நன்புலன் ஒன்றி நாதவென் றரற்றி
உரைதடு மாறி உரோமஞ் சிலிர்ப்பக்
கரமலர் மொட்டித் திருதயம் மலரக்
கண்களி கூர நுண்துளி அரும்பச்
சாயா அன்பினை நாடொறுந் தழைப்பவர்
தாயே யாகி வளர்த்தனை போற்றி
மெய்தரு வேதிய ஞகி வினைகெடக்
கைதர வல்ல கடவுள் போற்றி
ஆடக மதுரை அரசே போற்றி
கூடல் இலங்கு குருமணி போற்றி
தென்தில்லை மன்றினுள் ஆடி போற்றி
இன்றெனக் காரமு தாஞய் போற்றி
மூவா நான்மறை முதல்வா போற்றி
சேவார் வெல்கொடிச் சிவனேபோற்றி
மின்ஞருருவ விகிர்தா போற்றி
கல்நார் உரித்த கனியே போற்றி
காவாய் கனகக் குன்றே போற்றி
ஆவா என்றனக் கருளாய் போற்றி
படைப்பாய் காப்பாய் துடைப்பாய் போற்றி
இடரைக் களையும் எந்தாய் போற்றி
ஈச போற்றி இறைவ போற்றி
தேசப் பளிங்கின் திரளே போற்றி

அரசே போற்றி அமுதே போற்றி
விரைசேர் சரண விகிர்தா போற்றி
வேதி போற்றி விமலா போற்றி
ஆதி போற்றி அறிவே போற்றி
கதியே போற்றி கனியே போற்றி
நதிசேர் செஞ்சடை நம்பா போற்றி
உடையாய் போற்றி உணர்வே போற்றி
கடையேன் அடிமை கண்டாய் போற்றி
ஐயா போற்றி அணுவே போற்றி
சைவ போற்றி தலைவா போற்றி
குறியே போற்றி குணமே போற்றி
நெறியே போற்றி நினைவே போற்றி
வானோர்க் கரிய மருந்தே போற்றி
ஏனோர்க் கெளிய இறைவா போற்றி
மூவேழ் சுற்ற முரணுறு நரகிடை
ஆழா மேயருள் அரசே போற்றி
தோழா போற்றி துணைவா போற்றி
வாழ்வே போற்றியென் வைப்பே போற்றி
முத்தா போற்றி முதல்வா போற்றி
அத்தா போற்றி அரனே போற்றி
உரையுணர் விறந்த ஒருவ போற்றி
விரிகடல் உலகின் விளைவே போற்றி
அருமையில் எளிய அழகே போற்றி
கருமுகி லாகிய கண்ணே போற்றி
மன்னிய திருவருள் மலையே போற்றி
என்னையும் ஒருவ னாக்கி இருங்கழல்
சென்னியில் வைத்த சேவக போற்றி
தொழுதகை துன்பந் துடைப்பாய் போற்றி
அழிவிலா ஆனந்த வாரி போற்றி
அழிவதும் ஆவதுங் கடந்தாய் போற்றி
முழுவதும் இறந்த முதல்வா போற்றி
மானேர் நோக்கி மணாளா போற்றி
வானகத் தமரர் தாயே போற்றி
பாரிடை ஐந்தாய் பரந்தாய் போற்றி

நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி
தீயிடை மூன்ருய்த் திகழ்ந்தாய் போற்றி
வளியிடை இரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி
வெளியிடை ஒன்ருய் விளைந்தாய் போற்றி
அளிபவர் உள்ளத் தமுதே போற்றி
கனவிலுந் தேவர்க் கரியாய் போற்றி
நனவிலும் நாயேற் கருளினை போற்றி
இடைமரு துறையும் எந்தாய் போற்றி
சடையிடைக் கங்கை தரித்தாய் போற்றி
ஆரூ ரமர்ந்த அரசே போற்றி
சீரார் திருவை யாரு போற்றி
அண்ணு மலையெம் அண்ணு போற்றி
கண்ணுர் அமுதக் கடலே போற்றி
ஏகம் பத்துறை எந்தாய் போற்றி
பாகம் பெண்ணுரு வானுய் போற்றி
பராய்த்துறை மேவிய பரனே போற்றி
சிராப்பள்ளி மேவிய சிவனே போற்றி
மற்றேர் பற்றிங் கறியேன் போற்றி
குற்ரு லத்தெங் கூத்தா போற்றி
கோகழி மேவிய கோவே போற்றி
ஈங்கோய் மலையெம் எந்தாய் போற்றி
பாங்கார் பழனத் தழகா போற்றி
கடம்பூர் மேவிய விடங்கா போற்றி
அடைந்தவர்க் கருளும் அப்பா போற்றி
இத்தி தன்னின் கீழிரு மூவர்க்
கத்திக் கருளிய அரசே போற்றி
தென்னுடுடைய சிவனே போற்றி
எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி
ஏனக் குருளைக் கருளினை போற்றி
மானக் கயிலை மலையாய் போற்றி
அருளிட வேண்டும் அம்மான் போற்றி
இருள்கெட அருளும் இறைவா போற்றி
தளர்ந்தே னடியேன் தமியேன் போற்றி

களங்கொளக் கருத அருளாய் போற்றி
அஞ்சே லென்றிங் கருளாய் போற்றி
நஞ்சே அமுதா நயந்தாய் போற்றி
அத்தா போற்றி ஐயா போற்றி
நித்தா போற்றி நிமலா போற்றி
பத்தா போற்றி பவனே போற்றி
பெரியாய் போற்றி பிரானே போற்றி
அரியாய் போற்றி அமலா போற்றி
மறையோர் கோல நெறியே போற்றி
முறையோ தரியேன் முதல்வா போற்றி
உறவே போற்றி உயிரே போற்றி
சிறவே போற்றி சிவமே போற்றி
மஞ்சா போற்றி மணாளா போற்றி
பஞ்சே ரடியாள் பாங்கா போற்றி
அலந்தேன் நாயேன் அடியேன் போற்றி
இலங்கு சுடரெம் ஈசா போற்றி
கவைத்தலை மேவிய கண்ணே போற்றி
குவைப்பதி மலிந்த கோவே போற்றி
மலைநா டுடைய மன்னே போற்றி
கலையா ரரிகே சரியாய் போற்றி
திருக்கழுக் குன்றிற் செல்வா போற்றி
பொருப்பமர் பூவணத் தரனே போற்றி
அருவமும் உருவமும் ஆனாய் போற்றி
மருவிய கருணை மலையே போற்றி
துரியமும் இறந்த சுடரே போற்றி
தெரிவரி தாகிய தெளிவே போற்றி
தோளா முத்தச் சுடரே போற்றி
ஆளா னவர்கட் கன்பா போற்றி
ஆரா அமுதே அருளே போற்றி
பேரா யிரமுடைப் பெம்மான் போற்றி
தாளி அறுகின் தாராய் போற்றி
நீளொளி யாகிய நிருத்தா போற்றி
சந்தனச் சாந்தின் சுந்தர போற்றி
சிந்தனைக் கரிய சிவமே போற்றி

மந்திர மாமலை மேயாய் போற்றி
எந்தமை உய்யக் கொள்வாய் போற்றி
புலிமுலை புல்வாய்க் கருளினை போற்றி
அலைகடல் மீமிசை நடந்தாய் போற்றி
கருங்குரு விக்கன் றருளினை போற்றி
இரும்புலன் புலர இசைந்தனை போற்றி
படியுறப் பயின்ற பாவக போற்றி
அடியொடு நடுவீ றானாய் போற்றி
நரகொடு சுவர்க்கம் நானிலம் புகாமல்
பரகதி பாண்டியற் கருளினை போற்றி
ஒழிவற நிறைந்த ஒருவ போற்றி
செழுமலர்ச் சிவபுரத் தரசே போற்றி
கழுநீர் மாலைக் கடவுள் போற்றி
தொழுவார் மையல் துணிப்பாய் போற்றி
பிழைப்பு வாய்ப்பொன் றறியா நாயேன்
குழைத்தசொன் மாலை கொண்டருள் போற்றி
புரம்பல எரித்த புராண போற்றி
பரம்பரஞ் சோதிப் பரனே போற்றி
போற்றி போற்றி புயங்கப் பெருமான்
போற்றி போற்றி புராண காரண
போற்றி போற்றி சயசய போற்றி.

## 31. பல்லாண்டும் வாழ்த்தும்

157 எந்தை எந்தாய் சுற்ற முற்றும்
எமக்கமுதாம் எம்பிரான் என்றென்று,
சிந்தை செய்யுஞ் சிவன்
சீரடியார் அடிநாய் செப்புரை,
அந்தமில் ஆனந்தச் சேந்தன் எனைப்புகுந்
தாண்டு கொண் டாருயிர்மேல்,
பந்தம் பிரியப் பரிந்தவனே யென்று
பல்லாண்டு கூறுதுமே.

158 ஆறிரு தடந்தோள் வாழ்க
அறுமுகம் வாழ்க வெற்பைக்
கூறுசெய் தனிவேல் வாழ்க
குக்குடம் வாழ்க செவ்வேள்
ஏறிய மஞ்ஞை வாழ்க
யானைதன் அணங்கு வாழ்க
மாறிலா வள்ளி வாழ்க
வாழ்கசீர் அடியார் எல்லாம்!





தாசில்பண்ணை (பூம்புகார்)
திரு. K. S. ராமலிங்கம் ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரேஸ்வரரை வழிபடுதல்

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி

# ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சார்ய ஸ்வாமிகள் ஸ்ரீமடம்

## காஞ்சீபுரம்

முகாம் : தேதி : 6-3-70

சமயத் துறைக்கும் கல்வித் துறைக்கும் வேண்டிய உதவிகள் அவ்வப்போது செய்து கொடுத்தும், பல கோவில் களில் கும்பாபிஷேகங்களும், திருப்பணிகளும் நடைபெற தாராளமாய் உதவியும், ஆரம்பப் பள்ளிக்கூடங்கள், உயர் நிலைப்பள்ளிக்கூடங்கள், முதலியன ஏற்படுத்தியும் கலாசாலை களுக்கு ஏராளமாய் பண உதவி செய்தும் மேலும் பல தர்ம தொண்டுகளாற்றி வந்த மேலையூர் தாசில்பண்ணை திரு. K. S. **ராமலிங்கம்** அவர்களின் நினைவு விழா கொண் டாடப்படும் விபரங்கள் ஸ்ரீ மாதா ஸந்நிதானத்தில் விஞ் ஞாபனம் செய்விக்கப்பட்டு ஸ்ரீ மாதா ஸந்நிதானத்தில் மிகவும் சந்தோஷிக்கிறார்கள்.

அன்னாருடைய தர்ம கைங்கர்யங்களைப் போற்றும் இந்த சமயத்தில் ஒரு சிறப்புமலர் வெளியிடப்படுவது போற் றத்தக்கது.

(ஒப்பம்) **A. S.** பானுபந்த்

மானேஜர்

**மு. கருணாநிதி**
**முதலமைச்சர்**

தமிழக அரசு
தலைமைச் செயலகம்
சென்னை-9
25 பிப்ரவரி, 1970

இலக்கியத்தில் ஈடும் இணையுமற்று எழிலோடு திகழ்ந்த காவிரிப்பூம்பட்டினம் இன்று ஒரு சிறு ஊராகக் காட்சியளிக்கிறது. புகழ்மிக்க பூம்புகார் இதுதான் என்று நம்மவரில் பலருக்குத் தெரியாது. அந்தப் பழஞ் சிறப்புக்களை மக்களுக்கு நினைவூட்ட, கற்புடைத் தெய்வமாம் கண்ணகிக்குச் சிலை எழுப்பி, பத்தினிக் கோட்டம் அமைக்கும் முயற்சியில் ஈடுபட்டு, தமிழகத்துக்குத் தான் செய்ய வேண்டிய பணியை சிறப்பாகச் செய்து முடித்த பெரியவர் மேலையூர் தாசில் பண்ணை திரு. கே. எஸ். ராமலிங்கம் அவர்கள்.

அன்னாரது நினைவை யொட்டி வெளியிட விருக்கும் நினைவு மலர், அவரைப் போல் இன்னும் பல பெரியவர்கள் நமது சமுதாயத்திற்குத் தேவைப்படுகிறார்கள் என்னும் உணர்வினை ஊட்டும் ஒரு தூண்டுகோலாக விளங்கும் என்று நம்புகிறேன்.

அந்தப் பெரியவரின் நினைவு என்றென்றும் நிலைத்திருக்குமாக.

(ஒப்பம்) மு. கருணாநிதி



உ

கடவுள் துணை

## தூசில் பண்ணை

## காவிரிப்பூம்பட்டினம் (மேலையூர்)

# உயர்திரு. K. S. இராமலிங்கம் அவர்களின்

## வாழ்க்கை வரலாறு

உ

## திருச்சிற்றம்பலம்

ஒன்றாய் முளைத்தெழுந்து எத்தனையோ கவடுவிட்டு
நன்றாக வைத்தென்னை நாய்சிவிகை ஏற்றுவித்த
என்தாதை தாதைக்கும் எம்மனைக்கும் தம்பெருமான்
குன்றாத செல்வற்கே சென்றாதாய் கோத்தும்பி!

—திருவாசகம்

### நாடு :

தமிழ் நாட்டை உலகத் தோற்றத்தில் வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ் கூறும் நல்லுலகம் முதல் முதலாகத் தோன்றியது என்றும் அங்கே தோன்றின மக்கள்தான் மக்கட் பிறப்பில் முதன்முதலாகத் தோன்றினர் என்றும் நிலநூல் வல்லாரும் வரலாற்று நூல் வல்லாரும் முடிவு கண்டுள்ளனர். அத்தகு சிறப்பினையுடைய தமிழ் கூறும் நல்லுலகம் மூன்று நாடுகளாகப் பிரிக்கப்பட்டு பண்டைய இலக்கிய இலக்கணங்களால் மிகச் சிறப்பாகப் பேசப்படுகிறது. அவை சேர, சோழ, பாண்டிய நாடு என்பன. அவற்றுள் நடுநின்ற சோழநாடு, "தள்ளா விளையுளும்

தக்காரும் தாழ்விலாச் செல்வ ரும் சேர்வது நாடு" என்ற தண்டமிழ் மறையின் தகுதி நிறை இலக்கணம் பெற்ற பெரு நாடாகும். "சோழவள நாடு சோறுடைத்து" என்ற ஔவை வாக்கின்படி பொய்யாக்குலக் கொடி யாகிய பொன்னி நதியின் பொருவில் வளங்களால் அன்றும் இன்றும் சிறப் புற்று விளங்குவது, அன்றியும்

"ஆங்கு அமைவெய்தியக் கண் ணும் பயனின்றே வேந்தமைவு இல் லாத நாடு" என்று முடித்த வள்ளு வத்தின்படி கரிகாலன் முதல் எண் ணற்ற சோழப் பெருமக்களால் பெரு வளனும் பெருஞ் சிறப்பும் பெற்ற நாடு.

ஊர் :

அந்நாடு பண்டைக் காலத்தில் பேரரசு செலுத்தின பெருமக்களால் பேரூர், சிற்றூர், கோட்டம் என பல வகைப் பிரிவுகள் செய்து வளத் தாலும் நாகரீகத்தாலும் அறிவாலும் உழைப்பாலும் நாடு நலம் பெறவும் நன்மக்கள் நல்வாழ்வு நடத்தவும் வகை செய்யப்பட்டிருந்தது. அவற் றுள் சீர்காழி வட்டத்தில் தலைசிறந்த அரசப் பெருமக்கள், வணிகப்பெருமக் கள், பிறநாட்டுப் பேரறிஞர்கள், நம் நாட்டு நல்லறிஞர்கள் அனைவரும் ஒன்று வாழ்ந்து உலகம் போற்றும் ஒப்புயர்வற்ற சிறப்பினதாய்.

"பொதியலாயினும் இமயமாயினும் பதியெழு வறியா பழங்குடி கெழீஇய பொதுவறு சிறப்பின் புகாரே ஆயினும்

"நடுக்கின்றி நிலைஇயர் என்பதை
அல்லது
ஒடுக்கங் கூறுர் உயர்ந்தோர்
உண்மை"

என்ற இளங்கோவின் ஏற்றமிகு பாட் டின்படி தண்டமிழ் நாட்டின் தலை சிறந்த அரசப் பெருநகராய் விளங் கியது பூம்புகார்என்னும் காவிரிப் பூம்பட்டினம். காவிரிப்பூம்பட்டினத் தின் சிறப்பு பண்டை இலக்கியங் களில், தொகை நூல்களில் பரக்கக் காணலாம். பத்துப் பாட்டில் பட்டி னப்பாலை என்ற பெருநூல் காவிரிப் பூம்பட்டினத்தின் சிறப்பைக் கூறு வது. புகார் என்ற சொல்லுக்கே பகைவர் உள்புகமுடியாதபடி பேரரணும் பெருஞ்சிறப்பும் பெற்ற ஊர் என்றே பொருள். அந்நக ரத்தினுயுடைய அமைப்பு அங்கு வாழ்ந்த அரசர், அறவோர், வணிகர், அறிஞர், அல்லாத குடிமக்கள் அனை வருடைய வாழ்க்கை நலன்களையும் அந்நகரத்தின் பிற சிறப்பியல்களை யும் நாகரீகப் பண்பாட்டுச் சிறப்பினை யும் சிலப்பதிகாரம் என்னும் செந் தமிழ் முதற்காப்பியம் சிறப்புற எடுத் துப் பேசுகிறது. இலக்கியத் திறனாய் வில் மட்டுமின்றி ரோமானிய நாட் டினரும், சீன நாட்டினரும் பிற நாட்டினரும் அனுப்பி வைத்த தூதர் களின் மூலமாகக் குறிப்பிடப் பட்டுள்ள குறிப்புகள் பூம்புகார் என்னும் பொருவில் மாநகரம் பண் டைக் காலத்தில் பிற நாட்டாரும் போற்றும்படியான பெருஞ் சிறப் போடு திகழ்ந்தது என்பதனை விளக் கிக் கொண்டிருக்கின்றன.

குடி :

அத்தகு நன்னகரில் ஏசாச்சிறப் பின் இசைவிளங்கு நற்குடிகள் பல பண்டைய நாளிலிருந்து வளமிக்க

பெருவாழ்க்கையில் வாழ்ந்து வந்தன. அக்குடிகளுள் பண்டைய முறைப்படி உழுதுண்போர், உழுவித் துண்போர் என இருபிரிவினர் உளர். இவ்விரு பிரிவினரும் வேளாண்மக்கள் எனப் பெயர் பெறுவர். வேளாண்மை என்பது மண்ணில் உழுது வளம்பெருக்கும் தொழிலாகிய உழவுத் தொழிலையும் குறிக்கும்.

அவ்வுழவுப் பயனை பலருக்குப் பங்கிட்டுக் கொடுக்கும் உதவியையும் குறிக்கும். இந்த இருபொருள் உண்மையின் அடிப்படையில்தான் "வேளாளன் என்பான் விருந்திருக்க உண்ணுதான்" என்ற பண்டைய பாட்டும் வந்தது. அந்த வேளாண் நன்மக்கள் குடியில் ஒரு பெருங் குடியாய்த் திகழ்வது நம் தாசில் பண்ணை யென்னும் நற்குடி. இற்றைக்குச் சுமார் 170 ஆண்டுகளுக்குமுன் (கி. பி. 1802) இப் பண்ணையின் பெருமகனுராகிய சொக்கலிங்கம் பிள்ளை என்ற பெருந்தகையாளர் ஆங்கில அரசின் அமைப்பின்படி 'தாசில்தார்' என்ற தலைமை அலுவலராய் இப்பண்ணைக்கும் உரியவராய் வாழ்ந்த காரணத்தால் "தாசில்தார் சொக்கலிங்கம் பிள்ளை பண்ணை" என்ற முழுப் பெயர் மருவி 'தாசில் பண்ணை' என்றே அன்று தொட்டு இன்று வரை வழங்கி வருகிறது.

தாசில் சொக்கலிங்கம்பிள்ளை அவர்கள் சிறந்த சிவநெறிச் செல்வர். சிவ பூசைகளை முறைப்படி செய்து வந்தார். மீனுட்சி சொக்கநாதரை ஆத்மார்த்தமாக வழிபட்டு வந்தார்கள். அவர்கள் 92 ஆண்டு காலம் வாழ்ந்து பூதவுடலை நீத்துப் புகழுடம்பு எய்தினுர்கள்.

பரம்பரை :

அந்த பேரறிஞரும் பெருந்தகையாளருமாகிய தாசில் சொக்கலிங்கம் பிள்ளை அவர்களுக்குப் பிள்ளைப்பேறு வாய்க்கப் பெருமையால் அவருடைய தமயனுராகிய திரு. சபாபதிப் பிள்ளை அவர்களுடைய மகனுன திரு. பொன்னுசாமிப் பிள்ளை அவர்கள் பண்ணைக்கு உரியவரானுர். அவர் சின்னம்மாள் அம்மாள் என்ற நல்லற மனைவியோடு இல்லறம் நடத்தி வந்த போது திரு. இராமசொக்கலிங்கம் பிள்ளை, திரு. சீனிவாசம் பிள்ளை என்ற இரு ஆண்மக்கள் தோன்றினர். அவர்கள் இருவரும் இராம இலக்குவர் போல் இணைபிரியா சகோதரர்களாய் விளங்கி வந்தமை குறிப்பிடத்தக்க தாகும். இவர்களில் திரு. இராம சொக்கலிங்கம் பிள்ளை அவர்கள் சிறந்த தமிழறிஞர்; சிறந்த கவிஞர். திரு. சீனிவாசம் பிள்ளை அவர்கள் இசை மேதையாக விளங்கியதோடு சிறந்த நடிகராகவும் விளங்கினுர்.

திரு. இராமசொக்கலிங்கம் பிள்ளை அவர்கள் கமலத்தம்மாள் என்ற அருங்குணச் செல்வியை மணந்து இனிதே இல்லறம் நடத்தி வந்தார்கள். அவர்களில் கமலத்தம்மாள் அவர்கள் 72 ஆண்டுகள் இந்நிலவுலகில் வாழ்ந்து அருஞ் செயல்கள் புரிந்தார்கள். அவர்கள் காலத்தில் மேலையூரில் உள்ள ஸ்ரீ முல்லைவன

ஐயனூர் கோவிலை புதிதாகக் கட்டி குடமுழுக்கு விழா செய்தார்கள்.

திரு. சீனிவாசம் பிள்ளை அவர்கள் செல்வி கோஷாம்பாள் என்ற பெண்ணைத் திருமணம் செய்துகொண்டார்கள். சில ஆண்டுகள் அவ்வம்மையாருடன் இனிதே இல்லறம் நடத்தி வந்தார்கள். அவர்களுக்கு மகப்பேறு வாய்க்கப் பெறாமையால் நாங்கூர் திரு. முத்தப் பிள்ளை அவர்கள் மகள் மதுரத்தம்மாளை மணந்து இனிதே இல்லறத்தை நடத்தி வந்தார்கள். திரு சீனிவாசம் பிள்ளை அவர்கள் மதுரத்தம்மாளுடன் இல்லறம் நடத்தியபோது செல்வி கௌரியம்மாள் என்ற குணநலன் வாய்ந்த பெண் மகவைப் பெற்று பெருவாழ்வு எய்தினார்கள். திரு. இராமசொக்கலிங்கம் பிள்ளை அவர்கள் காலத்திற்குப்பிறகு திரு. சீனிவாசம் பிள்ளை அவர்கள் பண்ணைக்கு உரியவராய் நிர்வாகப் பொறுப்பேற்று நடத்தி வந்தார்கள். திருமதி கௌரி அம்மையார் ஒரு குலத்திற்கு ஒரு மகளாய் செல்வப் பெருமகளாய் சிறப்புற வளர்ந்து வருங்கால் இளம் பருவத்திலேயே தந்தை திரு சீனிவாசம் பிள்ளையை இழந்து வருந்தினார்கள். திரு சீனிவாசம் பிள்ளை அவர்களின் தாயார் திருமதி சின்னம்மாள் அம்மாள், திரு. இராமசொக்கலிங்கம்பிள்ளை அவர்களின் மனைவி, திருமதி கமலத்தம்மாள், திரு சீனிவாசம் பிள்ளை அவர்கள் முதல் மனைவி திருமதி கோஷாம்பாள் அம்மாள் இரண்டாம் மனைவி திருமதி மதுரத்தம்மாள், திருமதி மதுரத்தம்மாள் அவர்கள் மகள் செல்வி கௌரியம்மாள் அவர்கள் ஆகிய ஐவரும் ஒன்றாக இருந்தனர். பண்ணை நிர்வாகத்தை திருமதி. சின்னம்மாள் அம்மாள் அவர்கள் தமது ஆயுட் காலம் வரையில் நடத்திவந்தார்கள். அவர்களுக்குப் பிறகு திருமதி மதுரத்தம்மாள் தன்னுடைய சகோதரரான நாங்கூர் திரு. வைத்திலிங்கம் பிள்ளை அவர்கள் உதவியுடன் பண்ணை நிர்வாகத்தை ஏற்று செவ்வனே நடத்தி வந்தார்கள். அவர்கள் காலத்தில் மேலையூரில் உள்ள திரு. பிரியாவிடங்கேசுவரர் ஆலயத் திருப்பணியை முற்றுப்பெறச் செய்து குடமுழுக்குவிழா செய்தார்கள். மதுரத்தம்மாள் அவர்கள் நிர்வாக காலத்தில் திரு. வைத்திலிங்கம் பிள்ளை அவர்களால் திருமதி கௌரியம்மாள் அவர்களின் திருமணம் செய்து வைக்கப்பட்டது. அம்மையார் திருமணத்திற்குப் பிறகு திரு. கே. எஸ். இராமலிங்கம் அவர்களிடம் தாசில் பண்ணை நிர்வாகம் ஒப்படைக்கப்பட்டது.

**பண்ணையார் வரலாறு:**

மாயூரம் வட்டத்தில் காவிரிக் கரையில் கார்காத்த வேளாளர் சிறப்புற விளங்கிய அன்பநாதபுரம் வகையறாவில் இருந்து பிரிந்து திரு. அருணாசலம் பிள்ளை அவர்கள் காருகுடியில் இடம் பெற்றார்கள். அவர்கள் பரம்பரையில் சின்ன பண்ணையில் திரு. காளஸ்திரி என்னும் சைவப் பெருமகனார் விளங்கினார்கள். அவர்கள் ஒழுக்கத்திலும் சிவ பூசையிலும் பிறர் நலம் பேணும் பெற்றியிலும் தகுதி நிறைந்தவராய்



காவிரிப்பூம்பட்டினம் (மேலையூர்) தாசில் பண்ணை
திருமதி. சின்னம்மாள் அம்மாள் – திரு. சீனிவாசம் பிள்ளை



காவிரிப்பூம்பட்டினம் (மேலையூர்) தாசில்பண்ணை
திருமதி. கௌரியம்மாள் அவர்களின் பெரிய தாயார் திருமதி. கமலத்தம்மாள் அவர்கள்
மீனாட்சி சொக்கேசரை வழிபடுதல்

வாழ்ந்தார். இப்பெருமகனார் சிவபூசை செய்து கொண்டிருக்கும் நேரத்திலேயே சிவலோக பதவி அடைந்தமை குறிப்பிடத் தக்கதாகும். அவருக்கு சோமசுந்தரம் பிள்ளை, திரு. சிதம்பரம் பிள்ளை, திரு. அருணாசலம் பிள்ளை என்ற மூன்று பிள்ளைகளும், இரு பெண்களும் இருந்தனர். திருவாளர் சோமசுந்தரம் பிள்ளை திருமதி ஜானகி அம்மாள் என்ற நற்குலப் பெண்ணை மணந்து இல்லறம் என்னும் நல்லறத்தை நடத்திவந்தபோது-

''மங்கலம் என்ப மனைமாட்சி மற்றதன்
நன்கலம் நன்மக்கட் பேறு''

என்ற இலக்கணத்தின்படி நன் மகனாய் 18-8-1897இல் தோன்றினார் நம் பண்ணையாராகிய திருவாளர் இராமலிங்கம் அவர்கள். அவர்கள் உடன் பிறந்தவர்கள் இரண்டு பெண்களும் ஒரு ஆணுமாவார்கள். திருவாளர் இராமலிங்கம் அவர்கள் இளமையில் கற்பன கற்று கேட்பன கேட்டு ஒழுக்கத்தாலும் உயர் குணத்தாலும் குடிப்பிறப்புக்கு ஏற்பவும் பின்வரும் பெருமைக்கு ஏற்பவும் 'விளையும் பயிர் முளையிலே' என்ற மூதுரையின்படி தோற்றத்தாலும் குணத்தாலும் பிறர் மதிக்க வளர்ந்து வந்தார்கள்.

அவர்களுடைய இளம் பருவத் தோற்றப் பொலிவையும் சிறந்த குண நலத்தினையும் உயர்ந்த ஒழுக்கச் சிறப்பினையும் மனத்துட் கொண்டு அவர்களுடைய பதினேந்தாவது ஆண்டிலேயே மேனாங்குடி திருவாளர் சிதம்பரம் பிள்ளை அவர்கள் தம் அருமை மகளாகிய திருமதி மீனாட்சிசுந்தராம்பாள் அவர்களை மணம் செய்து வைத்தார்கள். திருமதி மீனாட்சிசுந்தராம்பாள் என்ற அம்மையார் பண்ணையார் திருவாளர் இராமலிங்கம் அவர்களுக்கு அத்தை மகளாவார். அவர்களோடு இல்லறம் நடத்தியபோது ஒரு பெண் மகவு ஈன்று திருமதி மீனாட்சிசுந்தராம்பாள் மறைந்து போனார்கள்.

சில்லாண்டுகள் தனித்திருந்து வாழ்ந்த காலத்தில் திருவாளர் இராமலிங்கம் அவர்களுடைய குண நலனையும் ஒழுக்க நலனையும் தோற்றப் பொலிவையும் மனத்தடக்கி தாசில் பண்ணையின் ஒரு குலத்துக்கு ஒரு மகளாய் செல்வச் செழுங் கொடியாய் விளங்கிய திருமதி கௌரியம்மாள் அவர்களை மணம் முடித்து (1919-ஆம் ஆண்டு) வைத்தார்கள். அன்று முதல் பிள்ளையவர்கள் தாசில் பண்ணைக்கு உரிமையும் இல்லறத்துக்கு ஏற்றமும் நல்லறங்கட்கு விதையுமாய் விளங்கத் தொடங்கினார்கள். அவர்களுக்குத் திருமணம் ஆகி பன்னிரெண்டாண்டுகள் கழித்து ஒரு பெண் மகவு தோன்றி மறைந்தது வருந்தத்தக்க செய்தியாகும்.

வாழ்க்கைத் திறன் :

பண்ணையின் பொறுப்பையேற்று இல்லறம் நடத்தும்போது செல்வக் களியாட்டத்தில் தன்னை மறந்துவிடாமலும் குடிப்பிறப்புக் கேற்ற

ஒழுக்கத்திலும் மனிதப் பிறவிக்கேற்ற பண்பினும் அறிவு நலனுக்கேற்ற கல்வியிலும் உயர்வுக்கு இன்றி யமையாத அடக்கத்திலும் குறிக் கோளுக்கு ஏற்ற தெய்வ நம்பிக்கை யிலும் சிறந்து விளங்குவதற்கு தானே முயன்று பல்லாற்றானும் சிறப்புற விளங்கினார்கள். பண்ணையார் திருவாளர் இராமலிங்கம் அவர்கள் காலத்தில் ஆங்கில ஆட்சி அலுவலகத்தினரோடு பழகுவதற்கு ஏற்ற ஆங்கில அறிவோடும் பெருங்குடிச் சிறப்புக்கு ஏற்ற தமிழ்க் கல்வி நலனும் தெய்வ வழிபாட்டுக் கேற்ற வடமொழி யறிவும் பெற்று உயர் பேரறிஞராய் விளங்கினார்கள். தன்னை வழிவழி வந்த உயர் பெருங் குடிமகன் என்று நன்குணர்ந்து அதற் கேற்ற ஒழுக்க வகையில் காலை, பகல், மாலை என்னும் முப்போதும் கடவுள் வழிபாடு (சந்தியாவந்தனம்) செய்யும் கடப்பாடுடையவர்களாய் வாழ்ந்தார்கள். பண்ணையார் அவர்கள் வடமொழியைத் தாமே பயின்று வேதங்களையும் உபநிஷதங் களையும் துரிசறக்கற்று மந்திரதந்திரங் களில் பயிற்சி யுடையவராய் நாள் தோறும் வேதங்களை ஓதியும் நியமங்களை இடைவிடாது செய்தும் வாழ்ந்த வாழ்க்கைத் திறமுடைய வர்கள். அவர்கள் வேதங்களை ஓதும் போதும் மந்திரங்களைச் சொல்லும் போதும் வேத வித்துக்களாகிய பிராமணர்களும்கூட வியக்கும்படி யாக இருக்கும்.

நாள்தோறும் முப்போதும் காயத்ரி மந்திரங்களை உபாசிக்கின்ற நியமம் உடையவர்கள். ஸ்ரீ சக்கரம், லலிதா சகஸ்ர நாமம் முதலிய மந்திர நூல் களிலே அழுத்தமான நம்பிக்கையும் வழிபாடும் உடையவர்கள். தேவி மகாத்மியம் முதலிய வடமொழி நூல் களில் பற்றுக்கொண்டு தேவி பூசனை செய்து வழிபட்டு வந்தார்கள். அவர் கள் ஸ்ரீ ராஜராஜேஸ்வரியின் யந்திர பூசையை முறைப்படி செய்துவந் தார்கள். (அவர்களது ஆயுட்காலத் திற்குப் பிறகு அந்த யந்திரம் பண்ணை யாரின் சொந்த கோவிலான ஸ்ரீ பிரியாவிடங்கேசுவர சுவாமி கோயிலில் ஸ்ரீ கிருபாகடாட்சியம்மன் சந்நிதியில் பிரதிஷ்டை செய்யப் பட்டிருக்கிறது.) தமிழிலே திரு வாசகம் முதலான தெய்வத் தமிழ் நூல்களில் பற்றும் உருக்கமும் உடை யவர். தமிழிலே பற்றோடு தமிழ்ப் பண்பாட்டின் உயர்வும் சிறப்பும் உலக அரங்கில் ஏற்றம் பெற வேண்டும் என்ற நோக்கம் உடை வர். அதற்குரிய செயலினை தம் அளவுக்க ஏற்ப தக்க காலத்தில் செய்து காட்டவேண்டும் என்று ஊன்றிய கருத்துடையவர்கள். இத்தனை பெருநிலையில் இருந்தக் கண்ணும் இத்தனை பெருஞ் செல்வத் தில் வாழ்ந்தபோதும் தன்னுடைய உயர்வினைப் பெரிதெனக் கருதாது தம்மில் அறிவால், ஒழுக்கத்தால் மிக்கோரை பணிந்தும் தம்மோடு ஒத்தாரை அன்போடு நேசித்தும் ஏழை மக்களுக்கு இரங்கியும் எளிமை யும் அருமையும் உடையவர்களாய் வாழ்ந்தார்கள். தம்மோடு ஒவ் வாக் கருத்தினரை சந்தித்துப் பழகும் படியான வாய்ப்பு வரும்போது அவர்களோடு கருத்து வேற்றுமைக்

காகப் பகைமை கொள்ளாது மனிதப் பண்பாட்டினின்றும் இறங்காது அன்போடு நேசித்து அளவாகப் பழகி தன்னிலை காட்டாது அடங்கி பிறர் நிலையைப் பெரிதென மதித்து வாழ்ந்த பெற்றியர். செல்வச் சிறப்பினலே ஆடம்பர வாழ்க்கையை அறவே தணித்து நகர வாழ்க்கைக்கு நாட்டம் கொள்ளாது பொதுமக்களினுடைய, ஏழை மக்களுடைய தொடர்பு அற்றுப்போகாது பெரும்பாலும் பண்ணையிலேயே வாழ்ந்து காட்டிய பெருமகனுராவார். காலப்போக்கிற்கேற்ப, நாகரீக வளர்ச்சிக்கேற்ப, செல்வச் சிறப்பிற்கேற்ப நடையால், உடையால், தோற்றத்தால், பிற வாழ்க்கைத் துறைகளால் தன்னை மாற்றிக்கொள்ளாது தூய வெள்ளாடை அணிந்து திருநீற்றுப் பொலிவோடு உச்சிக் குடுமி உயர்ந்து விளங்க மேலாடை என்னும் உத்தரியத்தோடு எளிமையில் அருமைத் தோற்றம் உடையவர்களாய் காட்சிக்கு எளிமையும் கடுஞ்சொல் இன்மையும் உடைய மூதறிவு பெற்ற சான்ருேராய் விளங்கினர். திருநீறு பூசிய தோற்றமும் அஞ்செழுத்தும், எட்டெழுத்தும் அகம் மகிழ்ந்து ஓதும் நாவும் தெய்வ நினைவால் பொலியும் திருமுகமும் செம்பொன்னை வார்த்தால் அன்ன சிவந்த திருமேனியும் செல்வச் சிறப்புக்கேற்ற சிறந்த தோற்றமும் உடையவர்களாய் விளங்கினுர்கள். உண்ணும்போதும் ' பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர் தொகுத்தவற்றுள் எல்லாம் தலை" என்பதற்கு ஏற்பவும், ''இருந்தோம்பி இல்வாழ்வதெல்லாம் விருந்தோம்பி வேளாண்மை செய்தற் பொருட்டு" என்பதற்கு ஏற்பவும், தம்மின் மிக்க விருந்தினரை உண்ண வைத்து உடனிருந்து உண்ணும் ஒரு பெரும் குணசாலியாய் விளங்கினுர்கள். '' தாம் பெற்ற பேறு பெறுக இவ் வையகம்" என்பதற் கேற்பவும், ''செல்வத்துப் பயனே ஈதல், துய்ப்பேம் எனினே தப்புந பலவே" என்பதற் கேற்பவும், தம்முடைய வாழ்நாளில் சமயத் துறையிலும், கல்வித் துறையிலும், சமுதாயத் துறையிலும், தமிழ்த் துறையிலும், பொதுப் பணித் துறைகளிலும் தம் காலத்திலேயே செய்வன செய்துவிடவேண்டும் என்ற குறிக்கோளுடையவர்களாய் வாழ்ந்தார்கள்.

''வாய்த்தது நம் தமக்கு ஈதுவோர்
பிறவி மதித்திடுமின்''

என்ற திருநாவுக்கரசர் வாக்கின்படி எடுத்த மனிதப் பிறவியை மதித்து நல்லவை எல்லாம் கடன் எனக் கருதி வாழ்ந்து காட்டிய நல்லறிஞர் ஆவார். அவர் செய்த அறப்பணிகளும், சமயப் பணிகளும், தமிழ்ப் பணிகளும், பொதுப் பணிகளும்

''ஒன்ரு உயர்ந்த உலகத்துயர்ந்த
புகழல்லால்
பொன்ருது நிற்ப தொன்றில்''

என்ற பொதுமறைப்படி என்றும் நின்று நிலவும் புகழுடம்புகளாய்க் காட்சியளிக்கின்றன. அவை பின்வருமாறு:—

**சமயப் பணி:**

மனிதன் உயர்ந்தவனுதலால் பிற உயிர்களைப் போன்ற இன்பத்தையும்

ஆத்மீக உயர்வையும் பெற வேண்டும். ஆத்மீக உயர்வுக்குச் சமயமே சாலச் சிறந்தது. ஆகையால் பண்ணையார் அவர்கள் ஆத்மீகத் துறைக்கு வளங் கொடுக்க பொது மக்களுக்கு ஆத்மீகத் துறையில் வளர்ச்சி ஏற்படவேண்டும் என்று சமுதாயத்தின் ஏற்றத் தாழ்வுகளுக்கு ஏற்ப வழிபாட்டுக் குரிய திருக்கோயில்களை புதிதாகக் கட்டியும் பழுதுபட்டவற்றைப் புதுப்பித்தும் குடமுழுக்கு விழா முதலிய சிறப்புக்களைச் செய்தும் தாமே உடனிருந்து பொதுமக்களோடு ஆத்மீகத் துறையில் வழிகாட்டியாய் விளங்கினார்கள். அவர்கள் செய்த சமயப் பணிகளாவன:—

சமயப் பணிகள் பல திறத்தன. மக்கள் திறத்திற் கேற்ப வழிபாட்டுத் திறமும் மாறுபடும். "யாதொரு தெய்வம் கண்டீர் அத்தெய்வமாக ஆங்கே மாதொரு பாகனார் தாம் வருவர்" என்ற சாத்திரத்திற் கேற்பவும் "விரிவிலா அறிவினார்கள் வேறொரு சமயம் செய்து எரிவினால் சொன்னாரேனும் எம்பிராற்கு ஏற்றதாகும்" என்ற தமிழ் மறைக் கேற்பவும் சமுதாயத்தின் தகுதி நிலைக்கு ஏற்ப வழிபாட்டு முறையும் தெய்வமும் வேறு வேறுகக் காட்சியளிக்கும். இதனை நன்குணர்ந்த பண்ணையாரவர்கள் தம்மைச் சார்ந்துள்ள பொதுமக்களின் வாழ்க்கைத் தரத்துக் கேற்ற வகையில் வழிபாட்டுத் தெய்வங்களின் கோட்டங்களை அமைத்துக் கொடுத்தார்கள். செங்கழுநீர் விநாயகர்கோயில் செப்பனிட்டது, அகத்தீசுவரர் கோயில் புதிதாகக் கட்டியது, திரு. சீனிவாசம் பிள்ளை அவர்கள் காலத்தில் புதிதாக கட்டப்பட்ட ஸ்ரீ பிரியாவிடங்கேசர் ஆலயம் புதுப்பிக்கப்பட்டது போன்ற சைவ சமயத் திருக்கோயில் பணிகளைச் செய்தார்கள். அடுத்ததாக இரகுநாதப்பெருமாள் கோயில் என்ற திருமால் வழிபாட்டுத் திருத்தலத்தையும் புதிதாகக் கட்டினார்கள். அடுத்ததாக இவ்வூர் வடக்கு வெளி ஐயனார் கோயிலை பொதுமக்களின் வழிபாட்டுக் குரியதாக புதிதாகக் கட்டி அழகு செய்தார்கள். எல்லை தெய்வமாக வழிபட்டு வரும் பொதுமக்களின் கண்கண்ட தெய்வமாகிய வாணகிரி மாரியம்மன், மேலையூர் மாரியம்மன் கோயில்களை பொது மக்களின் வழிபாட்டுக்குரிய இடங்களாக புதிதாகக் கட்டித் தந்தார்கள். அன்றியும் பண்டே பெருமை பெற்று விளங்கும் சாயவனேசுவரர், பல்லவனீசுவரர் கோயில்கட்குப் பணிகள் பல செய்தார்கள். மேலும் மேலையூரை அடுத்த மேலப்பெரும் பள்ளத்தில் உள்ள வலம்புரிநாதர் திருக்கோயிலைப் புதுப்பித்து வழிபாட்டுக்குரிய நல்ல இடமாக்கித் தந்தார்கள். அவ்வூரிலேயே திரு. லட்சுமிநாராயணப் பெருமாள் கோயிலை புதிதாகக் கட்டி குடமுழுக்கு விழா செய்துள்ளார்கள். திருக்கடவூரில் இராமர் வழிபட்ட தலமாகிய இராமநந்தீசுவரம் என்னும் கோவில் புதுப்பிக்கப்பட்டது. தாசில் சொக்கலிங்கம் பிள்ளை அவர்களால் ஆத்மபூஜை செய்த ஸ்ரீ மீனுக்ஷி சொக்கலிங்கேசுவரர்



காவிரிப்பூம்பட்டினம் (மேலையூர்)
தாசில் பண்ணை
திருமிகு. சீனுவாசம் பிள்ளையவர்கள்



காவிரிப்பூம்பட்டினம் (மேலையூர்) தாசில் பண்ணை
திருமதி. மதுரத்தம்மாள்

ஸ்வாமிகள் வாணகிரியில் சீனிவாச விலாஸ் என்ற பெயரில் நூதனமாகக் கட்டப்பட்டுள்ள கட்டிடத்தில் பிரதிஷ்டை செய்யப்பட்டது. திரு. இராம சொக்கலிங்கம் பிள்ளை அவர்களும் திரு. சீனிவாசம் பிள்ளை அவர்களும் வழிபட்ட ஸ்ரீ நவநீதகிருஷ்ணனும் அவ்விடத்தில் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது. இவ்வாறு சமயத் துறையில் மக்கள் நெறிக்கு ஏற்றவாறு வழிபாட்டு ஒழுக்க நெறிக்கு உதவிய பெருமை பண்ணையார் அவர்களைச் சாரும்.

கல்விப்பணி :

மக்கட் சமுதாயம் உயர்வு பெறுவதற்கு இரண்டு வழிகள். வாழ்க்கை நடத்த செல்வமும் வாழ்வில் உயர்ந்த வாழ்வைப்பெற கல்வியும் இன்றியமையாதன. செல்வம் பெற்ற பெருந்தகையாளர்கள் பொதுமக்களின் வாழ்வு நலம் கருதி கண்ணெனக்கருதும் கல்வியை பொதுமக்களுக்கு வாய்ப்புடைத்தாக வழங்குவது இன்றியமையாக் கடனாகும். அதனை நன்குணர்ந்த பண்ணையார் தம் பெருஞ் செல்வப் பெருந்தகைமைக்கு ஏற்ப மக்கள் பணியே தெய்வப் பணியெனக் கருதி தம் அரும்பெறற் செல்வ பேராண்மையை கல்விப் பணிக்கென பல்லாற்றானும் பயன்படுத்தினார்கள். வருங்கால சமுதாய வாழ்வின் வளர்ச்சி கருதி குழந்தைகள் முதல் நல்லிளம் பருவத்தினர் வரை நாடொறும் பயிலவேண்டிய பயின்று பயன்பெற வேண்டிய வழியில் தாமே தம் குறிக்கோள் நோக்கொடு அரசியல் துறையிலும் அறிவியல் துறையிலும் கருத்தூன்றி ஆரம்பக் கல்வி, உயர்தரக் கல்வி, பட்டப் படிப்பு இவற்றினை தம்மைச் சார்ந்த தம் பக்கத்திலுள்ள நன்மக்கள், பொதுமக்கள் பயன்பெறும் வகையில் பல பணிகளைச் சிறப்புற செய்திருக்கிறார்கள். ஆரம்பக் கல்விக்கு மதுரம் தொடக்கப் பள்ளியினைத் தொடங்கி அதற்கு வேண்டிய இடம், பொருள் ஏவல்களைத் தம்முடைய சொந்தப் பொறுப்பிலேயே பல்லாண்டுகளாக சீரும் சிறப்புமுற நடத்தி வந்தார்கள். உயர்தரக் கல்விக்கு சீனிவாசா உயர்நிலைப் பள்ளி என்ற நல்ல கல்விக் கூடத்தை தம்முடைய இடத்திலேயே தம் பொருட் செலவிலேயே இப்பக்கத்தில் ஈடும் எடுப்பும் அற்ற நல்லதொரு உயர்நிலைப் பள்ளியாக நடத்தி வந்தார்கள். அவர்களுடைய கடமை உணர்ச்சியும் நன்றியுணர்வும் தோன்ற இந்த நல்ல நிறுவனங்களை தாமே செய்திருந்தும் தம் பெயரால் நிறுவாது தாம் வாழக்கையை மேற்கொண்ட தம்பண்ணையின் முன்னோர்களாகிய மாமன், மாமியர் நினைவுக் கூடங்களாக அமைத்தார்கள். இதனால் அவர்களுடைய பண்பாடும் நன்றியுணர்வும் கடமை உணர்ச்சியும் தெற்றென விளங்குகிறது. இக்காலத்தில் பிறர் பொருள் கொண்டு செய்யும் செயலையும் தம் பெயரால் நிறுவிக் காட்டும் உலகியல் போக்கிற்கு மாறாக, தம் பொருள் கொண்டு செய்த செயலை தம் முன்னோரின் நன்றியுணர்வு காரணமாக அம் முன்னோர் பெயரால் நிறுவிக் காட்டிய நம் பெருமகனார்

நம் செந்தமிழ் நாட்டு சிறப்புடைச் செல்வர்களுக்கு ஓர் எடுத்துக்காட்டாக விளங்குகிறார்கள். மேலும் அவர்களுடைய நிறுவனங்கள் வழி வழியாக வளர்வதற்கும் நிலைத்து நின்று பயன் தருவதற்கும் ஏற்ப அதற்குரிய மூலதனங்களை பன்னூறாயிரம் வெண் பொற்காசுகள் பெறும் படியான அளவுற்கு முன்கூட்டியே ஒதுக்கி பிறர் துணையின்றி தனித்தியங்கும் தன்மையுடையதாய் செய்திருக்கிறார்கள். இன்னும் அவர்கள் கல்வியின் மேலுள்ள ஆர்வத்தால் கல்லூரிப் படிப்புக்கும் பிற துறைக் கல்விக்கும் வாரி வழங்கின வள்ளலாய் வாழ்ந்தார்கள் என்பதனை பின் வரும் குறிப்புகளால் அறியலாம்.

சமுதாயப்பணி :

உழவுத் தொழில் செம்மையாக நடைபெற வேண்டுமானால் வானம் வழங்கவேண்டும். வானம் வழங்கினாலும் அதனை வழியாக வயலுக்குப் பாய்ச்சவேண்டும். அதற்கு உறு துணையாக அரசாங்கம் வாய்க்கால்களை வெட்டி வேண்டிய இடங்களில் நீரைத் தேக்கி வேண்டியபோது அளிக்கவேண்டும். அவ் வகையில் மேலப் பெரும்பள்ளம் என்ற சிற்றூர் வாய்க்கால், வடிகால் வசதியின்றி பல ஆண்டுகள் நன்கு பயிரிட வாய்ப்பின்றி இருந்தபோது காவிரியிலிருந்து தனித்தமுறையில் நீரைத் தடுத்து உழவர் பெருமக்களுக்குக் கிடைக்கும் வகையில் பண்ணையார் அரசாங்கத்தோடு போராடி புதிய வாய்க்கால் தலைப்பினைப் பெற்றுத் தந்தார்கள். மேலும் பொதுமக்களுக்காக அரசாங்கம் செய்ய வேண்டிய கடமைகளை அவ்வப்போது அரசாங்கத்திற்குச் சொல்லவேண்டிய முறையில் எடுத்துச் சொல்லி பல பயன்களை பெறச் செய்திருக்கிறார்கள். ஒன்றுபட்ட உள்ளத்தினராய் உயர்ந்த குறிக்கோளினை உடையவராய் பொது மக்கள் திகழ வேண்டும் என்று பல்லாற்றானும் பணி புரிந்த பெருமை இப் பெருமகனாரையே சாரும்.

தமிழ்ப்பணி :

காவிரி கடலொடு கலக்கும் கண்ணனைய பேரிடமாகியகாவிரிப்பூம்பட்டினம் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன் உலகத்தார் அனைவரும் ஒரு கண்ணாய் நோக்கக்கூடிய உயர் பெரும் தலைநகராய் விளங்கிற்று. அந்த நிலை காலக் கோட்பாட்டினால் கடற்கோளால் கலைந்து போயிற்று. தமிழ்நாட்டின் தனி வரலாற்றினை தீட்டக்கூடிய மூவேந்தரின் முதன்மை நகரங்களாய் விளங்கின. வஞ்சியும், புகாரும், வள மதுரையும் இலக்கியங்களில் எழில்பெற விளங்குகின்றனவேயன்றி இன்று அத்தோற்றத்தில் காணப்படுவனவாய் இல்லை. அவற்றினும் காவிரிப்பூம்பட்டினமாகிய புகார் நகரம் கடல் கொண்ட காரணத்தால் பெயர் மாத்திரமாய் பேசுவாரற்றும் காணுவாரற்றும் கவினிழந்து காட்சியளித்தது; அளிக்கிறது. ஆனால் பண்டைய தமிழ்நாட்டின் தமிழ் நாட்டின் வரலாற்றைத் தீட்டப் புகுங்கால் தண்டமிழ் நாட்டுத் தனி நகரம், தலைநகரம் பூம்புகார் என்னும் பொன்னகரே என முடிவு

காண நேரிடும். அத்தகைய பெரு நகரச் சிறப்பு பொலிவிழந்து புறக் கணிக்கப்பட்டு கிடந்த காலத்தில் அதன் பெருமையினை நன்குணர்ந்த நம் பெரியார் வரலாற்று உண்மை யோடு அரசினர்க்கும் ஆன்ற பெரு மக்கட்கும் பொதுமக்கட்கும் விளக்க வேண்டும் என்ற பேருள்ளத்தினால் தாமே தம் மனத்தில் ஓர் அரிய குறிக்கோளினைத் தீட்டி 1951இல் ஒருவகை செய்தார்கள். அதுதான் முதன் முதலிலே தமிழ்நாட்டில் சிலப்பதிகார மாநாடு என்ற பெயரி னால் காவிரிப்பூம்பட்டினத்தின் கவி னுறு பெருமையினை அரசினர், அறிஞர், ஆன்ற பெருமக்கள், பொது மக்கள் அனைவரும் அறிந்து கொள்ளும்படி செய்தது. அந்த விழாவினை தாசில்பண்ணை இராமலிங்கம் அவர்கள் தாமே முன் னின்று பெரும் பொருட் செலவில் அமைச்சர்கள், அறிஞர்கள், அரசியல் வாதிகள், பெருஞ் செல்வர்கள், பெருங்குடி மக்கள், பொதுமக்கள் அனைவரும் கலந்து கொள்ளும்படி யாக பெருவிழாவினை மூன்று நாள் நடத்தினார்கள்.

அவ்வமயம் திரு. R. K. சண்முகஞ் செட்டியார், திரு. அவினாசிலிங்கம் செட்டியார், முன்னாள் தமிழக முதல்வர் திரு. M. பக்தவத்சலம் போன்ற பேரமைச்சர்களும், திரு. ரா. பி. சேதுப்பிள்ளை, திரு. டாக்டர் அ. சிதம்பரநாதன் செட்டியார், திரு. டாக்டர் மு. வரதராசன், திரு. கி. வா. ஜகன் னாதன், திரு. அ. நடேச முதலியார், திரு. தெ. பொ. மீனாட்சிசுந்தரனார், திரு. G. சுப்பிரமணியபிள்ளை போன்ற தமிழ்ப் பேரறிஞர்களும், திரு. ம. பொ. சிவஞான கிராமணியார், திரு. சா. கணேசன் போன்ற அரசியல் வாதிகளும் பங்கு பெற்று சிலப்பதிகாரத்தை மையமாகக் கொண்டு பல தலைப்புகளில் காவிரிப்பூம்பட்டினத்தின் சிறப்பை யும் கண்ணகியாம் பத்தினித் தெய்வத்தின் பண்பையும் பலபடப் புனைந்து பெருஞ் செல்வர்களும் பொதுமக்களும் கற்றோரும் மற்றோரும் கண்டு கேட்டு வியக்கும்படி பேருரையாற்றி மகிழ்வித்தார்கள். அந்த பெருவிழா நிகழ்ச்சியினால் தான் காவிரிப்பூம்பட்டினத்தின் சிறப் பும் கண்ணகி தெய்வத்தின் கற்பும் தமிழ்நாட்டின் மூலைமுடுக்குகளிலும் பட்டிதொட்டிகளிலும் பரவலாயிற்று. இன்று சொற்பொழிவு மேடைகளி லும் நாடகக் கலையரங்குகளிலும் திரைப்பட உலகிலும் பூம்புகாரின் பொற்பும் கண்ணகியின் கற்பும் கண் ணுக்கும் கருத்துக்கும் காட்சியளிக் கின்றன என்றால் அன்று 1951—ல் திரு. இராமலிங்கம் அவர்கள் தமிழ்ப் பண்பாட்டின் நிலைக்களனாய் அமைத்து நடத்திய சிலப்பதிகார மாநாட்டின் பயனேயாகும். அம் மட்டோ! அதனினும் சிறப்பாக தமிழ் பெண்ணின் தனித்தன்மையையும் கற்பின் மேம்பாட்டையும் உலகறியச் செய்ய வேண்டும் என்ற உயர் நோக்கால் பத்தினித் தெய்வமாம் கண்ணகியின் படிமத்தை உயர்ந்த சிற்பியாகிய கணபதி ஸ்தபதியா ரைக் கொண்டு வடிவெடுத்து உலகத் தமிழர் மாநாட்டின் கலைக்காட்சியில்

இடம் பெறச் செய்து பன்னாட்டு பேரறிஞர்களும் கண்டு வியந்து பாராட்டச் செய்த பெருமை பண்ணையார் திரு. இராமலிங்கம் அவர்களையே சாரும். அதனோடு நில்லாமல் அந்த பத்தினித் தெய்வத்திற்கு ஒரு கோட்டம் அமைக்கக் குறிக்கொண்டு அதற்கென இடம் வகுத்து, பொருள் வகுத்து, புனை திறன் வகுத்து சிறந்த முறையில் கோட்டம் வேலை நடைபெற்றுக்கொண்டு வருவதும் அவர்களுடைய நன்முயற்சியே ஆகும். அன்றொரு நாள் சேரன் செங்குட்டுவன் இமயத்திற் சிலை யெடுத்து கங்கையில் நீராட்டி கனகவிசயர் தலையில் சுமக்கச்செய்து கற்கோயில் கட்டி பத்தினிக் கடவுளுக்கு கயவாகு முதலிய பல்லரசர்கள் வழிபடும்படியாக படிமம் அமைத்தான் என்று பாவேந்தர் இளங்கோவடிகளின் சிலப்பதிகாரத்தில் காண்கிறோம். ஆனால் அக்கோயில் கண்ணிற்கண்டு வழிபடுதற்குரியதாய் இன்று அமைந்திலது. ஆனால் இன்றொருநாள் இராமலிங்கம் அவர்கள் கண்ணகி கற்புத்தெய்வத்திற்கு படிமம் அமைத்துப் பன்னாட்டுப் பேரறிஞரும் பாராட்டும்படிச் செய்து காவிரிப்பூம்பட்டினத்தில் கற்கோவில் எடுத்து பத்தினிப் படிமத்தை பதிவுசெய்து பலரும் வழிபடும் படியாக அமைத்துள்ளமையை கண்கொண்டு களித்து வியக்கிறோம். இந்த பெருமை திரு. இராமலிங்கம் அவர்களையே சாரும். இதனினும் நாட்டிற்கும் மொழிக்கும் செய்யும் தனித்தொண்டும் பெருந்தொண்டும் வேறென்று இருக்க முடியாது.

பொதுப்பணி :

இவ்வாறு பல துறைகளில் நம் பெருமகனார் ஆற்றிய தொண்டுகள் அளவில. 1919 முதல் 1969 முடிய 50 ஆண்டுகள் நம் பெரியார் இப் பூம்புகாரின் கண் தங்கி பெருமை சான்ற தொண்டுகளைப் புரிந்துள்ளார்கள். வாரிவாரி வழங்கியிருக்கின்றார்கள்.

பூம்புகாரின் கண் கல்லூரி அமைய வேண்டுமென்று மக்கள் விரும்பிய காலை தாமே முன்வந்து கட்டிடத்திற்கென 6 ஏக்கர் புன்செய் நிலமும் விளையாட்டிடத்திற்கென 7 ஏக்கர் புன்செய் நிலமும் கொடுத்து கல்லூரி எனும் கலைக்கூடத்தை இங்கே நிலைபெறச் செய்திருக்கின்றார்கள். மாயூரத்தில் பெண்கள் பட்டம்பெற வாய்ப்பாகக்கல்லூரி எழவேண்டும் என்று ஆங்குள்ள மக்கள் விரும்பியபோது ரூ. 5000 நன்கொடையாகத் தந்து தம்முடைய வள்ளல் தன்மையை பிறர் அறியச் செய்தார்கள். மக்கள் உள்ளம் உயரவேண்டுமானால் நோயற்ற நல்வாழ்வு வாழவேண்டும் என்ற கருத்தில் உள்ள பண்ணையார் அவர்கள் பரசலூரில் இருக்கும் மருத்துவ மனை கட்டுவதற்கென ரூ. 10,000 கொடுத்து ஏழைகளின் உடல் நோய் தீர வழி செய்தார்கள் என்பதை நினைக்கும்போது அவரது உயர்குணத்தைப் போற்றுதிருக்க முடியுமோ! பலருக்கும் பயன்படும்படியாக அமிர்தகடேசர் கோயில் கொண்டுள்ள திருக்கடவூரில் நம் பண்ணையாரின் முன்னோர் அறச்சாலை ஒன்று அமைத்திருக்கின்றார்கள்.



தாசில்பண்ணை (பூம்புகார்)

திரு. K. S. ராமலிங்கம், திருமதி R. கௌரி அம்மாள்

''தம்பதிகள்''

அது இன்று "மதுரம் கல்யாண மஹால்" என்ற பெயருடன் பலர் திருமணம் செய்து கொள்ள பல வசதிகள் நிறைந்த இடமாகத் திகழ்ந்து வருகின்றது. சீர்காழியில் திருஞானசம்பந்தர் பிறந்த இல்லத்தை வாங்கி காஞ்சி காம கோடி பீடாதிபதி ஸ்ரீலஸ்ரீ சங்கராச் சாரியார் சுவாமிகள் அவர்களுக்கு அன்புக் காணிக்கையாக வழங்கியுள்ளார்கள்.

நிறைவு :

இவ் வரலாற்றுப் பெருந்தகையான இராமலிங்கம் அவர்களுக்கு மனத் துணையும் மனைத் துணையும் வாழ்க்கைத் துணையுமாய் அமைந்த திருமதி. கௌரியம்மாள் அவர்களுடைய இல்லறம் நடத்தும் நல்லறப் பண்பே இவர்கள் இத்தனைப் பேரறங்களையும் பெருவாழ்வினையும் நடத்தப் பெருந்துணையாய் இருந்தது. திருமதி. கௌரியம்மையார் அவர்கள் இப் பண்ணையின் பெருஞ் செல்வக் குடியில் பிறந்து அறிவுக் கூர்மையும் அன்பு நிறைவும் பொறுப்பினை ஏற்று நடத்தும் திறம்பாடும் விருந்தினை ஓம்பும் பண்பும் உற்றார் உறவினரை ஆதரிக்கும் நற்குணமும் தனித்துச் சிந்திக்கும் தகுதியும் செயலாற்றும் கடப்பாடும் எடுத்த செயலினை திறம்பட நிறைவேற்றும் உறுதியும் அடக்கமும் அமைதியும் உடைய அம்மையாராய் விளங்குவதாலும் அவர்களை வாழ்க்கைத் துணையாய் பெற்றதனாலும்தான் பண்ணையார் இத்தனை கடப்பாடுகளையும் நிறைவேற்ற முடிந்தது. அல்லாமலும் திருமதி. கௌரியம்மையார் அவர்களுடைய உறுதுணையும் தூண்டுகோலும் இல்லையேல் எந்த அறச் செயலும் இவ்வளவு சிறப்புடன் விளங்கமுடியாது என்பது உறுதி. திருவள்ளுவனார்

"இல்லதென் இல்லவள்
மாண்பானால் உள்ளதென்
இல்லவள் மாணாக் கடை"

"தற்காத்துத் தற்கொண்டான்
பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள்
பெண்

என்று வகுத்த இலக்கணத்தின்படி விளங்கிவரும் அம்மையார் அவர்களால்தான் அறப்பணிகளும் பண்ணையின் மேம்பாடும் மேலும் மேலும் விளங்குவதாயிற்று என்பது உண்மை. அவர்களோடு கூடி நடத்தின இல்லற நல்லற வாழ்வில் 50 ஆண்டுகள் திறம்பட வாழ்ந்த காலையில் பல்லாண்டு கழிந்தும் நன்மகப்பேறின்மையால் பண்ணையின் வளர்ச்சிக் கருதி ஒரு நன் மகனைப் பெறவேண்டுமென்று நீண்ட நாள் சிந்தித்து திரு. இராமலிங்கம் அவர்களும் திருமதி கௌரியம்மாள் அவர்களும் ஒரு முடிவு செய்தார்கள். இப்பெருமகனாரின் முதல் மனைவியாகிய திருமதி மீனாட்சிசுந்தராம்பாள் அவர்களுக்குப் பிறந்த ஒரே மகளான தருமாம்பாள் அவர்களுக்கும் திருச்சி மாவட்டம் திருத்தவத்துறை (லால்குடி) திருக்குறள் வேள் செந்தமிழ்ப் புரவலர், சைவ மெய்யன்பர், பெருங்குடிப் பிறப்பினர் கற்றுத்துறைபோய நற்றவச்சீலர், இலக்கண இலக்கிய வரம்பு

கண்டவர், பல்லறம் புரியும் பண்பினர் வாரி வழங்கும் வள்ளல், விருந் தோம்பும் பெற்றியர், பெருந்தன்மை யுடையர் ஆய உயர்திரு. G. வரதராசம் பிள்ளை அவர்களுக்கும் இரண்டாவது மகனாய் பிறந்த செல்வ சிரஞ்சீவி இராசசேகரன் என்ற இளைஞனை உற்றார் உறவினர் அறிய வைதீகச் சடங்கு சிறப்புற பெரு விழாக்கோலம் கொண்டு 1953ஆம் ஆண்டு மே மாதம் 24 ஆம் நாள் கொள்மகனாக (சுவீகாரமாக) ஏற்றுக் கொண்டார்கள். அது முதற் கொண்டு சிரஞ்சீவி இராசசேகர னுடைய வளர்ச்சியிலும் கல்வியிலும் கருத்தூன்றி வளர்த்து திருமணம் செய்வித்து மகப்பேறு கண்டு களிக்கும் பெருவாழ்வினையும் பெற்று மகிழ்ந்தார்கள். திரு. இராமலிங்கம் அவர்களும் திருமதி கௌரியம்மாள் அவர்களும் திரு. இராமலிங்கம் அவர் களுடைய சிறிய தந்தையார் மகன் திரு. முத்துக்குமார் அவர்களுடைய மகள் செல்வி புவனேசுவரியை தங்கள் அபிமான புத்திரியாய் ஏற்றுக் கொண்டார்கள். செல்வி புவனேசுவரியை திருமதி கௌரி யம்மாள் அவர்கள் வளர்த்து வருகிறார்கள். இவ்வாறு எல்லாப் படியாலும் குறைவின்றி நிறைவு பெற்று நல்வாழ்வு வாழ்ந்து வந்து 72 ஆண்டுகள் நிறைநாட் செல்வராக விளங்கி இறவாப் புகழுடம்பை நிலையா உலகில் நிலைநிறுத்தி பூத வுடலினின்றும் பிரிந்து பொன்னுட லாகிய தேவ உடலோடு 1969 ஆம் ஆண்டு ஜூன் மாதம் 27 ஆம் நாள் வெள்ளிக்கிழமையன்று இறைவ னுடைய திருவடி நீழலில் நிறை வெய்தினார்கள். உயர்திருவாளர் இராமலிங்கம் அவர்களுடைய நல்வாழ்வு நாட்டுக்கும் மொழிக்கும் சமயத்திற்கும் சமுதாயத்திற்கும் எத்தனை பெரும் பயனைச் செய்தது என்பதனை கருதும்போது "இசை பட வாழ்வாரே வாழ்வார் வசைபட வாழ்வாரே வாழாதவர்" என்ற திருக்குறளின்படி நம் நெஞ்சில் நின்று நிலவுகிறது.

"ஒன்றா உலகத் துயர்ந்த
புகழல்லால்
பொன்றாது நிற்ப தொன்றில்"

என்ற பொன்னான பொருள் மொழிப் படி அவர்களுடைய அறம்பல செய்த புகழுடம்பு நிலைத்து நிற்கவும் அவர்க ளுடைய ஆத்மா அமைதி பெறவும் அவர்கள் வளர்த்த தாசில்பண்ணை இன்னும் பல பணிகளைச் செய்து மேலோங்கவும் "வழி வழிச்சிறக்க நின்கொற்றம்" என்ற மூதுரைபடி வளர்ந்து பயன்படவும் எல்லாம்வல்ல முழுமுதற் பொருளாகிய முருகப்பெரு மானுடையதிருவருள் துணைபுரிவதாக

நன்றி

"ஆரா வியற்கை அவா நீப்பின்
அந்நிலையே
பேரா வியற்கை தரும்"
—திருக்குறள்

"என்றும் இன்பம் பெருகும்
இயல்பினால்
ஒன்று காதலித்து உள்ளமும்
ஓங்கிட
மன்று ளார்அடியார் அவர்வான்
புகழ்
நின்றது எங்கும் உலகெலாம்"
— திருத்தொண்டர் புராணம்

"தென்னாடுடைய சிவனே போற்றி"

— முற்றும் —



காவிரிப்பூம்பட்டினம் (மேலையூர்) தாசில் பண்ணை
திரு. இரா. இராசசேகரன் அவர்கள்
குடும்பம்



காவிரிப்பூம்பட்டினம் (மேலையூர்)
தாசில் பண்ணை
செல்வி புவனேசுவரி

M. Bhaktavatsalam

"Mallika"
15, Warren Road,
MADRAS-4

27—2—70.

திரு. கே. எஸ். இராமலிங்கம் பிள்ளை புகழ் பெற்ற தாசில் பண்ணையில் குடி புகுந்தவர். இந்த பண்ணையின் பெருமைக்கேற்ற வகையில் இந்த பெரியார் சிறப்பு வாய்ந்தவராக விளங்கினர். ஆனல் இவரிடம் குடும்பத்திற்கேற்ற பெருந் தன்மையோடு எளிமையும் அடக்கமும் காணப் பட்டன, பண்ணை ஏற்றுக்கொண்ட பள்ளியின் வளர்ச்சியில் திரு. பிள்ளை அவர்கள் மிகுந்த அக்கரையும் உற்சாகமும் காட்டி வந்தார். பள்ளி விழா ஒன்றில் நான் கலந்துகொண்டபோது திரு. இராமலிங்கம் பிள்ளை அவர்களின் அறிவாற்றலை நான் நேரில் கண்டேன். திரு. பிள்ளை அவர்களின் மறைவு எல்லோருக்கும் மிகுந்த வருத்தத்தை அளித்தது. ஆனல் ஸ்ரீமதி கௌரி அம்மாள் அவர்கள் எல்லோருக்கும் ஆறுதலளிக்கும் முறையில், பர்த்தாவுக்கு ஏற்ற கற்புக்கரசி என்ற முறையில் பண்ணையையும், தர்ம ஸ்தாபனங்களை யும் நன்கு கவனித்து வருவது பாராட்டுதலுக்கு உரியது.

என் நல்வாழ்த்துக்களை தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

(ஒ-ம்) எம். பக்தவத்ஸலம்

Smt: MARAGATHAM CHANDRASEKHAR

*Commissioner for Linguistic Minorities India.*
*40, Hamilton Road,*
*Allahabad-2.*

*27th January, 1970*

நான் 1964-ம் வருஷம் ஒரு விழாவில் கலந்துகொள்ள காவிரிப்பூம்பட்டினம் சென்றபோது காலஞ்சென்ற திரு. K. S. ராமலிங்கம் அவர்களை சந்திக்க ஒரு சந்தர்ப்பம் கிடைத்தது. என் கணவரும் நானும் முதன் முதலாக அவரிடம் பேசும்போதே அவரிடம் எங்களுக்கு ஒரு மரியாதை கலந்த பிரியம் ஏற்பட்டது. காரணம், அவருடைய உயர்ந்த குணமும், தமிழ்ப் பாண்டித்தியமும். அதன் பிறகு அவரை அடிக்கடி சந்திக்க சந்தர்ப்பங்கள் கிடைத்தன. மறைந்த திரு. ராமலிங்கம் அவர்கள் எந்த விஷயத்தை பற்றி பேசினாலும் தான் கற்ற சாஸ்திரங்களை சான்றாகக் கூறுவார். அடக்கமே உருவான நண்பர் திரு. ராமலிங்கம், தமிழ் இலக்கண இலக்கிய ஆராய்ச்சிகளோடு சமஸ்கிருதத்திலும் பாண்டித்தியம் பெற்றிருந்தார். சமயா சமயங்களில் சமஸ்கிருத கவிகளை உவமைக்கு எடுத்துரைப்பார். கல்விக்காக பெரும்பணி ஆற்றியிருக்கிறார். கல்வி நிலையங்கள் கட்டுவதிலும், அவைகளை செவ்வனே நடத்துவதிலும் மிகவும் ஆர்வம் படைத்த அவர் பலகஷ்டங்களுக்கிடையே, தங்களின் மேலையூர் ஆரம்பப் பள்ளியை, சீனிவாச உயர்நிலைப் பள்ளியாக உயர்த்தி, மேலையூர் (காவேரிபூம்பட்டினம்) மக்களுக்கு உதவியது ஒரு சான்றாகும். பூம்புகாரில் தமிழ் கல்லூரி அமைக்க நிலங்கள் கொடுத்துதவியதையும் தமிழ் மக்கள் என்றென்றும் மறக்கமுடியாது. அதோடு அந்தகாலத்தில் காலஞ்சென்ற R. K. சண்முகம் செட்டியார் அவர்களின் தலைமையில் பூம்புகாரில் "சிலப்பதிகாரம் மாநாடு" நடத்த காரணகர்த்தாவாயிருந்தவர் நம் நண்பர் திரு. இராமலிங்கம் என்பதை அறியும்போது அவரின் தமிழ் ஆர்வத்தை போற்றாமலிருக்க முடியாது. இவர் தெய்வ வழிப்பாட்டிலும் நியமத்துடன் நடந்துக் கொள்வதுடன் நண்பர்களை ஒவ்வொரு முறையும், முதன்முறைகாணும் விருந்தினர்போல் சந்தோஷத்தோடு வரவேற்று, உபசரிக்கும் அன்புகனிந்த உள்ளத்தைப் படைத்தவர். திரு. ராமலிங்கம் அவர்கள் நம்மை விட்டு பிரிந்த போதிலும் அவருடைய அறிய சேவைகளை நாம் மறக்க முடியாது. அவர் ஆத்மா சாந்தியடைய பிரார்த்தித்து முடிக்கிறேன்.

[ஒ-ம்] ம. சந்திரசேகர்



காவிரிப்பூம்பட்டினம் (மேலையூர்) தாசில் பண்ணை சமயப்பணி
ஸ்ரீ செங்கழுநீர் விநாயகர்



காவிரிப்பூம்பட்டினம் (மேலையூர்) தாசில் பண்ணை சமயப் பணி
அகத்தீசுவரர் ஆலயம்

## திரு. தி. மு. நாராயணசாமிப்பிள்ளை M. A., B. L.,

திருச்சி

நமது தென்னிந்தியாவில் சோழவளநாட்டில் சீரும், சிறப்பும் பேரும் புகழும் ஒருங்கே வாய்ந்து அமையப்பெற்ற குடும்பங்களுள் லாலுகுடி திரு. தம்பாச்சியாபிள்ளை குடும்பம் சிறந்தது. அதைப் போன்றே பூம்புகாரில் தாசில்பண்ணை குடும்பமும் சிறந்ததே.

திரு. R. ராஜசேகரன் B. Sc , B. L., அவர்கள் திரு. தம்பாச்சியா பிள்ளை அவர்களின் கொள்ளுப் பேரன். தாசில்பண்ணை உயர்திரு K. S. ராமலிங்கம் பிள்ளை அவர்களின் சுவீகார புத்திரர். உயர்திரு ராமலிங்கம் பிள்ளை அவர்கள் மிகவும் தூய்மை உடையவர் ; அவர்களது பூஜையும், தியானமும் எல்லோராலும் போற்றப்படுபவை. அவர்களுடைய மனைவியார் திருமதி R. கௌரி அம்மாள் அவர்கள் மிகவும் சாமர்த்தியம் படைத்தவர். எதையும் மனத்தில் வாங்கிப் பொதுமக்களுக்கு ஏற்றவாறு குடும்பத்தை ஒற்றுமையாக நடத்தும் செல்வக் குலமணி ஆவர்.

வரலாற்றுச் சிறப்புடைய பூம்புகார் நகரிலே கீழ்த்திசைக் கல்லூரி ஒன்று தொடங்கக் கருதியபோது, அதற்கு இடம் இல்லாத குறை இருக்கக் கண்டு, அக்கல்லூரிக்கு ஆறு ஏக்கர் நிலம் மனம் உவந்து கொடுத்தார்கள். அறநிலையத் துறைப் பொறுப்பாக நானும் திருவாளர் திருவெண்காடு சீனிவாசம்பிள்ளை அவர்களும் அதுபற்றி அவர்களிடம் நெருங்கிய அறிவித்தபோது, உள்ளக் கிளர்ச்சியுடன் முகம் மலர்ந்து பூம்புகார் கீழ்த்திசைக் கல்லூரியை உண்டாக்கும் பொதுத் தொண்டுக்கு அவர்கள் உதவியது அவர்கள் உயர் பண்பை விளக்கும் பெரும் சான்றாகும். அக்கல்லூரி இப்போது மிகச் சிறப்பாக விரிவடைந்து மக்களுக்குத் தொண்டு புரிந்து வருகிறது.

1952-ஆம் ஆண்டிலே பூம்புகாரிலே அந்நகரின் சிறப்பும் கண்ணகி கோவலன் வாழ்ந்த பெருமையும், சோழப் பெருந்தலைநகராகவும், துறைமுகமாகவும் விளங்கிய பூம்புகாரின் பெருமையை தென்னிந்தியருக்கு மீண்டும் அறிமுகப்படுத்திய ஒரு பெரிய திருவிழாவான " சிலப்பதிகார மகாநாடு " நடத்தினார்கள். அப்போது

திரு, R. K. ஷண்முகம் செட்டியார் அவர்கள் தலைமை தாங்கி மிகவும் வியந்து நயந்து பாராட்டிப் பேசினர்கள். அதிலிருந்து இந்நகருக்குத் தொடர்ந்து சிறப்புக்கள் வளரலாயின.

22-8-65 அன்று பூம்புகாரிலே நடந்த உயர்நிலைப் பள்ளி விழாவிலே எனக்கு ஒரு பணி அளித்தனர். (இந்த உயர்நிலைப் பள்ளியே அவர்கள் பெரு முயற்சியாலும் தாராள நன்கொடையாலும் நடைபெற்று வருகிறது.) திருவாளர் K. S. ராமலிங்கம் அவர்களின் திரு உருவப்படத்தைத் திறந்துவைத்தேன். நான் அக் குடும்பத்தையும் அவர்களையும் பற்றி முழு விவரங்களையும் எடுத்துரைக்தேனே என்லவோ தெரியவில்லை. நான் என்ன சொல்லியிருந்தாலும் அவை அவர்களுக்குரிய பண்புகளை முழுவதும் என் பேச்சினல் எடுத்து உரைத்திருக்க முடியாது. அதைப் போலவே சொல்ல முடியாத அளவில் பண்பில் சிறந்தவர்கள். சிலப்பதிகார மகாநாட்டில் அவர்கள் ஆயிரம் ஆயிரமாக செலவு செய்து - வந்தவர்களையெல்லாம் உபசரித்து விருந்தளித்தது சொல்லிற்கு அடங்காத செயல்.

இப்போது நமது தம்பி திரு. R. ராஜசேகரன் அவர்கள் ஒரு தவப்புதல்வர். தாசில்பண்ணை திரு. K. S. ராமலிங்கம் அவர்களுக்கும் திருமதி R. கௌரியம்மாள் அவர்களுக்கும் சுவீகார புத்திரராக அமைய வாய்த்தது அந்தக் குடும்பத்திற்கே மேலும் பெருமையை அளிக்கும் திருவிளக்காகும்.

தம்பி ராஜசேகரும் அவர்கள் குடும்பமும் எந்நாளும் திடகாத்திரத்துடன் வாழ அன்னை ஸ்ரீ அகிலாண்டேஸ்வரி அருள்புரியுமாறு பிரார்த்திக்கின்றேன்.

இங்ஙனம்

(ஒப்பம்) தி. மு. நாராயணசாமி

சிலம்புச்செல்வர்

## திரு. ம. பொ. சிவஞானம் M. L. A., சென்னை

"பூம்புகார்" என்பது அழகிய பெயர் மட்டுமல்ல; ஆசியாவிலேயே மிகவும் பெரியதாக விளங்கிய—அழகியதாகவும் விளங்கிய துறைமுக நகரத்தின் பெயராகவும் விளங்கியது. ஒரு காலத்திலே இதனை,

"அகழால் அமைந்த வேலை அவனிக்கு மாலைப்
புகழால் அமைந்த புகார்"

என்று புகழ்ந்துரைத்தார் இளங்கோவடிகள். இந்தப் புகார் நகரமே, சோழர் பேரரசின் தலைநகராகவும் இருந்தது. அந்தக் காலத்தில்தான் சிலப்பதிகாரக் கதை நிகழ்ந்ததாக அறிகிறோம்.

இத்துணைச் சிறப்புகளெல்லாம் பெற்றிருந்த புகார் நகரம், பின்னொரு காலத்தில் கடலால் கொள்ளப்பட்டுவிட்டது. அதனால், அந்த அழகிய புகார் மறைந்து, இன்று மீனவர் வாழும் குடிசைப் பிரதேசமே அந்த இடத்தில் காட்சியளிக்கின்றது.

பாழ்பட்டுவிட்ட அந்தப் புகாரைத் திரும்பவும் பழைய நிலைக்குக் கொண்டுவர விரும்பினார், ஒரு பெருமகனார் — தமிழ்மகனார்! அவர், காருகுடியில் பிறந்து, பூம்புகார் மேலையூரில் குடிபுகுந்து, "தாசில் பண்ணை"யாரின் மாப்பிள்ளையாகி மிகுதி செல்வத்தோடும், செல்வாக்கோடும் வாழ்ந்தார். அவர் பெயர், இராமலிங்கனாராகும்.

அருட்பிரகாச வள்ளலாரை நினைவூட்டும் பெயர் தாங்கிய அப்பெரியார், 71 வயதுவரை வாழ்ந்து அண்மையில் மறைந்தார். ஆம்; நிறைவாழ்வு வாழ்ந்தார். ஆனால், அவர் வாழ்விலும் ஒருகுறை நேர்ந்துவிட்டது. அதாவது புகார் நகரைப் பெருமைப் படுத்தவும், புதுமைப் படுத்தவும், அங்கொரு கண்ணகி கோயில் நிறுவவும் அவரெடுத்த பணி முடியுமுன்னரே, அவரது வாழ்க்கை முடிந்துவிட்டது. இருப்பினும் அவர் வாரிசு விடாமல் சென்றவரல்லர்! இராஜசேகரன் என்ற தமது செல்வரை வாரிசாக விட்டுச் சென்றுள்ளார். அவர், இராமலிங்கனாரின் செல்வத்திற்கு மட்டும் வாரிசாக இல்லாமல், அன்னாரின் செல்வாக்குக்கும் வாரிசாக வரும் தகுதி படைத்தவர். பி. எஸ். சி., பி. எல். படித்தேறி வழக்கறிஞராக தொழில் புரியும் இராசசேகரன் தமது தந்தையார் குறையாக விட்டுச்சென்ற பணிகளையெல்லாம் நிறைவு படுத்துவார் என்பதில் ஐயமில்லை.

அமரர் இராமலிங்கனர் மனைவியார் திருமதி. கௌரியம்மாள் நல்ல பண்புடையவர். தெய்வத்திடம் போலவே, தமரிடமும் பக்தி யுடையவர்.

இவ்வம்மையாரின் தூண்டுதலால், துணையால், தொண்டால் 1951-ஆம் ஆண்டில், பூர்புகாரிலே தொடர்ந்து மூன்று நாட்கள் சிலப்பதிகார மாநாடு நடத்தினர் தாசில் பண்ணையின் மாப்பிள்ளை யான இராமலிங்கனர்.

அந்த மாநாடு நடத்துவதற்கு ஆரம்ப முதற்கொண்டு ஒவ்வொரு சிறு சம்பவத்திலும் எனது ஆலோசனையைக் கேட்டனர், இராமலிங்கம் தம்பதிகள். பூம்புகார் சிலப்பதிகார மாநாட்டை யொட்டி, அந்தப் பகுதியிலே, அடிக்கடி இந்திர விழாவும் நடை பெற்று வருகின்றது. அது மட்டுமா? மத்திய அரசினர், அங்கே கண்ணகித் தெய்வத்தின் சிலையை நிறுத்தி, கண்ணகி வழிபாட்டை புதுப்பித்துள்ளனர்.

தமிழக அரசும், "சிலப்பதிகார கலைக்கூடம்" ஒன்றை அமைத்து வருகிறது. இவ்வளவிற்கும் 1951-ல் தாசில்பண்ணை இராமலிங்கனர் நடத்திய சிலப்பதிகார மாநாடே தொடக்கமாகும்.

பூம்புகாரில் கண்ணகிக்குக் கோயில் எடுக்கவும் அன்பர் இராமலிங்கனர், தமது தரும பத்தினியார் திருமதி கௌரியம்மாளின் தூண்டுதலால் பொறுப்பேற்றர்.

1968-ல் அப்போது பொதுப்பணித் துறை அமைச்சராக இருந்த தற்போது தமிழக முதல்வராக இருக்கின்ற கலைஞர் மு. கருணாநிதி அவர்களைக் கொண்டு 'பத்தினிக் கோட்டம்' அமைவதற்கு அடிக்கல் நாட்டு விழா நடத்தினர்.

ஆம்! அன்று கோமன்னன் செங்குட்டுவன் வஞ்சி மாநகரிலே 'பத்தினிக் கோட்டம்' அமைத்தான். இன்று. தாசில்பண்ணை இராமலிங்கம் தம்பதிகளின் முயற்சியால், தமிழக அரசின்-மக்களின் ஆதரவோடு புகாரிலே பத்தினிக்கோட்டம் எழுகின்றது!

இவ்வளவு சிறப்புக்கும் காரணமான இராமலிங்கனரை, நாடு நன்றியோடு நினைக்கவேண்டும். தமிழ்ப் பண்புகளெல்லாம் தழைக்க வேண்டுமானல், இராமலிங்கனரைப் போன்றும் அவரது மனைவி கௌரியம்மாளைப் போன்றும் நாட்டிலுள்ள தம்பதிகளெல்லாம் தமிழ்ப் பற்றுடையவர்களாக வேண்டும்

இராமலிங்கனர் புகழ் வாழ்க!

(ஒ-ம்) ம. பொ. சிவஞானம்



காவிரிப்பூம்பட்டினம் (மேலையூர்) தாசில் பண்ணை சமயப் பணி
ஸ்ரீபிரியாவிடங்கேசுவரர் ஆலயத்தின் நுழைவாயில்



காவிரிப்பூம்பட்டினம் (மேலையூர்) தாசில் பண்ணை சமயப் பணி
திரு பிரியாவிடங்கேசர் - கிருபாகடாட்சி
திருமுத்தியப்பர் - முல்லைவன நாயகி

**திரு. மு. வரதராசன்**
*தமிழ்ப் பேராசிரியர்*

செல்லம்மாள் தெரு
சென்னை 30
13-3-70

அன்புடையீர் !

வணக்கம்.

தங்கள் கணவரின் பிரிவு அறிந்து வருந்தினேன். அவர்தம் ஆன்மா அமைதியுறுக.

அவர் 1951-ல் சிலப்பதிகார மாநாடு பூம்புகாரில் நடைபெற்றபோது வரவேற்புக் குழுத்தலைவராக இருந்து ஆற்றிய தொண்டு போற்றுதற்குரியது. அவருடைய நெஞ்சில் இருந்த தமிழ் உணர்வும் தமிழ்ப் பண்பாட்டு ஆர்வமும் பாராட்டி நினைவதற்கு உரியன. வேலூர் மட்டும் அல்லாமல், தமிழகத்தின் வரலாறே ஒரு நல்ல தொண்டரை—தமிழன்பரை—இழந்துவிட்டது.

இறைவன் தங்கட்கு ஆறுதல் நல்குக.

அன்புள்ள,

**(ஒ-ம்) மு. வரதராசன்**

# சிலம்பு விழா!

திரு. கி. வா. ஜகந்நாதன் M. A.

இரண்டு ஆண்டுகளுக்கு முன் சென்னையில் தமிழ்ப் பெருவிழா நடைபெற்றது. உலகத் தமிழ் மாநாடு அது. உலகிலுள்ள பல நாடுகளில் இருந்தும் தமிழ் ஆராய்ச்சி வல்லுநர்கள் வந்தார்கள். சென்னைப் பல்கலைக் கழகத்தில் பலவகை ஆராய்ச்சிக் கருத்தரங்குகள் நடைபெற்றன. அவைகளை இந்த மாநாட்டிற்கு உயிரானவை என்று சொல்ல வேண்டும். ஆனல் எல்லோருமே ஆராய்ச்சியில் ஈடுபடமுடியுமா? ஆகவே, பொதுமக்கள் யாவரும் இனிது கேட்டு இன்புறும்படியான நிகழ்ச்சிகளை சென்னைத் தீவுத்திடலில் ஏற்பாடு செய்தார்கள். அந்த இடத்தில் பூம்புகார் என்ற பெயரில் ஒரு புதிய அலங்கார நகரமே ஏற்பட்டது பழைய காலத்தில் இருந்த பூம்புகாரின் பெருமையைக் காட்டுவது போல அந்தப் பெரிய அலங்காரக் கொட்டகை இருந்தது. காவிரிப் பூம்பட்டினமாகிய பூம்புகாரில் கடல் இருக்கிறது. சென்னையில் எழும்பிய பூம்புகாரில் மக்கட் கடலைக் கண்டோம்.

பூம்புகாரில் ஒருநாள் பேசினேன். அப்போது இருபது ஆண்டுகளுக்கு முன் உண்மைப் பூம்புகாரில் நடைபெற்ற ஒரு பெரிய தமிழ்த் திருவிழா நினைவுக்கு வந்தது. சென்னையில் கூட்டம் சேர்வது அரிய காரியம் அன்று. உலகத் தமிழ் மாநாட்டுக்காகச் செய்த விளம்பரமும் அரசினர் முயற்சியும் மிகவும் அதிகம். அந்த முயற்சிகளுக்கு ஏற்றபடி பெருங் கூட்டம் கூடியது வியப்பன்று.

ஆனல், நான் குறிப்பிட்ட அந்தப் பழைய திருவிழாவில் கூடிய கூட்டமும் அப்போது நடந்த மாநாடும் இன்று நினைத்தாலும் வியப்பைத் தருகின்றன. 1951ஆம் ஆண்டு அது. ஜூன் மாதம் 15, 16, 17 ஆகிய மூன்று நாட்களில் அந்த விழா நடைபெற்றது; சிலப்பதிகார மாநாடு நடந்தது. பூம்புகாரில் பழங்காலத்தில் இந்திரவிழா நடைபெற்று வந்த தென்று சிலப்பதிகாரம் கூறுகிறது. அன்று அந்தக் காவிரிப்பூம்பட்டினம் கரிகாலனுக்கு ஆட்சி பீடமாக இருந்தது. மிக விரிந்த நகரமாக விளங்கியது. இன்றே அது மிகச்சிறிய ஊர். இருபது ஆண்டுகளுக்கு முன்

இப்போதுள்ள வசதிகள் கூட இல்லாமல் இருந்த ஊர். அந்தச் சிற்றூரில், சோழ மன்னன் விழா நடத்தினுல் எப்படி இருக்குமோ அப்படி இருந்தது அந்த மாநாடு.

ஆயிரக் கணக்கில் மக்கள் கூடியிருந்தார்கள். தமிழ் நாட்டில் புகழ் பெற்றிருந்த புலவர்கள் பலர் வந்திருந்தார்கள். மூன்று நாள் கூட்டத்திற்கும் ஸர். ஆர். கே. சண்முகம் செட்டியார் தலைமை தாங்கினுர். அவருக்குச் சிலப்பதிகாரத்தில் நல்ல ஆராய்ச்சி உண்டு. இந்திய அரசில் நிதியமைச்சராக இருந்தவர் அவர். அவருக்கு இருந்த தமிழ்ப் புலமை அந்த மாநாட்டில் நன்கு வெளியாகியது. அவரே சிலப்பதிகாரப் பதிப்பு ஒன்றை வெளியிட்டிருந்தார். அவர் மாநாட்டில் வீற்றிருந்தது ஒரு பேரரசர் தலைமைதாங்கி நடத்துவது போலவே இருந்தது. கரிகாலச் சக்கரவர்த்தி இல்லாவிட்டாலும் அந்த மாநாட்டுக்கு ஒரு சக்கரவர்த்தி வந்திருந்தார். யானை ஊர்வலம் நடந்தது. ஆனுல், அந்தச் சக்கரவர்த்தி யானையின் மேல் ஏறவில்லை, சிலப்பதிகாரத்தையே அலங்கரிக்கப் பெற்ற யானையின்மேல் வைத்து ஊர்வலமாக வரச் செய்தார்கள். அந்தச் சக்கரவர்த்தி யார் தெரியுமா? நாதசுரச் சக்கரவர்த்தி திருவாவடுதுறை இராசரத்தினம் பிள்ளைதான். அவருடைய நாதசுர வாத்தியத்தோடு ஊர்வலம் நடைபெற்றது. அரசர் ஒருவரும் வந்திருந்தார். நாதசுர ராஜா திருவெண்காடு டி. பி. சுப்பிரமணிய பிள்ளையும் தம்முடைய இன்னிசையினுல் ஊர்வலத்துக்குச் சிறப்பை அளித்தார். இவ்வாறு யானை ஊர்வலத்துடன் தொடங்கிய மாநாடு மூன்று நாட்களும் ஜாம் ஜாம் என்று நடந்தது.

சிலப்பதிகாரம் மூன்று காண்டங்கள் அடங்கியது. புகார்க் காண்டம், மதுரைக் காண்டம், வஞ்சிக்காண்டம் என்பவை அவை. ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு காண்டத்தைப் பற்றி முதலில் ஒன்றரை மணி நேரம் ஒரு புலவர் பேசினுர். காலையும் மாலையும் சொற்பொழிவுகள் நடைபெற்றன. காலையில் ஒன்றரை மணிப் பேச்சுத்தான் முதலில். பிறகு ஐந்து ஆறு புலவர்கள் ஒவ்வொருவரும் அரை மணி நேரம் பேசினுர்கள்.

சிலப்பதிகார விழா வெள்ளிக் கிழமையில் தொடங்கியது. வெள்ளிக் கிழமை மங்கலமான நாள். சிலப்பதிகாரமும் மங்கல வாழ்த்துடன் தொடங்குகிறதல்லவா? அந்த நூலைப் பற்றிய விழாவும் மங்கல நாளில் தொடங்கியது பொருத்தமாக இருந்தது. பத்தினியின் திருவடிவம் ஒன்றை திரு. ராஜா. சர். முத்தையாச் செட்டியார் அவர்கள் திறந்து வைத்தார்கள். அவரும் ஒரு ராஜா என்பதைக் கவனிக்கவேண்டும். புகார்க் காண்டத்தைப் பற்றி முதல் ஒன்றரை மணிப் பேச்சை டாக்டர் மு. வரதராசனுர் நிகழ்த்தினுர். அப்போது அவர் பச்சையப்பன் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராக இருந்தார். அது மணியான பேச்சு. வரவேற்பு முதலியவை இருந்தமையால் மற்றப் புலவர்களின் சொற்பொழிவுகள்பிற்பகலில் நடைபெற்றன.

ஐந்து புலவர்கள் அப்போது அரை மணி நேரம் பேசினார்கள். பிறகு இசையரசு திரு. கண்டபாணி தேசிகர் அவர்களின் இன்னிசை நடைபெற்றது. சிலப்பதிகாரத்திலுள்ள மங்கல வாழ்த்துப் பாடலை மிக மிக இனிமையாக இசைத்தார்.

இரண்டாவது நாள் மதுரைக் காண்ட நாள். திரு. டி. எஸ். அவிநாசிலிங்கம் அவர்கள் தொடக்கவுரை ஆற்றினார். அன்று ஒன்றரை மணிப் பேச்சை சென்னை பல்கலைக் கழக தமிழ்ப் பேராசிரியராக இருந்த திரு. ரா. பி. சேதுப்பிள்ளை பேசினார். அவருக்கே உரிய அலங்கார நடையில் அந்தச் சொற்பொழிவு அமைந்திருந்தது. பிறகு காலையில் இரு புலவர்களும் மாலையில் ஐந்து புலவர்களும் பேசினார்கள்.

மூன்றும் நாள் வஞ்சிக் காண்ட நாள். அன்று வஞ்சிக்காண்டத்தைப் பற்றி ஒன்றரை மணி நேரம் எளியேன் பேசினேன். பேசுவதற்கு முன் தலைவர் திரு. சண்முகம் செட்டியார், பாடல்களை இசையுடன் பாடவேண்டுமென்று பணித்தார். வஞ்சிக்காண்டம் ஒரு சங்கடமான காண்டம். அதில் சேரன் செங்குட்டுவன் வடநாடு சென்று இமயமலையில் கல்லெடுத்து வந்து கண்ணகியின் படிமம் சமைத்து வஞ்சி மாநகரில் திருக்கோயில் கட்டி நிறுவிய கதை வருகிறது. அங்கே சேரமான் வடநாட்டு மன்னர் சிலருடன் போர் செய்கிறான். ஆராய்ச்சிக்காரர்களும் அரசியல் வாதிகளும் வஞ்சிக்காண்டத்தைப் பற்றியே போர் நடத்தினார்கள், அந்தக் காலத்தில். 'வஞ்சிக் காண்டம்' சிலப்பதிகாரத்தில் தேவையற்ற பகுதி, மதுரைக் காண்டத்தோடு முடிந்தால்தான் அற்புதமான துன்பியற் காவியமாக விளங்கும். வஞ்சிக் காண்டம் ஆட்டின் அதர்போல வேண்டாத தொன்று?— இப்படி ஆராய்ச்சிக் காரர்கள் வாதித்தார்கள். 'வடவரை தமிழர் வணங்கச் செய்த வீரக்கதை அது; வாடை என்றால் கதவை அடைப்போம், தென்றல் என்றால் திறந்து வைப்போம்', என்று அரசியல் வாதிகள் சொற்போர் செய்தார்கள். அந்தக் காண்டத்தில் கதாநாயகனாகிய கோவலனுக்குத் தலைமை இல்லை. கண்ணகிக்கும் அப்படியே. சேரன் செங்குட்டுவனே அந்தக் காண்டத்தின் நாயகனாக விளங்குகிறான்.

இந்த சங்கடமான காண்டத்தைப் பற்றிப் பேச நேர்ந்ததே என்று முதலில் வருத்தப்பட்டேன். பிறகு ஒரு நல்ல கருத்துத் தோன்றியது. சாகுந்தலத்துக்கு ரவீந்திரநாத தாகூர் ஓர் அரிய முன்னுரை எழுதியிருக்கிறார். சகுந்தலை எப்படி வர வரத் தியாகத்தால் உயர்கிறாள் என்பதைக் காளிதாசன் அமைத்துக் காட்டும் நுட்பத்தை அதில் அவர் தெளியவைத்திருக்கிறார். அதன் நினைவு எனக்கு உண்டாயிற்று, அதே முறையில் வஞ்சிக் காண்டத்தை நோக்கினேன். ஒரு சிறந்த கருத்தை வெளியிடுவதற்கு இந்த வாய்ப்பை எனக்கு இறைவன் அளித்தான் என்றே மகிழ்ந்தேன்.

இரண்டாம் நாள் இரவு நெடுநேரம் சிலப்பதிகாரத்தை மீண்டும் ஒரு முறை படித்து வேண்டிய குறிப்புக் களை எடுத்துக்கொண்டேன்.

மூன்ருவது நாள் வஞ்சிக் காண்டத் தைப்பற்றி ஒன்றரை மணிநேரம் பேசினேன். புகார்க் காண்டத்தில் பொறையுடைய பத்தினியாக இருந்த கண்ணகி, மதுரைக் காண்டத்தில் வீரபத்தினி ஆகிருள்; வஞ்சிக் காண்டத்தில் பத்தினித் தெய்வ மாகிருள்.

வஞ்சிக் காண்டத்தின் தொடக்கத் தில் கண்ணகி நெடுவேள் குன்றம் அடிவைத்து ஏறி நிற்கிருள்; நிலத் தினும் உயர்ந்து வானகத்துக்கு ஏறும் நிலையில் நிற்கிருள். காட்டி லுள்ள குறிஞ்சி நில மக்கள் ஒரு நகிலுடன் நிற்கும் அப்பெருமாட்டி யைக் கண்டு "வள்ளி போல்வீர்" என்று விளித்து "ஏன் இப்படி வந்தாய்?" என்று கேட்கிருர்கள். குறிஞ்சி நில மக்களுக்கு அவர்கள் தொழும் தெய்வப் பெண்ணுகிய வள் ளிப்போலத் தோற்றுகிருள் கண்ணகி.

மதுரையை, "ஒட்டேன் அரசோ டொழிப்பேன்" என்று எழுந்த கண்ணகி இப்போது சீற்றம் ஒழிந்து எல்லாவற்றிற்கும் விதியே காரணம் என்பதை உணர்ந்து ஆறி நிற்கிருள்; கழிவிரக்கம் அவள் நெஞ்சில் குமிழிடு கிறது. "வல்வினை வந்துருத்த காலை, மணமதுரையோடு அரசு கேடுற, கணவனை இழந்த கடுவினை யாட்டியேன்" என்று சொல்கிருள். அவள் இப்போது கொடுங்கோல் மன்னன் ஆளும் மதுரையாக அந் நகரை நினைக்கவில்லை. 'பெண்டிரும் உண்டுகொல், சான்ருேரும் உண்டு கொல்!' என்று கேட்டாளே, அத்தகைய மதுரையாக எண்ண வில்லை. மணமதுரையாக நினைக் கிருள். அந்த நினைப்பின் அடித் தளத்தில், எத்தனையோ இடங்களில் திருமணங்கள் நடைபெற்றிருக்குமே! நடைபெற இருக்குமே! அந்த மணவினைகள் நடைபெருமல் அழகிய மதுரையை எரித்து விட்டோமே!' என்று கழிவிரக்கம் ஊற்றெடுத்திருக்கவேண்டும். பாண்டியனைச் சொல்லும்போது முன்பு, "தேரா மன்ன" என்றவள் இப்போது அரசு என்று மட்டும் சொல்கிருள். இத்தகைய மண மதுரையும் அதன் அரசனும் அழி வதற்குக் காரணம் விதியே, வல் வினையே என்ற உண்மை புலனுகிறது. ஆகையால் மதுரையைத் தான் அழித்ததாகச் சொல்லவில்லை. குழந்தையைக் கோபத்தால் அடித்து விட்ட தாய் பிறகு இரங்கும்போது, "என்னவோ, போதாத காலம்; குழந்தை அடிபட்டது" என்று சொல் வது போல இருக்கிறது. தான் கணவனை இழந்ததற்குப் பாண்டியன் காரணம் என்று எண்ணிச் சினந்து சீறிக் கிளர்ந்து வழக்குரைத்துச் சிலம்பை யுடைத்துக் காட்டி ஊரை எரித்தவள் மதுரைக் காண்டத்தில் வரும் வீர பத்தினியாகிய கண்ணகி; இப்போதுதான் கணவனை இழந் ததற்குக் காரணம் தான் முன்னைப் பிறவியிற் செய்த கடுவினை என்று

தெளிகிறாள். "கணவனை இழந்த கடுவினை யாட்டியேன்" என்கிறாள்.

இவ்வாறு இரங்கும்போது அவள் உள்ளம் தெய்வத்தன்மை பெறுகிறது. குற்றம் செய்வது மக்கட்கியல்பு; அதைப் பொறுத்து அருள் செய்வது தெய்வத்துக்கு இயல்பு. நிலத்தில் நடந்து சீறிய கண்ணகி, மலைமேல் ஏறி வேங்கை நிழலில் சீற்றம் ஆறி இரக்கம் கொள்கிறாள். அவள் நெஞ்சில் பொறையும் கழிவிரக்கமும் மலர்கின்றன.

அப்போது வானில் வானவர் கோவலனுடன் வந்து விமானத்தில் கண்ணகியை அழைத்துச் செல்கிறார்கள். அவள் தெய்வமே ஆகி விடுகிறாள். செங்குட்டுவன் பத்தினிக்கு கோயில் கட்டிப் பத்தினிப் படிமத்தை நிறுவுகிறான். அப்போது வானில் உறுப்புக் குறைவு இன்றி மின்னல் காட்சி போல கண்ணகி தோன்றுகிறாள், 'என்னே ஈது! என்னே ஈது! என்னே!' என்று வியக்கிறான். தெய்வத் திருவுருவோடு கண்ணகி காட்சி அளிக்கிறாள். உருவம் மாத்திரமா தெய்வமாயிற்று? அவள் உள்ளத்தாலும் தெய்வமாகி விடுகிறாள். அவளுக்கு இப்போது இருப்பது அருள் உள்ளம். மலைமேல் ஏறியவுடன் சீற்றம் அழிந்து பொறையும் இரக்கமும் நிறைந்த உள்ளத்தை உடையவளாகத் தெய்வத் தன்மை ஊற்றெடுக்கும் நிலையில் இருந்தவள், இப்போது அருள்பொழியும் தெய்வமே ஆகிவிடுகிறாள். அந்த அருள் குரல் கொடுக்கிறது. கண்ணகியின் கணவனைப் பாண்டியன் கொன்றுவிட்டான் என்ற பழியைப் போக்க அவள் பொழிகின்ற அருள் வெள்ளமாகவேவருகிறது. "இந்த மாபாதகத்தைச் செய்த பாண்டியன் நரகத்துக்குத்தான் போயிருப்பான்" என்று பலர் நினைத்திருப்பார்கள். அந்த நினைப்பை மாற்றுகிறாள், 'கண்ணகி பாண்டியனைப் பழிவாங்கின கோபம் ஆறாதவளாக இருப்பாள்' என்று பலர் எண்ணி யிருக்கக்கூடும். அந்த எண்ணத்தையும் அவள் மாற்றுவது மகா அற்புதமானது.

'பாண்டியன் சிறிதும் குற்றம் இல்லாதவன். அவன் தேவர் கோமானாகிய சொர்க்க லோகாதிபதியின் விருந்தினனாக இருக்கிறான்' என்கிறாள் முதலில்.

"தென்னவன் தீதிலன்; தேவர்
கோன்றன் வாயில்

நல்விருந் தாயி னான்."

அதற்குமேல் சொல்வதுதான் அருள்வெள்ளம் பொழியும் தெய்வத்தின் திருவாய் மொழியாக இருக்கிறது.

"நானவன்றன் மகள்!"

ஆம்! 'எனக்கும் பாண்டியனுக்கும் உள்ள உறவு பகைமையன்று' என்று சொல்லவில்லை. "பாண்டியனுக்குநான்மகள்"என்கிறாள்.இப்படிச் சொல்வதற்கு எவ்வளவு அருள் இருக்க வேண்டும்!" "எல்லோரும் அவனைப் பாடுங்கள்" என்று கட்டளை வேறு இடுகிறாள்.

அவள் புகழுடம்பைத் தந்ததற்கு காரணமானவன் பாண்டியன்; அதனால் அவனை மகள் என்று சொன்னாளோ?

சேரன் செங்குட்டுவன் இமயமலைக் கல்லால் படிவம் சமைத்துக் கண்ணகியைத் தெய்வமாக்கிப் பல நாட்டினரும் பல சமயத்தினரும் வழிபடச் செய்தான். இளங்கோவடிகளோ அவளுடைய திருவருள் பொழியும் உள்ளத்தை அவள் வாய் மொழியால் உணர்த்தித் தெய்வப் படிமத்தைச் சொல்லால் அமைக்கிறார். இன்று செங்குட்டுவன் கட்டிய கற்கோயில் இல்லை. இளங்கோவடிகள் கட்டிய சொற்கோயில் உலகம் முழுவதும் பரவி நிற்கிறது.

இந்தக் கருத்தை விளக்கிச் சொன்னேன். இடையிலே குன்றக்குரவை, கந்துகவரி முதலியவற்றிலுள்ள பாடல்களை இசையுடன் சொன்னேன். பேசினது எனக்கே திருப்தியாக இருந்தது. மற்றவர்களும் பாராட்டினார்கள். எனக்குப் பின் காலையிலும் பிற்பகலிலும் ஐந்து பேர் பேசினார்கள். அன்றுமாலையில் கடைசியில் சிலம்புச் செல்வர் திரு. ம. பொ. சி. பேசினார். அவருக்கு அரை மணிப் பேச்சுப் போடலாமா? அவரை மட்டும் ஒரு மணி நேரம் பேசும்படி தலைவர் கேட்டுக்கொண்டார். அவருடைய முழக்கமே சிலப்பதிகார மாநாட்டின் நிறைவுப் பேருரையாக அமைந்தது.

ஆயிரக் கணக்கில் கூடியிருந்த மக்களுக்கு மூன்று நாட்களும் செவி விருந்து நிறையக் கிடைத்தது. ஆனால் வயிறு சும்மா இருக்குமா? அதற்கும் பெரு விருந்து கிடைத்தது. என்ன சாப்பாடு! என்ன விருந்து! தலைவாழை இலை போட்டுப் புலவர்களுக்கு விருந்து படைத்தார்கள். விருந்தின் வகையைப் பற்றி வருணிக்கச் சொல் இல்லை.

இவ்வளவு பெரிய திருவிழாவாக இந்த மாநாட்டை யார் நடத்தினார்கள்? இதற்காக ஒரு குழுவை அமைந்திருந்தார்கள். அதற்கெல்லாம் ஜீவநாடியாக இருந்தவர் தாசில்பண்ணை திரு கே. எஸ். இராமலிங்கம் அவர்கள், துணைவியார் திருமதி. R. கௌரியம்மாள் அவர்கள் நெய்ப்பற்றார், திரு. பாலு முதலிய அன்பர்கள் துணையாக நின்று ஒவ்வொரு வேலையையும் கச்சிதமாக நடைபெறச் செய்தார்கள்.

பளபளக்கும் சிவந்த திருமேனி, வைதீகக் கோலம்,வடமொழியையும்' தென்மொழியையும் ஒரு நிகராகப் பார்க்கும் சமநோக்கு, விருந்தினரை உபசரித்துத் திணற அடிக்கும் பேரன்பு, நல்ல காரியத்தை முன் நின்று நடத்தும் செயலாற்றல், சாந்தமான பண்பு எல்லாம் சேர்ந்த வடிவம் தாசில் பண்ணை இராமலிங்கம் அவர்கள். அவரும் ஓர் அரசரைப் போலவே இருந்து இந்த மாநாட்டை நடத்தினார். பண்டைக் காலத்தில் இந்திர விழாவைச் சோழ அரசன் நடத்தினான். ஆனால் இந்தச் சிலம்பு விழாவைத் தாசில் பண்ணை அரசர் நடத்தினார். அதில் இசையரசர்களும், இயலரசர்களும் கலந்து கொண்டார்கள்.

அன்று அந்த விழாவை நடத்திய இராமலிங்கம் அவர்கள் இன்று அமரராகிவிட்டார். அதில் கலந்து கொண்ட பலர் இன்று உலகவாழ்வை ந்த்துவிட்டார்கள். ஒருகால் எல்லோரும் சேர்ந்து வானுலகில் பத்தினித் தெய்வத்தை நேரே தரிசித்து விழா கொண்டாடுகிருர்களோ என்னவோ?

அந்த விழாவில் கலந்து கொண்டவர்களில் பலர் இன்றும் அதை நினைக்கும்போது அவர்கள் காதில் சிலர்பொலி கேட்கும்; அவர் நினைவில் அன்று உண்ட விருந்து இன்றும் மணக்கும் என்பதில் ஐயம் இல்லை.

  





காவிரிப்பூம்பட்டினம் (மேலையூர்) தாசில் பண்ணை சமயப்பணி
ஸ்ரீ ரகுநாதப் பெருமாள்



காவிரிப்பூம்பட்டினம் (மேலையூர்) தாசில்பண்ணை சமயப் பணி
ஸ்ரீ முல்லைவன ஐயனர்

# சீலமும் கோலமும் செம்மையானவர்!

மகாவித்துவான், சித்தாந்தப் பேராசிரியர், உரைவளம் விரிநூற்புலவர்
சி. தண்டபாணிதேசிகர்,
திருக்குறள் ஆராய்ச்சி, அண்ணுமலைநகர்

சோழன் கரிகாலன், சேரன் செங்குட்டுவன், பாண்டியன் நெடுஞ் செழியன் இவர்கள் மூவரும் முடியுடை மன்னர்கள். புலவர் பாடும் புகழுடையோர் ஆனுலும் அவர்கள் வரலாறு மலைமேல் விளக்கானது சிலப்பதிகாரத்தால்.

சிலப்பதிகார உறுப்பினர்களாக அவர்களில்லையானுல் அவர்கள் புகழ் இன்று வரை பலரால் அறியப்படுமா? ஆகவே மூவேந்தரையும் முத்தமிழையும் மூன்று நாட்டையும் விளக்கங் கண்டது சிலம்பு. இது பழங்கதை.

சுமார் பதினைந்தாண்டுகளுக்கு முன்னே பூம்புகார் புதுக்கப் பெற்றது. மூன்று நாடுகளின் நிகழ்ச்சியும் முறையே நடந்தன. தமிழ்ச் சேது தலைமை தாங்கினுர். ஸர். ஆர். கே. சண்முகம் செட்டியார் அவர்கள் தலைமைப் பொறுப்பை மூன்று நாளும் ஏற்றனர். பல புலவர்கள் கலந்து கொண்டனர், அதிலே சிலப்பதிகாரச் சுவையமைப்பைச் சுவைத்தவன் நான்.

மாநாடு சீரும் சிறப்புமாக நடந்தது. கலைத்தொழில் வல்ல நல்ல மக்களும், நாட்டாரனைவரும் சுவைக்க மாநாடு நடந்தது. வெறும் புலவர் மாநாடாக அன்றி மக்கள் அனைவருக்கும் புத்துணர்ச்சியை – இலக்கிய எழுச்சியை - பழர்பெருமையைமீண்டும்பெறவேண்டும் என்ற பரபரப்பை உண்டாக்கியது.

இத்தகைய மாநாட்டை முன்னின்றும் முழுப் பொறுப்பும் ஏற்று நடத்தியவர்கள் நமது சீலமும் கோலமும் செம்மையான இராமலிங்கம் பிள்ளையவர்கள். புலவர்களுடைய - புரவலர்களுடைய தரந்தெரிந்து நடத்தத் துணைபுரிந்தவர்கள் பிள்ளையவகளின் வாழ்க்கைத் துணைவியரான கௌரியம்மாள் அவர்கள். செயலாற்றத் துணைபுரிந்தவர்கள் நமது திருக்குறள் வேள் ஜி. வரதராச பிள்ளையவர்கள், இப்படி எல்லா வகையினும் ஈடு எடுப்பற்ற மாநாடாக நடந்தது அப்போது.

திரு. பிள்ளையவர்கள் செய்தக்க செய்வார்கள். செய்தக்க அல்ல

வற்றை யார் சொன்னாலும் செய்ய மாட்டார்கள். சிலப்பதிகார மாநாட்டைக் கூட்டி புகாரின் பெருமைக்குப் புதுமெருகேற்றினர் கள். அதுமுதல் அந்நாளும் அதன் சூழல்களும் வளர்ச்சி பெற்றன. இன்று வளர்ச்சியின் முறுக்கான நிலையில் இருக்கிறது.

அன்று அவர்கள் உயர் தொடக்கப் பள்ளியை நிறுவி வைத்தார்கள். இன்று அதுவே உயர்நிலைப்பள்ளியாக விளங்குகிறது. இன்று பண்பாட்டுக் கல்லூரியும் கலைக் கல்லூரியும் வந்து விட்டன. சிலத்தாற் செம்மையான-சிந்தையால் நிறைவான வேளாண் அந்தணரான அவர்கள் தொட்ட தெல்லாம் வளர்கின்றன.

"தொடுப்பின் ஆயிரம் வித்தியது விளைத்தலே" வேளாண் கைவண்மை. இவர்கள் கைவண்மையும் வைத்தது ஒன்று நூறுகத்தானே வளரச் செய்வது.

கோலமும் நல்ல சிவப்பு, பழம் பண்பாடு மாருத குடுமி, அடக்கமான பண்பு — அன்பான பேச்சு — யார் மனமும் புண்படாமல் நடந்து கொள்ளும் பெருந்தன்மை—எல்லாம் அவர்களிடம் காணும் சிறந்த குணங் கள்.

சிலப்பதிகார மாநாட்டில் மட்டு மல்ல! பின் ஒருமுறை அவர்கள் மருகனர் உயர்திரு. ஜி. வரதராஜ பிள்ளையவர்கள் எழுதிய திருக்குறள் விளக்கத்தைப் பாராட்ட அழைத் திருந்தார்கள். அப்போது செந் தமிழ்க் காவலர் திரு. அ. சிதம்பர நாதன் செட்டியார் அவர்கள் தலைமை தாங்கினர்கள். குறளுரைச் சிறப்புக் களை எடுத்துப் பாராட்டியதுண்டு. அப்போது அறிவிற் பெரிய பிள்ளை யவர்கள் சுவைத்த நிலையைக் கம்பனைச் சுவைத்த சடையப்பனை யும், காளிதாசனைச் சுவைத்த போசனையும் நினைக்க வைத்தது.

அவர்கள் சிவகதி அடைந்து ஓராண்டு காலமாகிறது. அவர்கள் நினைவாகச் சிறந்த மலர் ஒன்று வர இருக்கிறது. அவர்கள் ஆன்மா அற நிலையங்களை அமைத்தவர் ஆன்மா, செல்வத்துப் பயனே ஈதல்என்பதைக் கடைப்பிடித்தவருடைய ஆன்மா, பேரின்ப வாழ்வில் நிலைத்து அருளமுதம் உண்டு ஆனந்த நிலையில், தில்லைப் பெருமான் திருவடிக்கீழ் இருப்பதாகுக எனச் சிந்திப்போம்.



திரு. க. வெள்ளைவாரணன்
துணைப் பேராசிரியர்
தமிழாராய்ச்சித்துறை
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

# நல்லறச்செல்வர் இராமலிங்கம்பிள்ளை அவர்கள்

சோழநாட்டில் காவிரிப்பூம் பட்டினத்தில் வழிவழியாக நல்லறங்கள் பலவற்றை தொடர்ந்து செய்து வரும் செல்வச் செழிப்பும் வரையா வண்மையும் வாய்ந்த வேளாண் குடியிலே புகழுடன் தோன்றியவர் இராமலிங்கம் பிள்ளையவர்களாவர். பெருநிலக் கிழாராகவும் தமிழார் வமும் அறம்பல புரியும் நல்லுள மும் பெற்ற வள்ளலாகவும் விளங்கிய இவர்கள், தெய்வ நலம் வளர்க்கும் திருக்கோயிற் பணிக்கும் வையத்து வாழ்வாங்கு வாழும் வகையினை அறிவுறுத்தும் கல்விப்பணிக்கும் மக்களது வாழ்வு வளம் பெறுதற்கு இன்றியமையாத பொதுநலப் பணிகள் பலவற்றுக்கும் பெரும் பொருளை வழங்கியுள்ளார்கள்.

'முழங்கு கடல் ஞாலம் முழுவதும் வரினும் வழங்கத் தவா வளம்' உடையதாய்த் திகழ்ந்த புகார் நகரத்தின் தொன்மை வரலாற்றினை எண்ணிய இவர்கள், தாம் வாழும் ஊராகிய காவிரிப்பூம்பட்டினம் எதிர் காலத்தில் கல்வியும், செல்வமும் கலை நலங்கள் பலவும் ஒருங்குடையதாய் வணிகத் துறையிலும் தொழிற் துறைகளிலும் சிறந்து விளங்குதல் வேண்டும் என இடைவிடாது முயன்றுள்ளார்கள்.

'பதியெழுவறியாப் பழங்குடி கெழீஇய பொதுவறு சிறப்பிற் புகார்' என முத்தமிழ் முனிவராகிய இளங்கோ அடிகளாற் சிறப்பித்துப் போற்றப் பெற்ற புகார் நகரமாகிய காவிரிப் பூம்பட்டினம், முத்தமிழ் முனிவன் வாழும் பொதிய மலையைப் போலவும் முக்கண்ணன் வீற்றிருந்தருளும் இமய மலையைப் போலவும் உயர்ந்தோர் வாழ்தற்குரிய இடமாய் நிலைபெறுதல் வேண்டும் எனக் கருதிய இராமலிங்கம் பிள்ளையவர்கள் புகார் நகரத்தின் சென்ற காலத்தின் பழுதிலாத் திறனையும் இனி எதிர்காலத்தின் சிறப்பினையும் உறுதி செய்யும் நோக்குடன் காவிரிப்பூம்பட்டினத்தில் தமிழறிஞர் பலரையும் ஒருங்கு கூட்டிச் சிலப்பதிகார மாநாடு நடத்தினர்கள், அதன் பயனாகத் தமிழ் மக்கள் உள்ளத்தில் 'பூம்புகார் போற்றுதும் பூம்புகார் போற்றுதும்' என்னும் இளங் கோவடிகளது ஆர்வ நன்மொழி நன்கு பதிவதாயிற்று. தமிழ்ப் புலவர்கள் புகார் நகரத்தின் வரலாற்றிற் கருத்தினைச் செலுத்தினர். புதைபொருளாராய்ச்சித்துறையினர் காவிரிப் பூம்பட்டினத்தில் அகழ்வாராய்ச்சியைத் தொடங்கினர். பட்டினப்பாலை முதலிய சங்கச் செய்யுள்களிலும் சிலப் பதிகாரத்திலும் புகார் நகரத்தைப் பற்றியமைந்த செய்திகள் வெறும்

புனைந்துரைகள் அல்ல; உண்மை வரலாற்றின் பாற்பட்டனவே என்பது இத்தகைய ஆராய்ச்சிகளால் உறுதி பெற்று வருகின்றது. தென்தமிழ்ப் பாவை செய்த தவக்கொழுந்தாய்க் கற்புக் கடம்பூண்ட தெய்வமாகிய கண்ணகியார்க்குத் திருக்கோயி லமைக்கும் பணியும் தொடங்கப் பெற்றுளது. இத்திருக்கோயிலுக்கு வேண்டிய இடமும் பொருளும் வழங்கும் பணியினை இராமலிங்கம் பிள்ளையவர்களுடைய வாழ்க்கைத் துணைவியாராகிய அம்மையாரவர்கள் உளமுவந்து ஏற்றுள்ளமை தமிழ் மக்களால் பாராட்டத் தகுவதாகும்.

அத்துவித நெறியினை மேற்கொண்டு மக்கள் எல்லோரையும் பிரமப் பொருளென அன்புடன் பேணி மகிழும் பெருமனம் படைத்த இராமலிங்கம் பிள்ளை அவர்கள், காவிரிபூம்பட்டினத்தையடுத்துள்ள ஊர்களில் வாழும் சிறுவர்கள் கல்விப் பயிற்சியில் மேம்படுதல் வேண்டிச் சீனிவாசா தொடக்கப்பள்ளி, உயர்நிலைப்பள்ளி ஆகிய கல்வி நிலையத்தினைச் சிறப்பாக நடைபெறச் செய்துள்ளார்கள். காவிரிப் பூம்பட்டினத்தில் பண்பாட்டுக் கல்லூரி தோன்றிச் சிறப்பாக நடைபெறுவதற்குத் தம்மால் இயலும் உதவியினைப் புரிந்துள்ளார்கள். பிள்ளையவர்களது தமிழ்ப்பணிக்கு ஊக்கமளிக்கும் முறையில் இவர்கள் மருகரும் செந்தமிழ்ப் புலமைச் செல்வரும் ஆகிய திருக்குறள்வேள் G. வரதராச பிள்ளையவர்கள் அமைந்தமை சிறப்பாகக் குறிக்கத்தகுவதாகும். வள்ளல் இராமலிங்கம் பிள்ளை அவர்கள் தம் மருகர் திரு. ஸ்ரீ.வரதராச பிள்ளையவர்களின் மைந்தரும் தம் அன்புக்குரிய பேரரும் ஆகிய திரு. இராசசேகரன், B.Sc.,B.L., அவர்களை மகன்மை கொண்டு தாம் செய்யக் கருதிய நல்லறங்களைத் திருத்தமுறச் செய்தற்குரிய வாய்ப்பினை வழங்கியிருப்பது நமக்கு வாய்த்த நற்பேறாகும்.

'செல்வத்துப் பயனே யீதல்' என்னுந் தெளிவுடைய சிந்தையராய் செந்தமிழும் சிவநெறியும் வளர நல்லறங்கள் பல புரிந்து பூதவுடல் நீத்துப் புகழுடம்பு பெற்ற வித்தகராகிய இராமலிங்கம் பிள்ளையவர்கள் நினைவு அவர் பெயரால் நிகழும் நல்லறங்களின் வாயிலாக தமிழ் மக்கள் உள்ளத்திலே என்றும் நின்று நிலவும் என நம்புகின்றேன்.



# திரு. சி. இராமலிங்கம்,

தத்துவத்துறை,
அண்ணுமலைப் பல்கலைக் கழகம்.


உயர்திரு. இராமலிங்கம் பிள்ளை அவர்களது பருவுடல் மறைந்து ஓராண்டாகிறது. நாட்கள் விரைந்து ஓடிவிட்டன. ஆனல் அவர்களது மறைவை ஏற்க எனது நெஞ்சம் மறுக்கிறது. காரணம் பெரியாரது பண்பார்ந்த பெருவாழ்வாகும்.

இரண்டாண்டுகள் நான் தொடர்ந்து அவர்களுடன் பழகும் நற்பேறு பெற்றிருந்தேன். சான்ருேர் நலங்களெல்லாம் குணங் களாலயவை. அவர்தம் அருங்குணங்கள் அனைவரையும் ஈர்க்கும் பெற்றியன. பிள்ளையவர்கள் தம்மைக் காணவருவோரை முக மலர்ச்சியுடன் வரவேற்பர். அன்புடன் உரையாடுவர். சிறிதுநேரம் அவரோடு உரையாடினுலும் அவரது பண்பு நலன் இனிது புலனுகும். உயர்ந்த தத்துவயோக நூல்களில் நல்ல தேர்ச்சி உடையவர் அவர். சிறந்த நூல்களைப் பயிலும்போது விளங்குகின்ற நூல்நயமும், பண்புடையார் தொடர்பினுல் ஏற்படும் பண்புகளின் விளக்கமும் ஒருங்கே அவரிடம் ஒளிர்வதைக் கண்டு உவந்துள்ளேன். மறந்தும் அவர் நா பிறரது குறைகளைப் பேசாது பயனுள்ள சொற்களையே பேசும். மனத்தில் தோன்றியதை மறைவின்றி உரைத்திடுவர்.

ஆன்ற கல்வியும் பெருஞ்செல்வமும் ஒருங்கே காண்டலரிது என்பர். நமது பெருந்தகையார் வாழ்வில் சிறந்த கல்வியும், பொருட் பேறும் களிநடம் புரியக்கண்டேன். ஊருணி நீர் நிறைந்தனையது அவரது வாழ்வு. 'பேரறிவாளன் திரு' என்று வள்ளுவர் நூலில் சிறப்பித் ததைக் காட்சியில் கண்டேன். ஊர் நடுவே தழைத்து பல்பயன் கொடுத்துதவும் நெடுமரம் போல் அவர் ஒப்புரவு வாழ்க்கை வாழ்ந்தார் கல்வி நிலையங்கள் பல கண்டு நாளும் அவற்றின் வளர்ச்சியில் கருத்து ஊன்றினர். இலக்கிய பெருவிழாக்கள் கண்ட பெரியார். அவர் பல ஆண்டுகட்கு முன்னர் சிலப்பதிகார மா நாடு வெற்றிபெற நிகழ பல்லாற்ருனும் துணை நின்ருர். தாம் கண்ட ஆலயங்கள் மக்கட்கு அமைதி தரும் வகையில் அவற்றின் புறந்தூய்மையைக் காத்தலோடு வழிபாட்டு முறைகளும் செவ்வையாக நடைபெற வழிவகுத்த பெருமைக் குரியர்.

வடமொழியில் உள்ள சிறந்த நூல்களைப் பழுதற உணர்ந்து உணர்த்தும் வகையில் அவர்க்கு நல்ல தேர்ச்சி அமைந்திருந்தது. கல்வி கேள்விகளில் சிறந்து பயனுள்ள பெருவாழ்வு வாழ்ந்த பெரியார் இன்றும் தம்முடைய அருந்தொண்டுகளின் மூலம் நம்மிடையே வாழ்கிருர். உலகம் நிலையாததென்றும் அவர்தம் பணிகள் நிலைத்துப் பயன்தரக்கூடியவை. அவரது வாழ்வு சீரிய வாழ்வு. புகழ் மிகுந்த அவர்தம் வாழ்வு மக்கட்கு ஓர் எடுத்துக்காட்டான வாழ்வு.

Dr. M. Swaminathan, M.B.,B.S.,

ASOKA CLINIC
MAYURAM

## நினைவு அலைகள்!

" வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்" —குறள்

மேலையூர் தாசில்பண்ணை திரு. K. S. இராமலிங்கம் பிள்ளை அவர்கள் வாழ்வாங்கு வாழ்ந்து இப்பொழுது அமரத்வம் அடைந்து விட்டார்கள். என்னிடம் அன்பும் பரிவும் காட்டி அறிவுரை வழங்கியும் வந்த அண்ணல் மறைந்து ஓராண்டாகிறது.

அவர்களுடன் 22 ஆண்டுகளாகப் பழகி அவர்களின் இறுதி விருப்பத்தை நான் நிறைவேற்ற முடியாது போனது பற்றி எண்ணி எண்ணி வருந்துகின்றேன்.

கடைசிமுறை அவர்களை நான் சந்தித்தபொழுது, எப்பொழுது அழைப்பு அனுப்பினாலும் உடனே நான் மருத்துவ உதவி அளிக்க வரவேண்டுமெனச் சொன்னார்கள். நானும் அவசியம் வந்து விடுவேனெனச் சொல்லி விடைபெற்றேன். நான் வெளியூர் சென்றிருந்ததால், அவர்களின் கடைசி நேரத்தில் அவர்கள் விரும்பியபடி அவர்கள் பக்கத்திலிருந்து மருத்துவ உதவி செய்ய முடியாமல் போனதுபற்றி, அங்கலாய்க்கின்றேன். என்னிடமிருந்த அன்பின் மிகுதியால் அவர்கள் என் மருத்துவத் திறனில் வெகு நம்பிக்கை வைத்திருந்தார்கள். மனிதன் விருப்பம் ஒன்று - ஆண்டவன் கட்டளை வேறாக முடிந்தது. "என் செயலாலாவ தொன்றில்லை இனி அவன் செயலே" என்று உணரப் பெற்றேன்.

கடந்த இருபத்திரண்டு ஆண்டுகளாக அவர்களுக்கும் அவர்கள் குடும்பத்தினருக்கும் மருத்துவரென்ற முறையில் அவர்களுடன் நெருங்கிப் பழகும் வாய்ப்பு எனக்கு இருந்தது. அதன் பயனாக பிள்ளையவர்களின் அன்பையும், நட்பையும் மிகுதியாகப் பெற்றேன். மேலும் அவர்களின் குணச் சிறப்பையும் அவர்களின் இல்வாழ்க்கையின் மேன்மையும் நான் நன்கு அறியவும் ஏதுவாகயிருந்தது.

நான் மாயூரம் என் மருத்துவத் தொழிலின் நிமித்தம் வந்த பொழுது 22 ஆண்டுகளுக்கு முன்பு அவர்களை முதல் முதலாகச் சந்தித்தபொழுது அவர்களை ஒரு கண்ணியமான குடும்பத்திலுதித்த பிராமண கனவானெனவே எண்ணினேன். அவர்களைப்பற்றி தெரியாதவர்கள், அவர்களை முதலில் பார்க்கும் பொழுது அப்படி நினைக்கும்படிதானிருக்கும் அவர்களின் தோற்றம். நல்ல சிவந்த மேனி, மார்பில் புரிநூல், நெற்றியில் சந்தனத் திலகம், காதில் வைரக் கடுக்கன், உச்சியில் குடுமி, யோக வஸ்திரம், அன்பும் அருளும் நிறைந்த பார்வை, இதுதான் அவர்கள் திருஉருவம்.

பிள்ளையவர்கள் வடமொழியிலும், தமிழிலும் நல்ல தேர்ச்சி யுடையவர்கள். சாதாரணமாக உரையாடிக்கொண்டிருக்கும் பொழுது உபநிஷதங்களிலிருந்தும், ஆகம நூல்களிலிருந்தும் மேற்கோள்கள் பல எடுத்துச் சொல்லுவார்கள். ஜோதிட நூல் களிலும் நல்ல பற்றுடையவர்கள். அவர்களுக்குச் சிலப்பதிகாரத்தில் மிகுந்த ஈடுபாடுண்டு. சில அன்பர்களின் உதவியுடன் சில ஆண்டு களுக்கு முன்பு காவிரிப்பூம்பட்டினத்தில் சிலப்பதிகார மகாநாடொன்றை வெகு விமரிசையாய் நடத்தினார்கள்.

பிள்ளையவர்கள் கார்காத்தார் வேளாள குலத்துதித்தவர்களாத லால் அந்தக் குலத்தின் வரலாற்றை நன்கு ஆராய்ந்து "நாம் யார்? என்ற தலைப்பில் ஒரு புத்தகமும் எழுதி வெளியிட்டிருக்கிறார்கள். அதில் கார்காத்த குலத்தவர் ஆரிய வம்சத்தைச் சேர்ந்தவர்களென் பது அவர்களின் முடிவு. அவர்களின் இந்த முடிவுக்கேற்ப தன் குடும்பத்தின் விழாக்களிலும் வைதீக முறையையே கையாண்டு வந்தார்கள். அவர்கள் மார்பில் புரிநூல் அணிந்திருந்ததும் அதே காரணத்தால்தான். அவர்கள் தன்னை யாரும் "பிள்ளை" யென அழைப்பதையோ அல்லது முகவரியில் எழுதுவதையோ கடுமையாக ஆட்சேபிப்பார்கள். நான் ஒரு தடவை என் அழைப்பில் "பிள்ளை" யென எழுதியிருந்ததற்காக மிகவும் ஆட்சேபித்தார்கள்.

இந்தக் கட்டுரையில் பலதடவை பிள்ளையென எழுதியிருப்ப தற்கு அவர்களின் ஆத்மா என்னை மன்னிக்குமென நம்புகிறேன். பிள்ளையவர்களும் அவர்கள் குடும்பத்தினரும் சிறந்த தெய்வ பக்தி யுடையவர்கள். நவராத்திரியின் பொழுது பிள்ளை அவர்கள் தேவி

உபாசனையைச் சிறந்த முறையில் நடத்துவார்கள். ஆண்டுதோறும் ராதா கல்யாண விழாவைத் தங்கள் வீட்டில் விமரிசையாகக் கொண்டாடி வருவார்கள்.

அவர்களும் அவர்களின் அன்பு மனைவியாரும் நல்ல தர்ம சிந்தனையும், ஒப்புரவறிதலுமுடையவர்கள். கல்வி வளர்ச்சிக்கும், மருத்துவ உதவிக்கும் அவர்கள் செய்த தொண்டு மகத்தானது. அவர்கள் குடும்பத்திலேயே ஒரு தொடக்கப் பள்ளியையும், உயர்நிலைப் பள்ளியையும் நல்ல முறையில் நடத்தி வருகிறார்கள். ஆண்கள் கலைக்கல்லூரிக்கும், மகளிர் கலைக்கல்லூரிக்கும் பொருளாக வும், பூமியாகவும் நன்கொடை வழங்கி அவற்றின் வளர்ச்சியில் மிக அக்கரை காண்பித்தும் வந்தார்கள்.

மருத்துவமனை யொன்றையும் கட்டியிருக்கிறார்கள். ஊர் நடுவே புள்ள நல்ல பயன் மரம்போல் வாழ்ந்து மறைந்தவர்கள் பிள்ளையவர்கள்.

கற்புடைத் தெய்வம் கண்ணகிக்கு சேர மன்னரொருவர் சிலை யெடுத்ததாக தமிழர் வரலாறு கூறும். ஆனால் பிள்ளையவர்கள் சில ஆண்டுகளுக்கு முன்தான் கற்புத்தெய்வம் கண்ணகிக்கு ஒரு சிலை யெடுத்தது மட்டுமின்றி ஒரு பத்தினிக் கோட்டத்தைத் தன் ஊரிலேயே கட்டுவதற்கும் கால்கோள் விழா விமரிசையாக நடத்தினார்கள். ஆனால் அதைக் கட்டி முடிக்கக் காலன் அவர்களை விடவில்லை. இருந்தாலும் அவர்களின் அன்பு மனைவியாரும் குமாரர் திரு. ராஜசேகரனும் இந்தச் சீரிய பணியை முடிக்கும் ஆர்வத்தில் பிந்தியவர்களாக இல்லை. அவர்களின் குடும்பத்தினரும் அவர்கள் அடிச்சுவட்டையே பின்பற்றுகிறார்களாதலால் ஒப்புரவுக்கு குறைவுமில்லை.

ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு.



காவிரிப்பூம்பட்டினம் (மேலையூர்) தாசில் பண்ணை
சமயப் பணி
ஸ்ரீ நல்லசிவமூர்த்தி (வடக்குவெளி ஐயனர்)



காவிரிப்பூம்பட்டினம் (மேலையூர்) தாசில் பண்ணை
சமயப் பணி
ஸ்ரீ மாரியம்மன்

புலவர் மு. சவுந்தரராசன்,
சீனிவாசா உயர்நிலைப்பள்ளி
பூம்புகார்

# நெஞ்சம் மறப்பதில்லை!

இவ்வுலகில் கோடிக் கணக்கான மக்கள் தோன்றிய வண்ணமாய் இருக்கின்றனர். கோடிக் கணக்கில் மறைந்தும் வருகின்றனர். அவ்வாறு உலகில் தோன்றிய மக்களையும் மறைந்த மக்களையும் கணக்கிட்டுச் சொல்லமுடியாது இருப்பினும் ஒரு சிலரை மட்டும் இந்த மன்பதை தன் வரலாற்று ஏடுகளில் பொன்னெழுத்துக்களால் பொறித்து மகிழ்கின்றது. அவ்வாறு போற்றிப் புகழப்பட்டவரே பெரியார் என்று அழைக்கப்படுகின்றார். கல்வி, ஒழுக்கம், உயர்குணம் என்ற மூன்றும் அமையப்பெற்றவரே பெரியார் ஆவார். இம் மூன்றும் பெற்றுத் திகழ்ந்த பெரியார்களில் காவிரிப்பூம் பட்டினத்தில் உள்ள தாசில் பண்ணை என்னும் மாசில் பண்ணையின் மாப்பிள்ளையான சிவநெறிச் செல்வர் உயர்திரு. K. S. இராமலிங்கம் அவர்களும் ஒருவராவார். அப் பெருமகனாரின் பெருங் குணங்களை அறிந்த பலரில் நானும் ஒருவன் என்ற முறையில் அவர்களைப்பற்றி சில கூற முற்படுகின்றேன்.

கல்வி :

நம் பெருமகனாரைக் காணும் போதே கல்விக் கடலில் கரைகண்ட பெருமான் என்பது தோன்றும். அவர் ஆங்கிலேயருடன் பேசிப் பழகும் அளவிற்கு நல்ல ஆங்கில அறிவு வாய்ந்தவராக விளங்கினார். அரிய பல செய்திகளை—ஆங்கில நூல்களில் உள்ளவைகளை—அடிக்கடி எடுத்துச் சொல்வார்கள். வட மொழியிலும் தென் மொழியிலும் வல்லவராய் விளங்கினார்கள். இவ்விரு மொழிகளும் அறிவுப் பெட்டகங்கள் நிறைந்த மொழிகள் என்பதை அடிக்கடி இவர்கள் எடுத்துரைப்பார்கள். வட மொழியில் உள்ள வேதங்களைக் கற்ற வித்தகர். யோக சாத்திரங்களைத் திரிபறக் கற்றவர். தேவியின் மகாத்மியங்களை உணர்ந்த உத்தமர். பஞ்சாட்சரங்களை பல முறையில் ஓதியுணர்ந்தவர். தேவார திருவாசகங்களில் பயிற்சி மிக்கவர். தத்துவ நூல்களைக் கற்றுத் தெளிந்தவர், சுருங்கக் கூறினால் ஒரு சிறந்த கல்விமான். எத்தகைய கல்வியறிவினைப் பெறவேண்டுமோ அத்தகைய கல்வியைக் கற்றவர் என்று கூறலாம்

ஒழுக்கம் :

உயர்ந்தோர் என்போர் ஒழுக்கத்தால் உயர்ந்தோர். "ஒழுக்கமே உயர்வு தரும்" என்பது ஆன்றோர் வாக்கு.

"ஒழுக்கம் உடைமை குடிமை
இழுக்கம்
இழிந்த பிறப்பாய் விடும்"

என்பது வள்ளுவம். தன் நல்லொழுக்கத்தால் நற்குடியைச் சார்ந்தவர் என்பதை நம் பெருமகனுரைக் கொண்டு அறியலாம். இவர் பிறரை அவரது ஒழுக்க நெறிக்கு ஏற்ப உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்று கருதுபவர். அறிவுச்செல்வம், பொருட் செல்வம் என்னும் இரண்டைவிட ஒழுக்கத்திற்கே முதலிடம் தந்த சிறந்த சிலரே இவர். கொடுக்கக் குறையா அறிவுச் செல்வமும், பொருட் செல்வமும் இவரிடத்தில் இருந்த போதும் அவற்றைப் பெரிதெனக் கருதாது நல்லொழுக்கத்தையே பெரிதென மதித்து வாழ்ந்த இப்பெரியாரை என்னெனப் புகழ்வது!

"எல்லார்க்கும் நன்றாம் பணிதல்
அவருள்ளும்
செல்வர்க்கே செல்வம் தகைத்து"

என்ற குறளுக்கு ஏற்ற இலக்கியமாகத் திகழ்ந்தவர் நம் பெரியார். எல்லோரிடத்தும் அடக்கம் வேண்டும் என்று அடிக்கடி கூறி வந்த பெரியார் தானே வழிகாட்டியாய் விளங்கிய விந்தையை என்னென்பது! தன்னைச் சார்ந்தவர்களும் தன்னைப் போலவே விளங்கவேண்டும் என்பதிலே கருத்தைச் செலுத்தி வந்தமை குறிப்பிடத்தக்கதாகும். தன்வழித்தோன்றலாகிய திரு. இரா. இராசசேகரன் அவர்கள் நல்லொழுக்க சீலராக விளங்குவதும் இப் பெரியாரின் நல்லொழுக்கத்தின் பயனே எனலாம்.

உயர்குணம் :

"யாதனின் யாதனின் நீங்கியான்
நோதல்
அதனின் அதனின் இலன்."

என்ற வான்மறை வள்ளுவத்தின் பொருளை நன்குணர்ந்த நம் பெரியார் அதன்படி வாழ்ந்துகாட்டியவராவார். அதனால் இன்பங்கண்டவர். தாசில் பண்ணையில் அவர் அமர்ந்து வருவோரை இனியமுகத்துடன் "வா அப்பா! சௌக்கியமா?" என்று சொல்லும் சொற்கள் எல்லோருடைய காதிலும் எப்போதும் ஒலித்துக் கொண்டிருக்கும். வந்தவர் அனைவரையும் "உள்ளே வா, சாப்பிடு" என்று உபசரிக்கும் இனிய வார்த்தைகள் நெஞ்சை விட்டகலா! தன் உள்ளத்தில் தோன்றிய கருத்துக்களை யாராயிருந்தாலும் உடனுக்குடன் நேரில் சொல்லி விடுகின்ற அவரது கரவற்ற நேர்மைத் திறத்தை என்னென்பது! அவர்கள் சான்றோரோடு பழகும்போது சான்றோராகவும் எளியவரோடு பழகுங்கால் எளியவராகவும் குழந்தைகளோடு பழகும் போது குழந்தையாகவும் மாறும் அவரது இனிய இயல்பினை என்னென்பது!

நம் பெருமகனர் கல்வி, அறம், சமுதாயம் முதலிய துறைகளில் தம் துணைவியார் திருமதி. கௌரியம்மாள் உடனிருந்து ஆற்றிய பணிகள் எண்ணிலடங்கா. கல்விக்கூடங்களுக்கு அளித்த நன்கொடைகள் கணக்கிலடங்கா. வருங்கால

மாணவர்கள் வெறும் ஏட்டறிவு மட்டும் பெற்றால் போதாது; ஒழுக்கத்தால் சிறந்தவர்களாக விளங்க வேண்டும். என்பதையே அவர்கள் குறிக்கோளாகக் கொண்டவர். தான் நடத்துகின்ற கல்விச்சாலைகள் அப்பணியையே செய்யவேண்டும் என்று விரும்பியவர்.

"எழுத்தறி வித்தவன்
இறைவனாகும்"

என்ற கருத்தைக் கொண்டவர் நம் பெரியார். அவர்கள் ஏற்படுத்திய சீனிவாசா உயர்நிலைப்பள்ளி எவ்வாறு நடைபெறுகிறது என்பதை ஒரு முறை அவர் காணவந்தபோது நடைபெற்ற நிகழ்ச்சியை இவ்விடத்தில் குறிப்பிடாமல் இருக்க முடியவில்லை. அவர் வகுப்புக்களை எப்படி நடைபெறுகின்றன என்பதைப் பார்க்க வருங்கால் அவரை ஆசிரியர் அமரும் இடத்தில் அமரவேண்டினர். ஆனால் நம் பெருமகனாரோ "இது குருவின் இடம். இதில் நான் அமர்வது தகாது; நான் வேண்டுமானால் வேறு இருக்கையில் அமர்கின்றேன்" என்று கூறினார்கள். தன்னிடத்து பணியாற்றுகின்றவர் ஆயினும் ஆசிரியர் என்பதற்காக இப்பெருமகனார் கொடுத்த மதிப்பினை மறக்கவும் இயலுமோ! இவர்களைப்போன்ற பெரியார்களைப் பார்த்துத்தான் "பெருக்கத்து வேண்டும் பணிவு" என்று வள்ளுவர் கூறினார் போலும்.

நம் பெரியார் அரசியலில் ஈடுபடுவதை அறவே வெறுத்தவர். ஒவ்வொரு மனிதனும் ஆன்மீகத்துறையில் சிறந்து விளங்கவேண்டும் என்பதே அவரது குறிக்கோள். சமுதாயத்திற்குத் தன்னால் இயன்றதைச் செய்யவேண்டும் என்பதைத் தனது செயலின்மூலம் விளக்கிக் காட்டியவர். எப்படியும் வாழலாம் என்றில்லாமல் இப்படித்தான் வாழவேண்டும் என்று வாழ்ந்து காட்டியவர். செல்வந்தர்கள் தம்முடைய பெருமை குன்றாமல் எப்படி வாழவேண்டும் என்பதை எடுத்துக்காட்டியவர். ஆண்டவன் நமக்கு அளித்த பிறவியை எப்படிப் பயன்படுத்தவேண்டும் என்றுணர்ந்து அதன்படி நடந்தவர். நிலையா உலகில் தன்னை நிலையாக நிறுத்திச் சென்றவர். சுருங்கக் கூறின் வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்தவர். அப்பெரியாரை நம் நெஞ்சம்மறப்பதில்லை. வாழ்க அவரது திருப்பெயர்! வளர்க அவரது தொண்டுகள்.

"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்."



திரு. க. கனகசபேசம் பிள்ளை,
பட்டமங்கலத் தெரு,
மாயூரம்

# நான் கண்ட உண்மை !

அன்பிற்குரிய நண்பர் திரு. K. S. இராமலிங்கம் அவர்கள் மறைந்தும் என் மனக்கண்முன் அவர்கள் இருப்பது போல் காட்சியளிக்கின்றார்கள். காரணம் அவர்களுடன் சிலகாலம் நெருங்கிப் பழக நேர்ந்ததே. அதன் மூலம் அவர்களுடைய பண்பு, சீரிய ஒழுக்கம், குணம், நடத்தை, குழந்தை உள்ளம், இன்சொல் இவைகள்தான் என்று என் உள்ளத்திற்குத் தோன்றுகிறது. அவர்கள் சமஸ்கிருத பாண்டித்யம் உடையவர்கள் என்பதை நானும் மற்றவர்களுடன் ஹாசியத்தில் சிலகாலம் கலந்து கொண்டிருந்தாலும் பிறகு என் கண்முன் அவர்கள் சமஸ்கிருத பண்டிதர்களுடன் அறிவுரையாற்றியதிலிருந்து அவர்களின் அறிவுத் திறமையைத் தெரிந்துகொள்ள முடிந்தது.

நம் சமூகத்திற்காக அவர்கள் அரும்பாடு பட்டார்கள் என்பது நெருங்கிப் பழகிய அநேகர்க்குத் தெரியாது. ஏனெனில் அவர்கள் மற்ற சாதாரண மக்களைப் போல் தான் செய்யும் உதவியையும் தன் மன நிலைமையிலும் எல்லோரிடம் வெளிப்படுத்துவது வழக்கமில்லை.

அவர்கள் வாழ்க்கையில் ஏக பத்தினி விரதத்தைக் கை பிடித்து ராஜ ரிஷிபோல் காட்சியளித்து வேதாந்தமும் அனுஷ்டித்து வந்தார்கள். ஒருவர் மனம்நோகப் பேசி நான் கண்டதில்லை. அவர்கள் காட்சியிலும் அறிவிலும், ஆற்றலிலும், செல்வத்திலும் பார்த்தால் என்னைப் போன்றவர்கள் நெருங்கிப் பழகுவது முடியாதென்று நினைக்கக்கூடும். ஆனல் கடவுளிடத்தில் யாரும் அன்பு உள்ளவர்கள் நெருங்குவது போல் நாம் துணிவுடன் எந்த விஷயத்திலும் தைரியமாக வார்த்தையாடலாம். நாம் பேசுவதில் ஏற்படும் குற்றம் குறைகளைப் பொறுத்துக்கொள்ளும் சுபாவம் உள்ளவர்கள்.

பெரிய மனிதர் என்றல் பெரும் பொருட்செல்வம் உடையவர்களைத் தான் உலகில் வழக்கத்தில் கருதுகிறோம். என்னைப் பொறுத்த வரை "பெரிய மனதர்" என்பது திரிந்து பெரிய மனிதர் என்று அழைக்கப் படுகிறது என்று நான் வியாக்கியானம் சொல்வது வழக்கம். ஆகவே பெரிய மனதுடையவர்கள் உண்மையில் பெரியவர்களென்றும் இவர்கள் பெரிய மனதுடையவர்கள் என்று சொல்வதும் மிகவும் பொருத்தமாகும்.

அன்னர் நம் சமூக மூல நூலான கார்கார்த்தார் சதகத்தை அலசிப்

படித்தவர்கள். "ஆரியர்கள்" என்றால் "அறிவாளிகள்" என்றும் நாம் "அறிவாளிகள்" என்பதால் நாம் ஆரியர்கள் என்றும் ஒரு புத்தகம் எழுதி அச்சிட்டு வெளியிடும் பணியை என்னிடம் ஒப்புவித்தார்கள். பல காரணங்களால் மேற்படி புத்தகம் வெளியிடப்படாமல் தங்கிவிட்டது அவர்களுக்கு ஒரு மனக்குறை.

எனக்கு நெருங்கிய உறவினர் லால்குடி உயர்திரு. எல். என். பரமசிவம் பிள்ளை அவர்களால் உண்டாக்கி பேணி வளர்த்து வந்த கார்காத்தார் சங்கத்திய தலைவர் பதவியை அன்னார் மறைவிற்குப் பிறகு நமது தாசில்பண்ணை திரு. K. S இராமலிங்கம் அவர்கள் தலைவராக செயலாற்றி வந்தார்கள். அவர்களுடன் நான் காரியதரிசியாக பணியாற்றும் தொண்டை எனக்கு அளித்தது, எனக்கு அளித்த பெருமையாக எண்ணுகிறேன். நான் காரியதரிசியாக இல்லையென்றால் தனக்கும் தலைவராக இருக்க இயலாது என்று ஒரு கூட்டத்தில் எடுத்துரைத்தார்கள்

தன்னை யாரும் இராமலிங்கம்பிள்ளை என்று எழுதுவதை வெறுப்பவர்கள். இராமலிங்கம் என்று மட்டும் எழுத வேண்டும் என்று நெருங்கியவர்களிடம் வற்புறுத்துவார்கள். அதேபோல் நெருங்கியவர்களையும் அவர்களும் அப்படியே அழைக்கவிரும்புவார்கள்.

அன்னார் அவர்கள் மனதால் சிந்திப்பதை அவர்கள் தர்ம பத்தினி திருமதி. கௌரியம்மாள் அறிந்து தாமும் ஈடுபட்டு ஏராளமான பொருள்களை மக்கள் நன்மைக்கு அள்ளி இறைத்திருக்கின்றார்கள் என்றால் மிகையாகாது. எப்பொருளை யார் யாருக்கு எப்போது எப்படி வழங்க வேண்டுமென்பதை தீர்க்க தரிசியாக இருந்து இன்றும் வழங்கி வருகிறார்கள் என்பது மெச்சத் தகுந்தது. அவ்வம்மையாருக்கு ஆண்டவன் நீண்ட ஆயுளையும், ஆரோக்கியத்தையும் கொடுக்க (நம்மவர்களுக்கு நலமென்ற சுய நலத்தைக் கருதியாவது) வேண்டிக் கொள்ள கடமைப்பட்டிருக்கிறேன். யாரிடமும் அச்சமில்லாமல் மனதில் பட்டதைப் பட்டவாறு இங்கிதக் குறைவு என்றுகூடக் கருதாமல் அப்படியே வெளிப்படுத்தும் சுபாவமுள்ள எனக்கு அவர்களிடமும் அவர்கள் மனைவி திருமதி. கௌரி அம்மாளிடமும் பெருமதிப்பு உண்டு என்பதையும் வெளிப்படுத்தக் கடமைப்பட்டிருக்கிறேன்.

நான் அவர்களிடம் வாதாடிய போதிலும் என்னிடமுள்ள அன்பின் பால் என்னை அழைத்து வரச்சொல்லி கலந்து பேசுவதை நினைத்தால் இப்பேதும் என்மனம் நெகிழ்கிறது. சிறந்த குணங்கள் படைத்திருந்த அவர்களின் ஆன்மா சாந்தியடைய இறைவனை வேண்டுகிறேன்.

சைவப் பெருநாவலர்
திரு. அ. நடேச முதலியார்

## ★ காவியங்களின் நற்பண்புகள் - கருணை ! ★

ஈடும் எடுப்புமில்லாத ஒரு தலை மகனின் வாழ்க்கை வரலாற்றை அடிப்படையாகக் கொண்டு ஒரு பெருங் கவிஞன், ஒன்பது சுவையும் கூட்டி மொழிநலங்காட்டி, சமுதாய நலனுக்கு வேண்டிய அனைத்தையும், அந்த அந்த மொழி பேசுர் மக்களின் நாகரிகம், பண்பாடு, நாடு, வளம் இவற்றோடு பிணைத்து அழகு படப் படைக்கும் ஒரு இலக்கியப் படைப்பே காவியம் என்று பேசப்படுகிறது.

காவியத்தின் இலக்கணத்தை, தண்டியலங்காரம் முதலிய சிற்றிலக்கணம் முதல், தொல் காப்பியம் வரை வேறு வேறு பெய ரால், சிறிது கூட்டியும் குறைத்தும் கூறியுள்ளனர். இக்காவியத்தைத் தொடர்நிலைச் செய்யுள் என்று குறிப் பிடுவதும் உண்டு. இக்காவியங் களுள் காண வேண்டிய பலவகை பாகுபாடுகளுள், சுவை எனப் பெயர் பெறும் சிறப்பியல்பும் ஒன்று. சுவை என்பதனை வடநூலார் ரசம் எனப்பகு த்து, ஒன்பது என ஒருவரையறையும் காட்டி நவரசம் என்பர். ஆனால் தமிழ் நூலோருள் மிகத் தொன்மை வாய்ந்த தொல்காப்பியனார், மெய்ப் பாடு எனப் பெயர் கொடுத்து, சுவை எட்டெனப் பிரித்து விளக்கம் தந்துள்ளார்.

மெய்ப்பாடு என்பது உடலில் தோன்றும் உள்ளத்தின் உணர்ச்சி யால் தோன்றும் வேறுபாட்டினைக் குறிப்பது. உள்ள உணர்ச்சியை வெளிப்படுத்தும் உடலினைக் கண்ணாடியாக அமைத்து அவ் வுடலின் மூலமாக சுவைகளை அறிவதனை மெய்ப்பாடெனக் காட்டினார் தொல்காப்பியர். இதனால் தன்னிடத்து எழுகின்ற உணர்ச்சியும் பிறரிடத்துக் காணப்படும் உணர்ச்சி யும் உடம்பின் மூலமாக அறியப்படுத லின் மெய்ப்பாடு எனப்பெயர் வந்தது என்பது ஆசிரியர் கருத்து. சுவை யென்பது தானே உணர்வது. மெய்ப் பாடு என்பது தன் உணர்ச்சியையும் பிறர் உணர்ச்சிகளையும் வெளிப் படுத்துவது என்பது சுருக்க உரை. ஆனால் காவியங்களிலே, கவிஞன் தான் உணர்ந்த சுவைகளை, தான் உணர்த்தக் கருதும் சுவைகளை சொல்லோவியங்களில் தீட்டி பாத்தி ரங்களின் வாயிலாகப் படிப்பவர்களை யும் சுவைக்கும்படி வைப்பது அவனுடைய ஆற்றலின் சிறப்பு. அங்ஙனம் அமைகின்ற காவியங் களிலே எண்வகை மெய்ப்பாடுகளை இன்ன, இன்ன காரணங்களைக் கொண்டு குறைவின்றி கவிஞன் தீட்ட வேண்டும் என்பது தொல்காப்பிய இலக்கணத்தாற் போதரும் பொருள்.

இம்முறையில் அவர்கள் எடுத்துக் கொண்டதை—

" நகையே அழுகை இளிவரல்
மருட்கை
அச்சம் பெருமிதம் வெகுளி
உவகையென்று
அப்பா லெட்டே மெய்பா
டென்ப "

என்ற சூத்திரத்தினுல் விளக்கம் செய்கிருர். இவ்வெட்டனுள் நான் எடுத்துக்கொள்ளும் கருணை என்னும் சுவை எதனுள் அடங்குகிறது என்று பார்க்கும் பொழுது அழுகையென்ற பிரிவினைச் சாருர். அஃது எங்ஙனம் எனின் அழுகை என்ற சுவை அல்லது மெய்ப்பாடு தனக்கு ஏற்படுகின்ற துன்பத்தினுல் உண்டாகும் துன்ப உணர்ச்சியாகும். அத்துன்ப உணர்ச்சியே பிறருக்கு ஏற்படும் துன்பத்திற்கு என்று தன் மாட்டு எழும்பொழுது நிலை வேறுபாடும் பெயர் வேறுபாடும் அடைகிறது. தன்னுடைய துன்பத்திற்கு அழும் உணர்ச்சிக்கு அழுகை என்று பெயர். ஆனுல் பிறருக்கு உண்டாகும் துன்பத்தைக் கண்டு தான் வருந்து கிற அதே துன்ப உணர்ச்சிக்கு அருள் அல்லது கருணை என்று பெயர். அதனுல் மனிதப் பண்பு தன் துன்பத்திற்கு வருந்துகின்ற நிலையும் பிறர் துன்பத்தைக் கண்டு தான் வருந்துகின்ற நிலையும் என இரு பிரிவினையுடையது. தன் துன்பத்துக்கு வருந்தும் நிலை மனிதப் பண்பில் மிக இழிவானது. பிறர் துன்பம் கண்டு தான் வருந்தும் நிலை மனிதப் பண்பில் மிக உயர்ந்ததும் தெய்வத்தன்மையுடையதும் ஆகும். இந்த நிலையில் அறிவுத்துறையில் மேம்பட்ட கவிஞன் ஒருவன் தான் படைக்கும் காவியப் படைப்பில் மனித சமுதாயத்தின் பண்பினை வரையறுத்துச் சொல்ல வரும்போது மிக உயர்ந்ததாகிய பிறர் துன்பம் கண்டு வருந்துகின்ற கருணை என்னும் சுவையினை மனிதப் பண்பாட்டின் சிகரமாக, குறிக்கோளாக வைத்துக் கூறுவான். இதனைக் காவியங்களில் தான் காணவேண்டும் என்னும் வரையறை இல்லை. காவியங்களில் சிறப்பாகவும் உயிரோட்டமாகவும் கருணை நிலைத்து நிற்கும். பிற இலக்கியங்களில் ஆங்காங்கே வற்புறுத்தப்பட்டுக் காணப்படும்.

" தங்குறை தீர்வுள்ளார் தளர்ந்து
பிறர்க் குறூஉம்
வெங்குறை தீர்ப்பிப்பார் விழுமி
யோர் - திங்கள்
கறையிருளை நீக்கக் கருதாது
உலகில்
நிறையிருளை நீக்குமேல் நின்று "

என்ற நீதிவெண்பாவினுல் இக்குறிக் கோளைக் காண்கிருேம்.

இனிக் கருணைப் பண்பினை மனிதக் குறிக்கோளாக வைத்துப் பேசுவதைக் காட்டிலும் பாத்திரப் படைப்பில் ஒரு மனிதன் தன் வாழ்க்கையில் பல் வகை நற்பண்புகளை உடையவனுய் வாழ்ந்து காட்டினுன் என்று அவன் வாழ்க்கை வரலாற்ருேடு கூட்டி, சந்தர்ப்பங்கள் காட்டி சுவைபடச் சொல்லோவியம் தீட்டும் பொழுது

கேட்பவர்க்கும் படிப்பவர்க்கும் நாமும் இப்படி வாழவேண்டும் என்ற உணர்ச்சியினையும் தூண்டுவது இயல்பாகும். இத்தன்மை கருதியே செய்யுள் நலம் காட்டவந்த சான்றோர் பலவகைப் பண்புக்கும் இடனாய் சுவைத்திறம் மேம்பட்டதாய் பொருளெனும் உயரினைப் பெற்றதாய் செய்யுள் படைப்பு இருக்கவேண்டுமென்று சொல்லிப் போந்தனர்.

அவ்வகையே வளர்ச்சிப் பெற்ற மொழிகளில் காவியப் படைப்பு உண்டாகும்பொழுது பண்பிலும் சுவையிலும் தனிச்சிறப்புடையதாகிய கருணைச் சுவையினைச் சான்றோர் பண்டு முதலே பாத்திரங்களில் வைத்து மிகச் சிறப்பாக எடுத்துக் காட்டினர். தமிழ் இலக்கியங்களில் காவியங்கள் என்பன கதைத் தொடர்புடைய தொடர்நிலைச் செய்யுளாய் முதன் முதலில் எழுந்த நூல் என்று சிலப்பதிகாரம் போற்றப் படுவதை நாம் அறிவோம். அவ்வொப்பற்ற நூலின் தொடர்பாகச் சிந்தாமணி முதலாகிய நூல்கள் எழுந்தன வேனும் இடைக்காலத்தில் தோன்றிய கம்ப ராமாயணம் போல் சிறப்புப் பெற்றன இல்லை யென்பதை யாவரும் அறிவர். கம்ப ராமாயணத்துக்குப் பின் 100 ஆண்டுகள் கழித்து வந்ததென்று கருதப்படுகிற பெரிய புராணம் அன்பு வழிப்பட்ட பெரு நூலாய், சமயச் சார்புடைய திருநூலாய், காவியப் பண்பு நிறைந்த கருவூலமாய்த் திகழ்கின்றது என்பது யாராலும் மறுக்கமுடியாத உண்மை. அந்த முறையில் கருணைச் சுவையை — பண்பினை இம்முறையே வைத்துப் பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம் போலச் சுவைத்துப் பார்க்கலாம். முதலாவதாகக் கருணைப் பண்பும் — சுவையும் தோற்றத்தால், சொல்லால். செயலால் விளங்கிக் கிடப்பன. ஒருவன் தோற்றம் கண்ட மாத்திரத்தில் காமம், வீரம், கருணை என்ற நிலைகளை விளக்கிவிடுவதை உலகியலில் இன்றும் காணலாம், ஒருவனுடைய பேச்சு அவனுடைய உள்ளக் கிடக்கையை எடுத்துக்காட்டும் நிலைக் கண்ணாடி. ஒருவனுடைய செயல் அவனது பண்பு மேம்பாட்டான் உரைக் கல்லாய் அமைந்து கிடக்கும் என்பது நாம் அறிந்த உண்மை. ஆகையால் இம்முறையே வைத்துத் தோற்றக் கருணை, சொற் கருணை, செயல் கருணை என மூவகைப்படுத்தி கீழ் மேலாக தோற்றக் கருணைக்குத் திருத்தொண்டர் புராணத்திலும் சொற்கருணைக்கும் ஈடும் எடுப்பும் இல்லா ஒப்பற்ற உயர்பெறும் தனிக் காவியமாகிய கம்பர் இராமாயணத்திலும் செயற் கருணைக்கு முதற்பெரும் காவியமாகிய முத்தமிழ்க் காவியம் சிலப்பதிகாரத்திலும் ஒவ்வொரு எடுத்துக்காட்டினல் சுவைப்போம்.

தொண்டர் புராணத்தில் அன்பும் பண்பும் அறிவும் நிறைந்த சான்றோர் காணு உயிர்க்கும் கையற்று ஏங்கும் கருணை நிறை தோற்றம உடையவராகக் காட்சியளிப்பவர் சொல் வேந்தர் என்னும் நாவுக்கரசராவார். நாவுக்கரசருடைய வரலாறு உண்மையின் அடிப்படையில் அமைதியின் ஊற்றில் அறிவென்னும்



காவிரிப்பூம்பட்டினம் (மேலையூர்) தாசில்பண்ணை
கல்விப் பணி - மதுரம் தொடக்கப் பள்ளி




காவிரிப்பூம்பட்டினம் (மேலையூர்) தாசில் பண்ணை கல்விப் பணி
சீனிவாசா உயர்நிலைப் பள்ளி

பண்பில் அடக்கம் என்னும் பணி நிலையில் தொண்டென்னும் பிறர் நலம் பேணும் பெற்றியில் முளைத்து, எழுந்து, மலர்ந்து, காய்த்துக் கனிந்த தோர் நற்பண்பின் படைப்பாகும். நாவுக்கரசர் என்னும் நற்கருணை யாளர் சமணப் படுகுழியில் வீழ்ந்து அவர்களுடைய கொடுஞ்செயல் என்னும் நெருப்பில் வெந்து அன்பு அமைதி என்னும் நீரிலும் காற்றிலும் குளிர்ந்து தொண்டனென்னும் தோற்றப் பொலிவோடு வெளிவந்த போது அவர் தோற்றம் காட்சியளிப் பதை உயர்பெறும் தெய்வக் கவிஞ ராகிய சேக்கிழார் பெருமான் திருவதனை என்னும் திருநகரில் உலாப்போத விட்டுக் காட்டுகிறர். அதனை—

" தூய வெண்ணீறு துதைந்த
பொன்மேனியும் தாழ்வடமும்
நாயகன் சேவடி கைவராச்
சிந்தையும் நைந்துருகிப்
பாய்வதுபோல் அன்பு நீர்பொழி
கண்ணும் பதிகச் செஞ்சொல்
மேய செவ்வாயும் உடையார்
புகுந்தனர் வீதியுள்ளே "

கண்டார்கள் கைதலைமேல்
குவித்து இந்தக் கருணை கண்டால்
மிண்டாய செய்கை அமண் கையர்
தீங்கு விளைக்கச் செற்றம்
உண்டாயின வண்ணம் எவ்வண்ணம்
என்று உரைப்பார்கள் பின்னும்
கொண்டாண்டு கொண்ட பிரானைத்
தொழுது துதித்தனரே

என்று அருள்கிறர். இங்கே கருணை என்னும் பண்பாகவே-சுவையாகவே திருநாவுக்கரசரைக் காட்டிவிடுகிருர் சேக்கிழார். அவர் தோற்றம் கண்ட வர்களை கருணை என்பது இப்படித் தான் இருக்கும் என்பதைக் காட்டி விடுகிறது.

மனிதன் காணக் கண் பெற்றுள் ளான். தீய நினைவுகளை எழுப்பு கின்ற பொருளைச் கண்டு அறி வும் பண்பும் கெட்டு அழிந்து போகாது உயர்ந்த நினைவுகளை எழுப்புகின்ற கருணைத் திருவுருவங் களைக் கண்டு மகிழ்ந்து பண்பாலும் அறிவாலும் மேம்படவேண்டும். மக்கள் என்பது திருநாவுக்கரசரை பாத்திரமாக படைத்த நோக்கம் என்பது காண்க.

அடுத்து அறத்தின் வடிவமாகிய திருவிராமனைப் பல கோணங்களில் காட்டும் கம்பன் என்னும் காவியப் புலவன் சொற்கருணையாளனுகக் காட்டும் திறத்தினைக் காண்போம்.

ஒரு மனிதனுடைய நினைவுகளும் சொற்களும் உறுதியும், ஆற்றலையும் பெறுவது அவனுடைய குறிக்கோளைப் பொறுத்ததாகும். தன் துன்பத்தைப் பொறுப்பவன் பிறர் துன்பத்தைக் கண்டு இரங்குவான். பிறர் துன்பத் தைக் கண்டு மகிழ்பவன் தன் துன்பத்தைத் தாங்கமாட்டாது தவிப் பான். அருளென்ற நற்பண்பு மனத் திலும் சொல்லிலும் ஊன்றி வெளிப் படவேண்டுமானுல் தன் துன்பத் தைப் பொறுத்துப் பிறர் துன்பத்திற்கு இரங்கும் உள்ளம் பெற்றிருக்க வேண்டும். அதனுல்தான் உலகம் அளந்த உயர்பெறும் புலவனுகிய

திருவள்ளுவன் "உற்றநோய் நோற்றல் உயிர்க்குறுகண் செய் யாமை அற்றே தவத்திற் குரு" என்றார்.

இராமன் அருளாளனாய் பரிணமிக்க தனக்குரிமையாகிய செல்வத் தைத் துறந்து இளமையில் துன் பத்தை ஏற்று நாடு கடந்து காடு சென்று வாழ வகை செய்த ஊழ் அவனைக் கருணைப் பண்பின் மேம்பட்டவனாய்க் காட்சியளிக்கச் செய்கிறது. துன்பத்தை ஏற்ற முக மலர்ச்சியைக் கவிஞர் பெருமான் "இப்பொழுதும் எம்மனோரால் இயம் புதற்கரிதே யாரும் செப்பரும் குணத்திராமன் திருமுகச் செல்வி என்று போற்றிப் புகழ்கிறான். அவன் உள்ளத்து அருள் பாங்கினை "என் பின்னவன் பெற்ற செல்வம் யான் பெற்ற செல்வம் அன்றோ" என்றும், துன்ப வரவேற்பினை "மின்னொளி கானம் இன்றே போகின்றேன் விடையுங்கொண்டேன்" என்றும் அவன் வாக்கிலேயே வைத்துத் தீட்டுகிறான். அத்தகைய அருள் தோற்றமும் கருணைச் செஞ்சொல்லும் உடையானுடைய ஒருபெரும் சிறப் பினை அடைக்கலப் பகுதி தோறும் ஆங்காங்கும் காணலாம். அவற்றுள் இறுதிப் படையாகிய விடணன் அடைக்கலத்தில் ஓர் எடுத்துக் காட்டு.

இலங்கைக் காவலன் தம்பியாகிய விடணன் அறவாளனாயினும் அரக்கர் குலத்தரசன் பின் தோன்றலாகை யால் அவனை அடைக்கலமாக ஏற்றுக் கொள்வதற்கு அருள்வடிவினனாகிய இராமனது அரசியல் சூழ்ச்சி யுடையார் அனைவரும் மறுத்தனர். அஞ்சினர். ஆனால் அனுமன் என்னும் அறிஞன் ஒருவனே அறிவாலும் அனுபவத்தாலும் வீடணனை நன்கு அறிந்து ஏற்றுக்கொள்ள வேண்டும் என்றனன். அப்போது மறுத்த அனைவருக்கும் திருவிராமன் தன் உள் கருத்தினையும் குறிக்கோளையும் விளக் குவான் போன்று அருட்பெருக்கினை வெளியிடுகின்றான். பலப்பல கார ணங்கள் காட்டுகிறான். பண்பாட்டின் சிறப்பினை விளக்குகிறான். இறுதி யாகத் தன்னலன் இழந்துங்கூட பிறர் நலனுக்காக வாழும் அருள் வாழ்வே குறிக்கோளுடைய வாழ்வு. இதனைத் தன் வரலாற்றோடு பிணைத்துச் சொல் கிறான். கருணை, பிறர் துன்பம் களைவது மாத்திரமன்று. பிறர் செய் யும் தீமையைக் களைவது கருணை தான். பிறற்குற்ற துன்பத்தைக் களைவது அறக் கருணை, பிறர் செய் யும் தீமையைக் களைவதும் மறக் கருணைதான். தாய்ப்பால் ஊட்டுவது அன்பின் ஊட்டத்தால் எழும் அறக் கருணை வளர்ச்சிக் கருதியது. தாய் மருந்தூட்டுவது மறக்கருணை — அழி வைத் தடுப்பதற்கு — துன்ப விலக் கிற்காக. எனவே கருணை மறவனாகிய இராமபிரான் சீதையினுடைய துன்பத்தைப் போக்குவதற்கும் இராவணனுடைய தீமையைக் களை வதற்கும் மேற்கொண்ட செலவே காடு நோக்கலும் இராவண யுத்தமு மாகும். இதனைத் தன் சொல் லாலேயே சொல்ல வைக்கின்றான் கம்பன் என்னும் காவியப் புலவன்.

“சீதையைக் குறித்ததேயோ
தீமை செய்த
பேதையைக் கொல்வேன்
என்று பேணிய
விரதப் பெற்றி”
—என்று கூற வைக்கிறான்.

இத்தகைய கருணைப் பேச்சாளனான திருவிராமனை

“பஞ்செனச் சிவக்கும்
மென்கால் தேவியைப்
பிரித்தபாவி வஞ்சனுக்
கிளையனாகிய வீடணன்”

கருணைவள்ளல் எழுந்தருளியிருக்கும் காட்சியைக் காண்கிறான், — காட்டு கிறான் — கவிஞன் நமக்கு.

கரங்கள் மீச்சுமந்து செல்லும்
கதிர் மணி முடியன் கல்லும்
மரங்களும் உருக நோக்கும்
காதலன் கருணை வள்ளல்
இரங்கினன் நோக்குந் தோறும்
இருநிலத் திருஞ்சுகின்றான்
வரங்களில் வாரியன்ன
தாளிணை வந்து வீழ்ந்தான்.

தன் குறைகளை நினைந்து வருந்தின வீடணனது அழுகைத் தோற்றமும் அவனுக்கு அருள் செய்ய நினைக்கும் கருணை வள்ளலின் அருள் தோற்றமும் ஒருசேரக் காட்சியளிக்கின்றன. தன் குறை நினைந்து வருந்தும் வீடண னுடைய அழுகைத் தோற்றமும் அவன் குறையைப் போக்கி அடைக் கலம் அளிக்க நினைக்கும் அருள் தோற்றமும் தொல்காப்பியத்தில் கூறப்படும் அழுகை என்ற சுவையின் இருகூறுகளும் காணக் கிடக்கின்றன.

இனிச் செயல் கருணைக்கு செம் பொருட் காப்பியமாகிய சிலப்பதி காரத்தில் காண்போம். காப்பியத் தலைமகள் கற்புக்கரசி கண்ணகி அவளுக்கு வாய்த்த வளம்பெறு கணவன் குன்றமனைய குறையாச் செல்வக்கோமகன் கோவலன் குண நிறைவும் அறிவும் திருவுமுடைய அறப்பெருஞ் செல்வியாகிய அவருக்கு வறுமொழியாளரோடு - வம்பப் பரத்தையொடு குறுநகை செய்து குன்றமனைய செல்வம் தொலைத்துக் கொடுமை சூழ்ந்தவனாய்க் காட்சியளிக்கிறான் கோவலன். அவன் தன் குறையைத் தானே நினைந்து வருந்தி மானம் பொருது இழிவினின்றும் ஈடேற செல்வம் செயக்கருதி குறையிலாக் கற்புடை யாளாகிய கண்ணகியோடு தன்னுடு கடந்து வேறு நாடு சென்று அகனகர் புகாது புறஞ்சேரி தங்கி செல்வ இடம் பெறாது சிறுவர் குடியாம் ஆயர்குடி புகுந்து பத்தினிப் பெண்ணுக்குச் செய்த பாதகம் நினைந்து வருந்தி நிற்கும் நிலை காட்டுகிறார் இளங்கோ. இந்நிலையில் கருணை பிறக்கிறது. என்ன செய்வது? கோவலன் கொலைக் களம் புகப்போகிறான். மறம் நினைந்து மாழ்கி நிற்கிறான். அவனுக்குத் தேறுதல் கூறவேண்டும். அவனும் வாழ்ந்தோம் என்று நினைக்க வேண்டும். அவன் வாழ்விலும் அருட் செயல்கள் சில நிகழ்ந்தன என்று தானே நினைந்து தேறவேண்டும். அதற்கு இளங்கோ மாடலன் என்னும் அருமறை அந்தணனை அமைத்து அவன் வாயிலாக கோவ லன் செய்த கருணைச் செயல்கள்

சிலவற்றைக் காட்டி பெருமை படச் செய்கிருர். இப்படைப்பு இந்தப் பகுதி வாழுவாழியில்லாதவன் கூட தான் செய்த அருட் செயல்களை நினைத்து பெரியோர் வாயிலாகக் கேட்டு பெருமிதம் எய்துதற்கென்றே அமைத்த பகுதியாகும். யானைக் கைப்பட்ட அருமறை முதுமையாளனை காப்பாற்றிய கருணையைக் கோவலனுக்குக் காட்டிக் குளிர வைக்கிருர் :

"தளர்ந்த நடையில் தண்டுகால்
ஊன்றி
வளைந்த யாக்கை மறையோன்
தன்னை
வேக யானை வெம்மையின்
கைக்கொள
ஒய்யெனத் தொழிந்தாங்க
உயர் பிறப்பாளனை
கையகத்து ஒளித்து அதன்
கையகம் புக்கு
கடக்களிறு அடக்கிய கருணை
மறவ!"

என்று பாராட்டுகிருர்.

பத்தினி ஒருத்தி படித்துறை எய்த
மற்றவள் கணவனுக்கு வறியோன்
ஒருவன்
அறியாக் கரிபொய்த்து அறைந்து
ணும் பூதத்து
கறைகெழு பாசத்து கையகப்
படலும்
பட்டோன் தவ்வை படுதுயர்கண்டு
கட்டிய பாசத்துக் கடிதுசென்
றெய்தி
என்னுயிர் கொண்டு மற்றிவன்
உயிர்தாஎன
பல்லாண்டு புரந்த இல்லோர்
செம்மல்

என்று புகழ்கிருர். இங்ஙனமாக கோவலனைக் கொடுமையினின்றும் விலக்கி கருணை மறவனுய் இல்லோர் செம்மலாய் இம்மைச் செய்த தீவினை ஒன்றுமிலனுய் உம்மைப் பயனை அடையக்கூடியவனுய் காட்டி முடிக்கிருர் இளங்கோ. இங்ஙனமாகக் காவிய உலகில் கருணையானது மனித சமுதாயத்தை உயர்த்துகின்ற மாட்சிமை பொருந்திய உயர்பெரும் சிகரமாய் உயிரோட்டமாய் எங்கும் நிலவுவதைக் கண்டு களிக்கலாம். கருணைக்கு வணக்கம்!





காவிரிப்பூம்பட்டினம் (மேலையூர்)
ஸ்ரீ பல்லவனீசுவரர் – சௌந்தரநாயகி கோயில் நுழைவாயில்



காவிரிப்பூம்பட்டினம் (மேலையூர்) சாயாவனம்
இந்திரனாலும் குபேரனாலும் பூஜிக்கப்பட்டது
ஸ்ரீ இரத்தின சாயாவனேசுவரர் - கோஷாம்பாள்

[1958ம் ஆண்டில் சென்னையிலிருந்து வெளிவந்த தென்னாட்டுப்பெரியார்கள் என்ற நூலில் பிரசுரிக்கப்பட்டிருந்த கட்டுரை]

**தலை சிறந்த தேசபக்தர் தெய்வநம்பிக்கை திலகம், நீதியின் வேந்தர், சிந்தனைக்களஞ்சியம், கொடைவள்ளல், பேரறிஞர் இல்லறஞானி, ஆராய்ச்சி வல்லுநர், ஆஸ்திகத்தின் அரசர்**

# ஸ்ரீமான் K. S. ராமலிங்கம் அவர்கள்

தாசில்பண்ணை
காவிரிப்பூம்பட்டினம் (மேலையூர்)

பரம்பரையாகவே தன்மானத்திலும் பெருந்தகையிலும் கவுரவத்திலும் சிறந்த பெருங்குடியிலுதித்த உத்தமர் இப்பெரியார். பரோபகாரி. இரக்க குண சீலர். பாட்டாளிகளின் காப்பாளர். ஜீவகாருண்யச் செம்மல் சொல்லிலும் நினைவிலும் செயலிலும் பரிசுத்தமான சத்தியவந்தர். கோடிப் பொன் கொட்டி வைத்தாலும் நேர்மை தவற மாட்டார். அஞ்சா நெஞ்சர். அறத்தின் காவலர். சர்வ தேச அரசியலின் கருத்துக்களையும் பல மதங்களின் தத்துவங்களையும் கலைகள் அனைத்தின் கருத்துக்களையும் நன்குணர்ந்த அறிவுக் களஞ்சியம். தேசியத் தெய்வீக பணிகட்கு வாரி வாரி வழங்கும் பெருந்தகையாளர்.

இருபதாம் நூற்றுண்டிலே சகல துறைகளிலும் ஒப்பற்ற பெரியார்களுள் திலகமாக விளங்கும் இப் பெரியாரின் சரித்திரம் அக்கால ஜனக மகாராஜன், பாரி வள்ளல், மநுநீதிச் சோழன், ஏலேல சிங்கர், சடையப்ப வள்ளல் முதலியவர்களின் சரித்திரங்களோடு வருங்காலச் சந்ததிகட்கு நீதிவழிகாட்டியாக விளங்கத் தக்கது. ஆதலினால்தான் இந்திய சரித்திரத்தில் இவருக்கு தனிச் சிறப்புக் கொடுத்து பிரசுரித்துள்ளோம்.

சகல துறைகளிலும் மாசற்ற புனிதர் இப் பெரியார். ஆதலின் இவரது சரிதையை அமைச்சர்களின் வரிசையில் பிரசுரித்துள்ளோம்.

ஆங்கிலம் இந்தி போன்ற மொழிகளிலும் வெளியாகும் இந் நூலின் மற்றைய பதிப்புகளிலும் இப் பெரியாரின் உயரிய வாழ்க்கையின் சீரிய இலட்சியமானது விரிவாக

விளக்கப்பட்டுள்ளது. இப் பெரியாரின் புகழ் தென்னுட்டில் மட்டுமல்லாது வட நாட்டிலும் வெளி நாடுகளிலும் பரவவேண்டுமென்பதற்காகவே இவரைப்பற்றி மிக விளக்கமாக பல பாகங்களிலும் பல பக்கங்கள் எழுதப் பட்டுள்ளன. இவரது அரிய குணதிசயங்களின் மேன்மையையும், இவரது தயாள சிந்தனையையும் பெருந் தகையினையும் பற்றி மக்கள் நன்கு அறிந்து கொள்ளலாம்.

### நேர்மையின் சிகரம்

கோடிப் பொன் கொட்டி வைத்தாலும் நேர்மை தவறமாட்டார். உள்ளத்தை இறைவனுக்கு இருப்பிட மாக்கி நேர்மையான சிந்தனையும் வஞ்சகமற்ற வெள்ளையான உள்ளமும் புனிதமான தெய்வீகத் தேசிய பணிகளிலே தயக்கமில்லாது பங்குகொண்டு தன்னுலானதைச் சீரிய முறையில் ஆற்றும் புனித நோக்கமும் உடையவராவார். ஒருவர் தனக்கு எதையும் சாதிக்கும் வல்லமையும் செல்வாக்கும் இருக் கிறது என்பதற்காக மற்ருேரின் சச்சரவுகளிலே தலையிட்டு ஒருதலைப் பட்சமாக நேர்மையற்ற முறைக்கு ஆதரவு தரும் தீச்செயலை வன்மை யாக கண்டிக்கக் கூடியவர். தனது வாழ்க்கையை நேர்மைப் பாதையில் மிக நிதானமாக தெய்வ நம்பிக்கை யோடும் விவேகத்தோடும் வைராக் கியத்தோடும் தீரத்தோடும் பெரு நோக்கோடும் நடத்திச் செல்கிறவர்.

The heights that great men reached and kept were not attained by sudden flight; but while their companions slept they were toiling upwards in the night ;

அதாவது உன்னத நிலையை அடைந் தவர்களெல்லாம் மற்ருர் உறங்குகை யில் விழித்திருந்தார்கள் என்பதற் கிணங்க இப்பெரியார் தமது பணிகளி லும் இலட்சியங்களிலும் ஆழ்ந்த சிந்தனை உடையவர். அலட்சிய வாழ்க்கை நடத்தாது எக்கருமத்தை எடுத்தாலும் நன்கு ஆராய்ந்து அறிவுத் திறனேடு அப்பழுக்கற்ற முறையில் பலரும் பாராட்டும் வண்ணம் வெற்றி காணும் ஊக்கம் உடையவர். செங்கோல் செலுத்துவ தாயினும் சிறுதொழில் புரிவதாயினும் எதற்கும் தகுதியான திறமையும் நுட்பமான மதியும் தீர்க்கமான சிந்தனையும் நேர்மையான கொள்கை யும் உடையவர். இன்பமாயினும் துன்பமாயினும் எது வந்தாலும் எக் கருமத்தும் மனச் சாட்சிக்கு விரோத மாக எதையும் செய்யமாட்டார்.

### தொல்குடித் திலகம் : மாண்புமிக்கவர்

சீரிய நோக்கத்திலும் கொள்கை யிலும் தாராள மனப்போக்கிலும் மானத்திலும் பெருந்தகையிலும் உதார குணத்திலும் ஈகையிலும் தெய்வ பக்தியிலும் தன்மானத்திலும் சிறந்த புகழ்பெற்ற பெரிய குடும்பத் தில் பிறந்தவர். செல்வந்தர்களா யினும் ஏழைகளாயினும் பாகு பாடின்றி உள்ளன்போடும் மரியாதையோடும் தாராளமாய் பழ கும் பெருந்தகைமையுடைய பெரிய

மனிதர் இவர். இவரது உறவினர்களும் பரம்பரையாகவே தன்மானத்தில் சிறந்தவர்களாகவே திகழ்கின்றனர். பிறருக்கு இன்னல் இழைக்காமல் யார் மனதும் நோகாமல் தனது உழைப்பாலும் புத்திக் கூர்மையாலும் தேடிய சொத்தினை யுடைய அப்பழுக்கற்ற பரம்பரயைச் சேர்ந்தவர். மானத்திலும் ரோஷத்திலும் கவரிமானை நிகர்த்த வமிசத்தவர். வந்தாரைச் சீறி விரட்டாமல் 'வாருங்கள்' என அழைத்து உபசரித்து விருந்தோம்பும் பெருங்குண முடையவர். சிறந்த புனிதக் குடும்பத்தவர். இவரைப் போன்றே இவரது இல்லக்கிழத்தியாரும் சந்ததிகளும் சகல வகைகளிலும் இணையற்ற உத்தம சீலமுடையவர்கள். இல்லற தர்மம் அணுவளவுங் குறையாது ஆற்றப்படுகிறது.

### பேரறிஞர் - ஆராய்ச்சி வல்லுநர் !

சர்வதேச அரசியலில் மட்டுமல்ல- இன்றைய உலக நிலையோடு வேத சாஸ்திரங்களிலும் இலக்கியங்களிலும் கலைத்துறைகளிலும் தெளிவான ஆராய்ச்சியுடைய அறிவுக் களஞ்சியம். இவரை அறிவுத் துறையில் எந்த மனிதரும் அலட்சியம் செய்யவோ குறை கூறவோ முடியாது. தீர்க்கமான சிந்தனையுடையவர். தனது ஆராய்ச்சிக்கும் அறிவிற்கும் சிந்தனைக்கும் தான்பிறத்த பெருங் குடிக்கும் ஏற்பச் சொல்லிலும் நினைவிலும் செயலிலும் பரிசுத்தமான நடத்தையை உடையவர்.

### கர்மயோகி இல்லறஞானி

"As all will end in and then he died" millions of multy millioners have vanished. We must not be swamped away by the temporary pleasures and the vanishing beauties of this world which is rushing towards the Jugglery of darkness. There is no happiness unmixed with worries. As we are some tools in the hands of god, we must do our duty without taking care for the fruits of our actions.

என்று மனு நீதியில் கூறப்படுவதற்கிணங்க சீரிய கடமையினைச் செவ்வனே ஆற்றுதல் உயரிய பிறவியின் சீரிய கடமையாகும். ஆதலினால் வாழ்வில் ஏற்படும் இன்ப துன்பங்களில் மனதைப் பறிகொடுக்காமல் லட்சியவாதியாக மன உறுதியோடும் பேராசையின்றி நடத்தல் வேண்டும்.

கீதையுட்பட்ட வேத சாத்திரங்களும் விவிலியமும் குர்ஆனும் கூறுவது போலவே சீரிய லட்சியவாதியாகப் புனித சிந்தனையிற் சிறந்து விளங்குகின்றார் இப்பெரியார்.

"நமது கடன் பணிசெய்து கிடத்தலே. இன்பமாயினும் துன்பமாயினும் இலாபமாயினும் நட்டமாயினும் ஆண்டவனைச் சேர்ந்ததே; அவனது கரத்திலே நாமொரு கருவி ஆதலின் யாவற்றையும் இறைவனுக்கு அர்ப்பணிக்க வேண்டும்" என்ற தெய்வப் பண்பாளர் இப்பெரியார்.

"துறவு வேடம் பூண்டு மலையடிவாரஞ்சென்று காணும் ஞானத்தை

இல்லத்திலிருந்தே அறத்தை இனி தாற்றி நிச்சயம் காணலாம்; கண்டு பிறவி பெருங்கடலையும் கடக்கலாம்" என்ற வேதவாக்கின்படி இப்பெரியார் இல்லத்திலேயே எல்லோரையும் போல இருந்தாலும் இறைத் தொண்டில் எண்ணமும் மேம்பாடுற்ற நோக்கமும் தர்மப்பணியிலே ஆர்வமும் பிறவிப்பணி நீங்கவேண்டுமென்ற தாகமும் ஜனக மகாராஜனுக்கிருந்த இல்லற ஞானமும் பொதிந்து விளங்குகிறார்.

சொன்ன வண்ணம் செய்வார்

வாய்வேதம் பேசுகிறவர் அல்ல இப்பெரியார். சொன்ன வண்ணம் செய்யும் கர்மவீரர். எதற்கும் அஞ்சி எதிலும் பின்வாங்கமாட்டார். நீதியும் நேர்மையும் உடைய எக்காரியத்திலும் பொருளாதாரத் துறையிலோ சரீரப் பிரயாசையிலோ தன்னை எத்துணைதூரம் ஈடுபடுத்தவும் தயங்கமாட்டார். புனிதப் பணிகளுக்கு ஈயாது மறைத்து பணத்தை புதைத்து வைப்பவரல்ல. சிரிய திட்டங்கட்காகத் தன்னை நாடி வந்தோரை ஆசை வார்த்தை பேசிப் போகச்சொல்லுபவருமல்ல. ஆதரவு தேடி அண்டிவந்த ஏழைகளை மேலை விடுபோ என்று சிறமாட்டார். தன்னாலான உதவியை முழுமனதோடும் அன்போடும் ஆர்வத்தோடும் ஆற்றக்கூடியவர். நினைத்தால் சொல்லுவார்; சொல்லுவதைக் கண்டிப்பாக செய்தே தீருவார்.

பாட்டாளிகளின் காப்பாளர்

ஏழைகளைக் கன்றைக்கண்ட பசுப் போன்று பார்த்து பாட்டாளிகளைத் தன்னுடன் பிறந்தாரெனக் கொண்டு அவர்களது அல்லல்களை அகற்றுவதிலே நாட்டங்கொண்டு நல்லது செய்வார். வேலையிட்டு கூலி குறைக்கமாட்டார். தங்களது குறைகளைத் தீர்க்கக் கோரும் மக்களிடம் கோபிக்க மாட்டார். உருட்டலுக்கும் மிரட்டலுக்கும் பணியமாட்டாரேயொழிய பாடுபடும் பாட்டாளிகளின் நிகரற்ற காப்பாளர் என்பதில் ஐயமில்லை. இந்த வகையில் தொழில் அதிபர்களுக்கும் நிலச்சுவான்தார்களுக்கும் இப்பெரியார் வழிகாட்டியாகத் திகழ்கின்றார் என்பது யாவரும் அறிந்தது.

நீதியின் வேந்தர்!

அநீதிக்காரர்களின் எதிர்ப்பானது மலைபோல் வந்தாலும் துரும்பாக நினைக்கும் ஆண்மையுடையவர். ஆனால் பாவத்தைச்செய்ய மிகப்பயந்தவர். மாசற்ற உத்தமர். தனக்குள்ள உயர்ந்த நிலையைக்கொண்டு மற்றவர்களைக் கீழ்த்தரமாக நடத்துவதில்லை. மற்றவர்களை அலட்சியமாக எண்ணுவதுமில்லை. பிறர் அல்லல்படுவதைக் கண்டு மனம் புண்படும்படி எக்காரியத்தையும் செய்யமாட்டார். இறைவனிடம் தளராத நம்பிக்கை வேண்டும், புண்ணியம் செய்ய வேண்டும், தாமும் தமது வமிசமும் நற்கதியை அடையவேண்டும், இறைவன் அருளுக்குப் பாத்திரமாக வேண்டும் என்ற புனித இலட்சியம் உள்ளவர். அல்லலுறும் உயிர்களின் அவதி நீங்க வேண்டுமென்ற தயாள சிந்தனையும் இரக்க சிலமும் உடைய புனிதர்.



பூம்புகாரின் கடற்கரை



காவிரிப்பூம்பட்டினம் (மேலையூர்)
தாசில் பண்ணை தமிழ்ப் பணி
பத்தினித்தெய்வம் கண்ணகி



காவிரிப்பூர்பட்டினம் (மேலையூர்)
புகாரின் காவல் தெய்வம் மணிமேகலையின் இஷ்ட தெய்வம்
சம்பாபதி அம்மன்

### சீரிய லட்சியவாதி

அன்பும் ஈகையும் அறமும் ஜீவ காருண்யமும் வஞ்சகமற்ற புனிதச் சிந்தனையும் அச்சமற்ற ஞானமுற்ற தீரமும் தேச முன்னேற்றத்திலே ஆர்வமும் எளியார்க்குதவுதலிலே தாகமும் நினைத்ததை சாதிக்கத் தக்க நெஞ்சு ஊக்கமும் தன்னம்பிக்கையும் விடாமுயற்சியும் வீரமும் ஆழ்ந்த சிந்தனையும் பொறுமையும் நிரம்பிய உயரிய தன்மைகொண்ட உத்தமர் இப் பெரியார். சொல்லப் போனல் பலரையும்விடப் பல வழிகளிலும் மேலானவரென்பது வெள்ளிடை மலை.

### மக்கள் புகழும் பெருந்தகையாளர்

இப்பெரியாரிடம் மக்கள் வைத்துள்ள மதிப்பும் மரியாதையும் இவரது வட்டத்தில் நுழைந்ததுமே நன்கு தெரிகின்றது. பாமரர்களும் பணக்காரர்களும் – அரசியல்வாதிகளாயினும், சுயேச்சையாளர்களாயினும் பொதுவில் யாவருமே இப்பெரியாரை மனமார வாழ்த்திப் புகழ்கின்றனர், அப்பழுக்கற்ற கொள்கையினுலும் தாராள தன்மையினுலும் இரக்கசீலத்தாலும் சகோதர உணர்ச்சியினுலும் பாவத்திற்குப் பயந்த புண்ணிய புனிதத் தன்மையினுலும் ஏழைகளிடம் பரிவு காட்டும் பரோபகாரச் சிந்தையினுலும் மனிதர்களிடம் பேதமின்றி உள்ளன்பினேடு வஞ்சகமும் பேராசையும் இன்றி வெள்ளையான உள்ளத்தோடு பழகி வறியார்க்கு உதவும் தெய்வப் பண்பாலும் மக்களின் ஒருமித்த அபிமானத்தைப் பெற்று முடிசூடா மன்னர் போன்று அன்பின் அரசராகவும் தர்மத்தின் காவலராகவும் ஜீவகாருண்ய சேனுதிபதியாகவும் பெருவாழ்வு வாழ்கின்றார். இப்பெரியார்க்கு ஏற்பட்டுள்ள கீர்த்தியில் இந்நாட்டின் எல்லா மக்களுக்கும் பங்குண்டு என்று எண்ணவேண்டும்.

அதோடு மட்டுமல்ல, இந்த நூலில் பிரசுரிக்கப்பட்டுள்ள சில பிரமுகர்களைப்போல இப்பெரியார் அமைச்சர் பதவியில் உள்ளவராக இல்லாவிட்டாலும் எவரையும்விட எவ்வகையிலும் குறைந்தவரல்ல என்பதை உலகம் அறிந்துகொள்வதற்காகத்தான் இவரைப்பற்றி ஏழு பக்கங்கள் எழுதலானேன்.



# நீண்டபுகழ் இராமலிங்கம் நினைவு வாழ்க!

திரு. சா. கணேசன் M. L. C. காரைக்குடி

ஊரெல்லாம் நமதூராம்; உலகவர்கள் எல்லாரும் உற்ருர் ஆவர்;
யாருடனும் பகையில்லை; எவ்வெவரும் நட்பினரே என்று தாழ்ந்தால்
போரென்ற ஒன்றில்லை; பொருதுதலும் போயொழியும் பொன்றல் இல்லை
சீரொன்றும் மனம் வாக்குச் செய்கைகளில்; ஆதலினுல், சிறக்கும் வையம்!

வையமெலாம் ஒருகுடிலாய் வானமதே தனிமுகடாய் மனத்தில் எண்ணி,
ஐயமதை முற்றறுத்து, அன்பறமே துணைக்கொண்டு, அச்சம் நீக்கி,
பொய்யான பெருமைகளை,புகழ்விருப்பை, பொருமையினைப் பொசுக்கிவிட்டு,
எய்யாத படிஉலகில், இறைபேணி, வாழுதலே இன்பம்ஆகும்!

ஆகுபல சமயமவை அத்தனைக்கும் முழுமுதலாய் ஆன தெய்வம்
ஏகமென உணர்ந்தவைகள் எல்லாமும் உண்மைஎன இதயம் ஆரச்
சேகறவே மதித்துநிதம் செய்பணியில் பயன்கருதாச் செம்மைநோற்பின்
மாகமுறு பதத்தன்றி மண்ணகத்தும் பேரின்பம் மாந்தலாமே!

மாந்தரெலாம் பொருளதனை மன்னுமறம் பிறழாத வழியே ஈட்டித்
தாந்தாமும் துய்ப்பதுடன் தக்கதற்கும் அகதிகட்டும் தகவின் நல்கி
ஆந்துணையும் தம்கடமை ஆற்றி,நிதம் உரிமைக்கே அமரிடாமல்
சாந்தநெறி படிந்தொழுகின் சந்தமும் மகிழ்வோங்கத் தழைத்து வாழ்வர்!

வாழ்வென்ருல் எப்படியோ, வையகத்தில், சாவாமல், வாழ்வதில்லை,
தாழ்வொன்றும் நினையாமல், சத்தியத்தை மறவாமல், தருமம்பூண்டு
ஏழ்மையுளம் கொள்ளாமல்; "இருப்பதுவே போதும்" எனும் எண்ணத்தோடு,
ஊழ்வலிக்கும் தளராமல், உயர்மானத்தோடு வாழ்தல் உண்மை வாழ்வாம்.

இத்தகைய நெறிபற்றி, இவ்வுலகில் செம்மையுடன் எழிலார் வாழ்வை
உத்தமமாய் நடாத்தியபின் ஓங்கியுல களந்தபிரான் உறைவைகுந்த
முத்திநிலை பெற்றிறைவன் மொய்கழற்கே ஆளான முதிர்ந்த ஞான,
சத்தியனும் இராமலிங்கத் தண்ணளியான் நற்புகழ்யான் சாற்றற் பாற்ருே!

பலநூல்கள் கற்றறிந்தும், பலஅறங்கள்பண்ணுவித்தும், பண்பேபூண்டு,
நலமாகும் உரைசெயலே நாள்தோறும் ஆற்றமகிழ் நல்ல உள்ளம்;
குலமுயரப், பதியுயரக், குலவுதெய்வ நெறிபேணும் கொள்கை ஓங்க,
நிலவுலகில் செயலாற்றி நீண்டபுகழ் இராமலிங்கம் நினைவு வாழ்க!

ஆண்டதுசௌ மியவில்மதி ஆனிதெய்தி பதின்மூன்றில் அமைந்த வெள்ளி
பூண்டநாள் அனுடமாகப் பொங்கிவளர் பிறைதிரயோ தசியாம்போது
நீண்டநாள் ளிரவின்முன் நிகழ்நாடி நாற்பத்து மூன்றுய் நிற்க
ஈண்டுலகை விடுத்திறைவன் இணையடிக்கே ஆளானுன் இராம லிங்கம்.



௭.

। कश्चिन्महान् ।

# ஒரு மகான்

---

[1] आसीत् श्रीरामलिङ्गाख्यस्सत्यशील: सतांमत: ।
कश्चित् महान् कुलेजात: श्रीविष्णुचरणोद्भवे ।

ஸ்ரீமகாவிஷ்ணுவின் சரணத்திலிருந்து உண்டான குலத்தில் பிறந்தவரும் ஸத்யசீலரும் நல்லவர்களால் போற்றப்படுகிற வரும் ஸ்ரீ ராமலிங்கம் என்ற பெயருள்ளவருமான மகான் ஒருவர் இருந்தார்.

[2] कारुकुट्याभिधे पुण्ये ग्रामे सज्जनसंवृते ।
सोमसुन्दरनाम्नोय: पुत्रभावंगतोह्यभूत् ।

அவர் காருகுடி என்ற பெயருள்ளதும் நல்லவர்களும் நிறைந்ததுமான புண்யமான கிராமத்தில் ஸோமசுந்தரத்திற்கு பிள்ளையாக பிறந்தார்.

[3] बाल्ये गृहीतविद्योऽसौ वेदशास्त्रार्थ तत्ववित् ।
पातन्जलंयोगसूत्रं ज्ञात्वाऽनुष्ठितवानभूत् ।

அவர் சிறுவயதில் கல்வியைப்பயின்று மேலும் வேதங்கள், சாஸ்திரங்கள் இவைகளின் தத்துவத்தை அறிந்து பதஞ்சலி என்ற முனிவர் செய்துள்ள யோக சூத்திரத்தையும் அறிந்து அதை அப்யாஸமும் செய்து வந்தார்.

[4] कावेरिपत्तनाख्यस्य नाम्न: प्रसिद्धस्यपुरस्य य: ।
अदूरात् मेलपूरु ख्यातं ग्रामंपुण्यं जगाम स: ।

பிறகு காவேரிப்பூம்பட்டினம் என்ற ஊருக்குச் சமீபத்தி லுள்ள மேலையூர் என்ற புண்யமான கிராமத்திற்கு வந்து சேர்ந்தார்.

[5] तत्र ताशिल्कुटुम्बेत्तां गौरीनाम्नीं सतीप्रियाम् ।
जातां जग्राह वैवाहविधिना परया मुदा ॥

அங்கு தாசில்பண்ணை என்ற பிரசித்திபெற்ற குடும்பத்தில் பிறந்த உத்தமியான கௌரி என்ற பெயர் பெற்ற பெண்ணை முறைப்படி மணந்துகொண்டார்.

[6] सुमीनाक्षीसुन्दरेशाविवख्यातौ महागुणौ ।
दातारौ भजतां चास्तां दयावन्तौसुधार्मिकौ ॥

அவ்விருவர்களும் மிக்க குணமுள்ளவர்களும் தன்னை அண்டியவர்களுக்கு நிறைய (கோரியதை) கொடுப்பவர்களும் தர்மசிந்தனை உள்ளவர்களும் தயவு உள்ளவர்களாகவும் மீனாக்ஷி சுந்தரேச்வரர் போன்று விளங்கினார்கள்.

[7] रामलिङ्गस्तयासत्या धर्म्यं पन्थानमाश्रितः ।
नित्यं श्रीकृष्णमूर्तिंच पूजयामास धर्मतः ॥

அந்த ராமலிங்கம் உத்தமியான மனைவியுடன் தார்மீக வழியைப் பின்பற்றி தினந்தோறும் ஸ்ரீ கிருஷ்ண படத்தை வைத்து முறைப்படி பூஜித்து வந்தார்.

[8] तत्रग्रामे तयातेन विद्याशाला सुनिर्मिता ।
धर्मशाला च बहुशः राजतेद्यापि शास्त्रतः ॥

அந்த ஊரில் அவர் ஓர் உயர்நிலைப்பள்ளியையும் நிறுவினார். மேலும் சாஸ்திரங்களில் கூறியபடி பலதர்ம சத்திரங்களையும் ஏற்படுத்தினார். இவைகள் இன்றும் நல்லமுறையில் செயல்படுகின்றன.

[9] विष्णवीशादीन् प्रतिष्ठाप्य यथाविधिमहालये ।
यथाकालं समृद्धार्थान् पूजयामासविप्रतः ॥

மேலும் ஆங்காங்கு பெரிய ஆலயங்களையும் கட்டி அதில் ஸ்ரீ விஷ்ணு, ஸ்ரீ பரமேஸ்வரன் கிராம தேவதைகள் முதலிய தெய்வங்களைப் பிரதிஷ்டை செய்து பொருள்களை ஸ்வாமிகளுக்குச் சொந்தமாகச் செய்தும் வேதியரைக்கொண்டு பூஜை நடக்கும்படி செய்துள்ளார்.

[10] जगद्गुरोः सन्निधौ च देवीमन्त्रं यथाक्रमम् ।
प्राप्योपासनतो देवीं तां प्रत्यक्षीचकार सः ।

அவர் ஜகத்குருவின் ஸந்நிதியில் ஸ்ரீ தேவிமந்திரத்தையும் (யந்திரத்தையும்) பெற்று அதை நன்கு உபாஸித்து ஸ்ரீ தேவியை ப்ரத்யக்ஷமாகச் செய்தார்.

[11] राजशेखरनामानं गुणवन्तं सतांमतम् ।
दौहित्रं पुत्रभावेन स्वीचकार तया सः ।

பிறகு நல்லவர்கள் ஏற்றுக்கொண்ட பெண்ணின் பிள்ளையாகிய பேரன் ராஜசேகரன் என்பவரை ஸ்வீகாரம் செய்து கொண்டார்.

[12] तस्मिन्पुत्रे तथापत्न्यां धर्मरक्षणरूपिणीम् ।
धुरं सर्वां विनिक्षिप्य दिवं पुण्यैर्जगाम सः ।

பிறகு அந்தப் பையனிடத்திலும் தன் மனைவியிடத்திலும் தர்மங்களை ரக்ஷிக்கும்படியான ஓர் பொறுப்பை வைத்துவிட்டு புண்யத்தினால் சுவர்க்கம் சென்றார்.

[13] पश्यत्सु बन्धुवर्गेषु भाषमाणः स्वयं द्रुतम् ।
भीष्मोऽपरो यथा स्वर्गं रम्यं पुण्यैर्ययौ मुदा ।

பீஷ்மர் எவ்விதம் (தான் நினைத்த சமயத்தில் பந்துக்கள் சூழ்ந்திருக்க தர்மத்தை உபதேசித்துவிட்டு) சொர்க்கம் சென்றாரோ, அவ்விதம் அந்த ராமலிங்கரும் பந்துக்கள் பார்த்துக் கொண்டிருக்கும்பொழுது பேசிக்கொண்டிருந்தபடியே சுவர்க்கம் எய்தினார்.

[14] तस्याः श्रीकण्णकी नाम्न्याः आलयं येन निर्मितम् ।
तत्र तत्स्थापनार्थाय कलाशाला च निर्मिता ।

பிறகு அவர் விட்டுச்சென்ற பதிவிரதையான கண்ணகி தேவிக்கு ஓர் ஆலயம் நிறுவி வருகின்றனர். இறந்த ராமலிங்கத்தின் நினைவாக ஒரு மாணவர் இல்லமும் ஏற்படுத்தியுள்ளார்கள்.

[15] कृष्णमूर्तिपटं चैव पत्न्या संपूजितं यत ।
समुद्रतीरगे दिव्ये स्थापयामास मण्डपे ।

பத்தினியான கௌரியம்மாளால் பூஜிக்கப்பட்ட ஸ்ரீ கிருஷ்ணபடத்தையும் சமுத்திரக்கரை ஓரத்தில் (வாணகிரி



காவிரிப்பூம்பட்டினம் (மேலையூர்) தாசில் பண்ணை
வாணகிரி ஸ்ரீநிவாச விலாசத்தில் உள்ள
ஸ்ரீ நவநீத கிருஷ்ணன்



காவிரிப்பூம்பட்டினம் தாசில் பண்ணை அறப் பணி
திருக்கடவூர் மதுரம் கல்யாண மகால்

என்ற இடத்தில்) ஓர் மண்டபத்தைக் கட்டி அதில் பிரதிஷ்டை செய்துள்ளார்கள்.

[16] प्रतिसंवत्सरं राधाकल्याण सुमहोत्सवः ।
प्रचलच्चयथापूर्वं भजनोत्सवमार्गतः ॥

அங்கு (அந்தப் படத்திற்கு) வருஷந்தோறும் ராதா கல்யாண மகோத்ஸவம் முன்பு காணப்படாத முறையில் பஜனோத்ஸவ வழியாக நடைபெற்று வருகிறது.

[17] एवं धर्माननेकांश्चापि आचन्द्ररवितारकम् ।
रक्ष्यमाणानिमान् सर्वान् कृत्वाचास्तंगतोमहान् ॥

இவ்விதம் சந்திரன் சூரியன் இவர்கள் உள்ளவரை நடக்கும்படி பல தர்மங்களை ரக்ஷித்து நடத்தி வரும்படி செய்துவிட்டு அந்த மகான் அஸ்தமனத்தை அடைந்துவிட்டார்.

[18] पुत्रेणतारितः स्वर्गं स्वपुण्यनिचयैर्गतः
सजीवात्मा शान्तिमेत्य स्वकुटुम्बं सदाऽवतु ।
कल्याणरामभट्टार्य विबुधेन सुपुण्यदम्
रामलिङ्गस्य चरितं कृतमद्यविराजते ॥

புத்திரனால் செய்யப்பட்ட கர்மாவினாலும் தான் செய்த புண்ணியக் குவியல்களாலும் சுவர்க்கத்தை அடைந்து அந்த ஜீவாத்மா சாந்தியைப்பெற்று தனது குடும்பத்தை எப்பொழுதும் காப்பாராக!

—கல்யாணராம பட்டாச்சாரியார்.

சேங்காலிபுரம்.



श्रीः

अथ ललिता त्रिशती स्तोत्र प्रारंभः ।

अस्य श्रीललिता त्रिशतीस्तोत्र महा(माला)मन्त्रस्य हयग्रीवो भगवानृषिः अनुष्टुप्छन्दः श्रीललिताभट्टारिकादेवता श्रीमहात्रिपुरसुन्दरी प्रसादसिध्यर्थे, (जपे) अर्चने विनियोगः ।

அஸ்ய ஸ்ரீலலிதா த்ரிசதிஸ்தோத்ர மஹா (மாலா) மந்த்ரஸ்ய ஹயக்ரீவோ பகவான் ரிஷி: அநுஷ்டுப்ச்சந்த: ஸ்ரீலலிதா பட்டாரிகா தேவதா ஸ்ரீமகா த்ரிபுரஸுந்தரீ ப்ரஸாத ஸித்யர்த்தே (ஜபே) அர்ச்சனே விநியோக:

मूलमन्त्रेण करन्यासः अंगन्यासश्च कुर्यात् ।

மூலமந்த்ரத்தினுல் கரன்யாஸமும் அங்கந்யாஸமும் செய்து கொள்ளவேண்டியது.

॥ ध्यानम् ॥

सकुंकुमविलेपनां अलिकचुंबिकस्तूरिकां
समन्द हसितेक्षणां सशरचापपाशांकुशाम् ।
अशेषजनमोहिनीं अरुणमाल्यभूषांबरां
जपाकुसुमभासुरां जपविधौस्मरेदंबिकाम् ॥

*தியானம்*

ஸகுங்குமவிலேபனும் அளிக சும்பி கஸ்தூரிகாம்
ஸமந்தஹஸிதேக்ஷணும் ஸசரசாப பாசாங்குசாம் ।
அசேஷஜனமோஹினீம் அருணமால்ய பூஷாம்பராம்
ஜபாகுஸும பாஸுராம் ஜபவிதௌ ஸ்மரேதம்பிகாம் ॥

एवं अम्बां ध्यात्वा, एतैःनामभिः अम्बिकायाः चरणनलिनयोः श्रीकुंकुमैः बिल्वपत्रैः पंकजाद्यैः पुष्पविशेषैर्वा पूजयेत् ।

இப்படி த்யானம் செய்துகொண்டு த்ரிசதி நாமாவளியால் அம்பிகையின் பாதங்களில் குங்குமம், பில்வம் தாமரைப்பூ இவைகளால் அர்ச்சனை செய்யவும். இவ்விதம் த்ரிசதி நாமாவளியினுல் மஹா த்ரிபுர ஸுந்தரிக்கு அர்ச்சனை. நல்லநிலையில் அம்பாளின் அருளும் பெற்று விளங்கியவர் ஸ்ரீமான் ராமலிங்கம் பிள்ளை அவர்கள். இவ்வாறு மற்ற யாவரும் அர்ச்சனைசெய்து பராசக்தியின் திருவருளுக்குப் பாத்திரமாகி நல்வாழ்வு வாழவேண்டும் என்ற நோக்கத்துடன் இதை வெளியிட்டுள்ளோம்.



காவிரிப்பூம்பட்டினம் (மேலையூர்) தாசில் பண்ணை அறப்பணி
சீனிவாச விலாசம் – வானகிரி



காவிரிப்பூம்பட்டினம் (மேலையூர்) தாசில் பண்ணை
ஸ்ரீ இராமநந்தீசுவரர் - திருக்கடையூர்

௧

# ஸ்ரீ லலிதா த்ரிசதீ ஸ்தோத்ர நாமாவளி

॥ श्री ललितात्रिशती स्तोत्र नामावलिः ॥

---

| | |
|---|---|
| ஓம் ககார ரூபாயை நம: | ओं ककाररूपायै नमः |
| ,, கல்யாண்யை நம: | ,, कल्याण्यै नमः |
| ,, கல்யாணகுணசாலின்யை நம: | ,, कल्याणगुणशालिन्यै नमः |
| ,, கல்யாணசைலநிலயாயை நம: | ,, कल्याणशैलनिलयायै नमः |
| ,, கமனீயாயை நம: 5 | ,, कमनीयायै नमः |
| ,, கலாவத்யை நம: | ,, कलावत्यै नमः |
| ,, கமலாக்ஷ்யை நம: | ,, कमलाक्ष्यै नमः |
| ,, கல்மஷக்ன்யை நம: | ,, कल्मषघ्न्यै नमः |
| ,, கருணாம்ருதஸாகராயை நம: | ,, करुणामृतसागरायै नमः |
| ,, கதம்பகாநநாவாஸாயை நம: | ,, कदम्बकाननावासायै नमः |
| ,, கதம்பகுஸுமப்ரியாயை நம: | ,, कदंबकुसुमप्रियायै नमः |
| ,, கந்தர்பவித்யாயை நம: | ,, कन्दर्पविद्यायै नमः |
| ,, கந்தர்பஜனகாபாங்க வீக்ஷணாயை நம: | ,, कन्दर्पजनकापांगवीक्षणायै नमः |
| ,, கர்ப்பூரவீடீ ஸௌரப்ய கல்லோலித ககுப்தடாயை நம: | ,, कर्पूरवीटीसौरभ्य कल्लोलित ककुप्तटायै नमः |
| ,, கலிதோஷஹராயை நம: 15 | ,, कलिदोषहरायै नमः |
| ,, கஞ்ஜலோசனாயை நம: | ,, कंजलोचनायै नमः |
| ,, கம்ரவிக்ரஹாயை நம: | ,, कम्रविग्रहायै नमः |
| ,, கர்மாதிஸாக்ஷிண்யை நம: | ,, कर्मादिसाक्षिण्यै नमः |
| ,, காரயித்ர்யை நம: | ,, कारयित्र्यै नमः |
| ,, கர்மபலப்ரதாயை நம: 20 | ,, कर्मफलप्रदायै नमः |
| ,, ஏகார ரூபாயை நம: | ,, एकाररूपायै नमः |
| ,, ஏகாக்ஷர்யை நம: | ,, एकाक्षर्यै नमः |

| | |
|---|---|
| ஓம் ஏகாऽநேகாऽக்ஷராऽऽக்ருத்யை நம: | ओं एकाऽनेकाऽक्षराऽऽकृत्यै नमः |
| ,, ஏதத்ததிதி அநிர்தேச்யாயை நம: | ,, एतत्तदित्यनिर्देश्यायै नमः |
| ,, ஏகாநந்த சிதா க்ருத்யை நம: | ,, एकान्त चिदाकृत्यै नमः |
| ,, ஏவமித்யாகமாபோத்யாயை | ,, एवमित्यागमाबोध्यायै नमः |
| ,, ஏகபக்திமதர்சிதாயை நம: | ,, एकभक्ति मदर्चितायै नमः |
| ,, ஏகாக்ரசித்த நிர்த்யாதாயை „ நம: | ,, एकाग्रचित्तनिर्ध्यातायै नमः |
| ,, ஏஷணாரஹிதாத்ருதாயை நம : | ,, एषणारहिताद्दतायै नमः |
| ,, ஏலாஸுகந்திசிகுராயைநம: 30 | ,, एलासुगन्धि चिकुरायै नमः |
| ,, ஏந:கூடவிநாசின்யை நம: | ,, एन कूट विनाशिन्यै नमः |
| ,, ஏகபோகாயை நம: | ,, एकभोगायै नमः |
| ,, ஏகரஸாயை நம: | ,, एकरसायै नमः |
| ,, ஏகைச்வர்யப்ரதாயின்யை நம: | ,, एकैश्वर्य प्रदायिन्यै नमः |
| ,, ஏகாதபத்ர ஸாம்ராஜ்ய ப்ரதாயை நம: | ,, एकातपत्रसाम्राज्यप्रदायै नमः |
| ,, ஏகாந்தபூஜிதாயை நம: | ,, एकान्तपूजितायै नमः |
| ,, ஏதமான ப்ரபாயை நம: | ,, एधमानप्रभायै नमः |
| ,, ஏஜதநேக ஜகதீச்வர்யை நம: | ,, एजदनेकजगदीश्वर्यै नमः |
| ,, ஏகவீராதி ஸம்ஸேவ்யாயை நம: | ,, एकवीरादिसंसेव्यायै नमः |
| ,, ஏகப்ரபாவசாலின்யை நம: 40 | ,, एकप्रभावशालिन्यै नमः |
| ,, ஈகார ரூபாயை நம: | ,, ईकाररूपायै नमः |
| ,, ஈசித்ரியை நம: | ,, ईशित्र्यै नमः |
| ,, ஈப்ஸிதார்தப்ரதாயின்யை நம: | ,, ईप्सितार्थप्रदायिन्यै नमः |
| ,, ஈத்ருகிதி அவிநிர்தேச்யாயை நம: | ,, ईदृगित्यविनिर्देश्यायै नमः |
| ,, ஈச்வரத்வவிதாயின்யை நம: | ,, ईश्वरत्वविधायिन्यै नमः |
| ,, ஈசாநாதி ப்ரும்ஹமய்யை நம: | ,, ईशानादिब्रह्ममय्यै नमः |
| ,, ஈசித்வாதி அஷ்டசித்திதாயை நம: | ,, ईशित्वाद्यष्टसिद्धिदायिन्यै नमः |
| ,, ஈக்ஷத்ரயை நம: | ,, ईक्षत्र्यै नमः |
| ,, ஈக்ஷணஸ்ருஷ்டாண்ட கோட்யை நம: | ,, ईक्षणसृष्टांडकोट्यै नमः |

| | |
|---|---|
| ஓம் ஈச்வர வல்லபாயை நம: | ओं ईश्वरवल्लभायै नमः |
| ” ஈடிதாயை நம: | ,, ईडितायै नमः |
| ” ஈச்வரார்தாங்கசரீராயை நம: | ,, ईश्वरार्धांगशरीरायै नमः |
| ” ஈசாதி தேவதாயை நம: | ,, ईशाधिदेवतायै नमः |
| ” ஈச்வரப்ரேரணகர்யை நம: | ,, ईश्वरप्रेरणकर्यै नमः |
| ” ஈசதாண்டவஸாக்ஷிண்யை நம: | ,, ईशतांडवसाक्षिण्यै नमः |
| ” ஈச்வரோத்ஸங்கநிலயாயை நம: | ,, ईश्वरोत्संगनिलयायै नमः |
| ” ஈதிபாதாவிநாசின்யை நம: | ,, ईतिबाधाविनाशिन्यै नमः |
| ” ஈஹாவிரஹிதாயை நம: | ,, ईहाविरहितायै नमः |
| ” ஈசசக்த்தியை நம: | ,, ईशशक्त्यै नमः |
| ” ஈஷத்ஸ்மிதானனாயை நம: 60 | ,, ईषत्स्मिताननायै नमः |
| ” லகாரரூபாயை நம; | ,, लकाररूपायै नमः |
| ” லலிதாயை நம: | ,, ललितायै नमः |
| ” லக்ஷ்மீவாணீநிஷேவிதாயை நம: | ,, लक्ष्मीवाणीनिषेवितायै नमः |
| ” லாகின்யை நம: | ,, लाकिन्यै नमः |
| ” லலனாரூபாயை நம: | ,, ललनारूपायै नमः |
| ” லஸத்தாடிமபாடலாயை நம; | ,, लसद्दाडिमपाटलायै नमः |
| ” லலந்திகாலஸத்பாலாயை நம: | ,, ललन्तिकालसत्पलायै नमः |
| ” லலாடநயனார்சிதாயை நம: | ,, ललाटनयनार्चितायै नमः |
| ” லக்ஷணோஜ்வலதீப்ராங்க்யை நம: | ,, लक्षणोज्वलदीप्रांगायै नमः |
| ” லக்ஷகோட்யண்டநாயிகாயை நம: | ,, लक्षकोट्यंडनायिकायै नमः |
| ” லக்ஷ்யார்த்தாயை நம: | ,, लक्ष्यार्थायै नमः |
| ” லக்ஷணகம்யாயை நம: | ,, लक्षणगम्यायै नमः |
| ” லப்தகாமாயை நம: | ,, लब्धकामायै नमः |
| ” லதாதநவே நம: | ,, लतातनवे नमः |
| ” லலாமராஜதளகாயை நம: 75 | ,, ललामराजदलकायै नमः |
| ” லம்பமுக்தாலதாஞ்சிதாயைநம: | ,, लंबमुक्तालतांचितायै नमः |
| ” லம்போதரப்ரஸுவே நம: | ,, लंबोदरप्रसुवे नमः |
| ” லப்யாயை நம: | ,, लभ्यायै नमः |
| ” லஜ்ஜாட்யாயை நம: | ,, लज्जाढ्यायै नमः |
| ” லயவர்ஜிதாயை நம: 80 | ,, लयवर्जितायै नमः |
| ” ஹ்ரீங்காரரூபாயை நம: | ,, ह्रींकाररूपायै नमः |

| | | |
|---|---|---|
| ஓம் ஹ்ரீங்கார நிலயாயை நம: | | ओं ह्रींकार निलयायै नमः |
| „ ஹ்ரீம்பதப்ரியாயை நம: | | „ ह्रींपदप्रियायै नमः |
| „ ஹ்ரீங்கார பீஜாயை நம: | | „ ह्रींकारबीजायै नमः |
| „ ஹ்ரீங்கார மந்த்ராயை நம: | 85 | „ ह्रींकारमन्त्रायै नमः |
| „ ஹ்ரீங்காரலக்ஷணாயை நம: | | „ ह्रींकारलक्षणायै नमः |
| „ ஹ்ரீங்காரஜபஸுப்ரீதாயை நம: | | „ ह्रींकार जपसुप्रीतायै नमः |
| „ ஹ்ரீம்மத்யை நம: | | „ ह्रींमध्यै नमः |
| „ ஹ்ரீம்விபூஷணாயை நம: | | „ ह्रींविभूषणायै नमः |
| „ ஹ்ரீம்சீலாயை நம: | 90 | „ ह्रींशीलायै नमः |
| „ ஹ்ரீம்பதாராத்யாயை நம: | | „ ह्रींपदाराध्यायै नमः |
| „ ஹ்ரீம்கர்பாயை நம: | | „ ह्रींगर्भायै नमः |
| „ ஹ்ரீம்பதாபிதாயை நம: | | „ ह्रींपदाऽभिधायै नमः |
| „ ஹ்ரீங்காரவாச்யாயை நம: | | „ ह्रींकारवाच्यायै नमः |
| „ ஹ்ரீங்காரபூஜ்யாயை நம: | 95 | „ ह्रींकारपूज्यायै नमः |
| „ ஹ்ரீங்காரபேடிகாயை நம: | | „ ह्रींकारपेटिकायै नमः |
| „ ஹ்ரீங்காரவேத்யாயை நம: | | „ ह्रींकारवेद्यायै नमः |
| „ ஹ்ரீங்காரசிந்த்யாயை நம: | | „ ह्रींकारचिन्त्यायै नमः |
| „ ஹ்ரீம்ரூபிண்யை நம: | | „ ह्रींरूपिण्यै नमः |
| „ ஹ்ரீம்சரீரிண்யை நம: | 100 | „ ह्रींशरीरिण्यै नमः |
| „ ஹகாரரூபாயை நம: | | „ हकाररूपायै नमः |
| „ ஹலத்ருக்பூஜிதாயை நம: | | „ हलधृक्पूजितायै नमः |
| „ ஹரிணேக்ஷணாயை நம: | | „ हरिणेक्षणायै नमः |
| „ ஹரப்ரியாயை நம: | | „ हरप्रियायै नमः |
| „ ஹராராத்யாயை நம: | 105 | „ हराराध्यायै नमः |
| „ ஹரிப்ரும்ஹேந்த்ரவந்திதாயை | | „ हरिब्रम्हेन्द्रवन्दितायै नमः |
| „ ஹயாரூடாஸேவிதாயை நம: | | „ हयारूढासेवितायै नमः |
| „ ஹயமேதஸமர்சிதாயை நம: | | „ हयमेधसमर्चितायै नमः |
| „ ஹர்யக்ஷவாஹநாயை நம: | | „ हर्यक्षवाहनायै नमः |
| „ ஹம்ஸவாஹநாயை நம: | 110 | „ हंसवाहनायै नमः |
| „ ஹததாநவாயை நம: | | „ हतदानवायै नमः |
| „ ஹத்யாதி பாபசமன்யை நம: | | „ हत्यादिपापशमन्यै नमः |
| „ ஹரிதச்வாதிஸேவிதாயை நம: | | „ हरिदश्वादिसेवितायै नमः |
| „ ஹஸ்திகும்போத்துங்க குசாயை நம: | | „ हस्तिकुंभोत्तुंग कुचायै नमः |

| | |
|---|---|
| ஓம் ஹஸ்திக்ருத்திப்ரியாங்கநாயை நம: 115 | ओं हस्तिकृत्तिप्रियांगनायै नमः |
| ” ஹரித்ராகுங்குமாதிக்தாயை நம: | ,, हरिद्राकुंकुमादिग्धायै नमः |
| ” ஹர்யச்வாதி அமரார்சிதாயை நம: | ,, हर्यश्वाघमरार्चितायै नमः |
| ” ஹரிகேசஸக்யை நம: | ,, हरिकेशसख्यै नमः |
| ” ஹாதிவித்யாயை நம: | ,, हादिविद्यायै नमः |
| ” ஹாலமதோல்லஸாயைநம: | ,, हालामदोल्लसायै नमः |
| ” ஸகாரரூபாயை நம: | ,, सकार रुपायै नमः |
| ” ஸர்வஞ்ஞாயை நம: | ,, सर्वज्ञायै नमः |
| ” ஸர்வேச்யை நம: | ,, सर्वेश्यै नमः |
| ” ஸர்வமங்களாயை நம: | ,, सर्वमंगलायै नमः |
| ,, ஸர்வகர்த்ரியை நம: 125 | ,, सर्वकर्त्र्यै नमः |
| ” ஸர்வபர்த்ரியை நம: | ,, सर्वभर्त्र्यै नमः |
| “ ஸர்வஹந்த்ரியை நம: | ,, सर्वहन्त्र्यै नमः |
| ” ஸநாதனயை நம: | ,, सनातनायै नमः |
| ,, ஸர்வாநவத்யாயை நம: | ,, सर्वानवद्यायै नमः |
| ” ஸர்வாங்கஸுந்தர்யை நம: 130 | ,, सर्वांगसुन्दर्यै नमः |
| ” ஸர்வஸாக்ஷிண்யை நம: | ,, सर्वसाक्षिण्यै नमः |
| ” ஸர்வாத்மிகாயை நம: | ,, सर्वात्मिकायै नमः |
| ,, ஸர்வஸௌக்யதாத்ரியை நம: | ,, सर्वसौख्यदात्र्यै नमः |
| ,, ஸர்வவிமோஹிந்யை நம: | ,, सर्वविमोहिन्यै नमः |
| ,, ஸர்வாதாராயை நம: 135 | ,, सर्वाधारायै नमः |
| ” ஸர்வகதாயை நம: | ,, सर्वगतायै नमः |
| ” ஸர்வாவகுணவர்ஜிதாயை நம: | ,, सर्वावगुणवर्जितायै नमः |
| ” ஸர்வாருணாயை நம: | ,, सर्वारुणायै नमः |
| ” ஸர்வமாத்ரே நம: | ,, सर्वमात्रे नमः |
| ” ஸர்வாபரணபூஷிதாயை நம: | ,, सर्वाभरणभूषितायै नमः |
| ” ககாரார்த்தாயை நம: | ,, ककारार्थायै नमः |
| ” காலஹந்த்ரியை நம : | ,, कालहन्त्र्यै नमः |
| ” காமேச்யை நம: | ,, कामेश्यै नमः |
| ” காமிதார்த்ததாயை நம : | ,, कामितार्थदायै नमः |
| ” காமஸஞ்ஜீவின்யை நம: 145 | ,, कामसंजीविन्यै नमः |
| ” கல்யாயை நம : | ,, कल्यायै नमः |
| ” கரிணீஸ்தனமண்டலாயை நம: | ,, करिणीस्तनमंडलायै नमः |

| | |
|---|---|
| ஓம் கரபோரவே நம: | ओं करभोरवे नमः |
| ” கலாநாதமுக்யை நம: | ,, कलानातमुख्यै नमः |
| ” கசஜிதாம்புதாயை நம: 150 | ,, कचजितांबुदायै नमः |
| ” கடாக்ஷஸ்யந்திகருணாயை நம: | ,, कटाक्षस्यन्दिकरुणायै नमः |
| ” காபாலிப்ராணநாயிகாயை நம: | ,, कपालीप्राणनायिकायै नमः |
| ” காருண்யவிக்ரஹாயை நம: | ,, कारुण्यविग्रहायै नमः |
| ” காந்தாயை நம: | ,, कान्तायै नमः |
| ” காந்திதூதஜபாவள்யை நம: | ,, कान्तिधूतजपावल्यै नमः |
| ” கலாலாபாயை நம: | ,, कलालापायै नमः |
| ” கம்புகண்ட்யை நம: | ,, कंबुकंठ्यै नमः |
| ” கரநிர்ஜிதபல்லவாயை நம: | ,, करनिर्जितपल्लवायै नमः |
| ” கல்பவல்லீஸமபுஜாயை நம: | ,, कल्पवल्लीसमभुजायै नमः |
| ” கஸ்தூரிதிலகாஞ்சிதாயை நம: | ,, कस्तूरीतिलकांचितायै नमः |
| ” ஹகாரார்த்தாயை நம: | ,, हकारार्थायै नमः |
| ” ஹம்ஸகத்யை நம: | ,, हंसगत्यै नमः |
| ” ஹாடகாபரணோஜ்வலாயை நம: | ,, हाटकाभरणोज्वलायै नमः |
| ” ஹாரஹாரிகுசாபோகாயை நம: | ,, हारहारिकुचाभोगायै नमः |
| ” ஹாகின்யை நம: 165 | ,, हाकिन्यै नमः |
| ” ஹல்யவர்ஜிதாயை நம: | ,, हल्यवर्जितायै नमः |
| ” ஹரித்பதிஸமாராத்யாயை நம: | ,, हरित्पतिसमाराध्यायै नमः |
| ” ஹடாத்காரஹதாஸுராயை நம: | ,, हटात्कारहताऽसुरायै नमः |
| ” ஹர்ஷப்ரதாயை நம: | ,, हर्षप्रदायै नमः |
| ” ஹவிர்போக்த்ரியை நம: 170 | ,, हविर्भोक्त्र्यै नमः |
| ” ஹார்தஸந்தமஸாபஹாயை நம: | ,, हार्दसन्तमसापहायै नमः |
| ” ஹல்லீஸலாஸ்யஸந்துஷ்டாயை நம: | ,, हल्लीसलास्यसन्तुष्टायै नमः |
| ” ஹம்ஸமந்த்ரார்த்தரூபிண்யை நம: | ,, हंसमन्त्रार्थ रूपिण्यै नमः |
| ” ஹாநோபாதானநிர்முக்தாயை நம: | ,, हानोपादाननिर्मुक्तायै नमः |
| ” ஹர்ஷிண்யை நம: 175 | ,, हर्षिण्यै नमः |
| ” ஹரிஸோதர்யை நம: | ,, हरिसोदर्यै नमः |
| ” ஹாஹாஹூஹூமுகஸ்துத்யாயை நம: | ,, हाहाहूहूमुखस्तुत्यायै नमः |

| | |
|---|---|
| ஓம் ஹானிவ்ருத்திவிவர்ஜிதாயை நம: | ओं हानिवृद्धिविवर्जितायै नमः |
| ” ஹய்யங்கவீன ஹ்ருதயாயை நம. | ,, हय्यंगवीनहृदयायै नमः |
| ” ஹரிகோபாருணம்சுகாயை நம: | ,, हरिगोपारुणांशुकायै नमः |
| ” லகாரக்யாயை நம: | ,, लकारार्थायै नमः |
| ” லதாபூஜ்யாயை நம: | ,, लतापूज्यायै नमः |
| ” லயஸ்திதிஉத்பவேச்வர்யை நம: | ,, लयस्थित्युद्भवेश्वर्यै नमः |
| ” லாஸ்யதர்சநஸந்துஷ்டாயை நம: | ,, लास्यदर्शनसन्तुष्टायै नमः |
| ” லாபாலாபவிவர்ஜிதாயை நம: | ,, लाभाऽलाभविवर्जितायै नमः |
| ” லங்க்யேதராஞ்ஞாயை நம: | ,, लंघ्येतराज्ञायै नमः |
| ” லாவண்யசாலின்யை நம: | ,, लावण्यशालिन्यै नमः |
| ” லகுஸித்திதாயை நம: | ,, लघुसिद्धितायै नमः |
| ” லாக்ஷாரஸஸவர்ணாயை நம: | ,, लाक्षारससवर्णायै नमः |
| ” லக்ஷ்மணாக்ரஜபூஜிதாயை நம: | ,, लक्ष्मणाग्रजपूजितायै नमः |
| ” லப்யேதராயை நம: | ,, लभ्येतरायै नमः |
| ” லப்தபக்திஸுலபாயை நம: | ,, लब्धभक्तिसुलभायै नमः |
| ” லாங்கலாயுதாயை நம: | ,, लांगलायुधायै नमः |
| ” லக்னசாமரஹஸ்தஸ்ரீசாரதாபரிவீஜிதாயை நம: | ,, लग्नचामरहस्त श्रीशारदापरि वीजितायै नमः |
| ” லஜ்ஜாபதஸமாராத்யாயை நம: | ,, लज्जापदसमाराध्यायै नमः |
| ” லம்படாயை நம: | ,, लंपटायै नमः |
| ” லகுலேச்வர்யை நம: | ,, लकुलेश्वर्यै नमः |
| ” லப்தமானாயை நம: | ,, लब्धमानायै नमः |
| ” லப்தரஸாயை நம: | ,, लब्धरसायै नमः |
| ” லப்தஸம்பத்ஸமுந்நத்யை நம: | ,, लब्धसंपत्समुन्नत्यै नमः |
| ” ஹ்ரீங்காரிண்யை நம: | ,, ह्रींकारिण्यै नमः |
| ” ஹ்ரீங்கார்யை நம: | ,, ह्रींकार्यै नमः |
| ” ஹ்ரீம்மத்யாயை நம: | ,, ह्रींमध्यायै नमः |
| ” ஹ்ரீம்சிகாமணயே நம: | ,, ह्रींशिखामणये नमः |
| ” ஹ்ரீங்காரகுண்டாக்நிசிகாயை நம: | ,, ह्रींकारकुंडाग्निशिखायै नमः |

| | |
|---|---|
| ஓம் ஹ்ரீங்காரசசிசந்த்ரிகாயை நம: | ओं ह्रींकारशशिचन्द्रिकायै नमः |
| " ஹ்ரீங்காரபாஸ்கரருச்யை நம: | ,, ह्रींकारभास्कररूच्यै नमः |
| " ஹ்ரீங்காராம்போதசஞ்சலாயை நம: | ,, ह्रींकारांबोदचंचलायै नमः |
| " ஹ்ரீங்காரகுந்தாங்குரிகாயை நம: | ,, ह्रींकारकुन्दांकुरिकायै नमः |
| " ஹ்ரீங்காரைகபராயணாயை நம: | ,, ह्रींकारैकपरायणायै नमः |
| " ஹ்ரீங்காரதீர்கிகாஹம்ஸ்யை நம: | ,, ह्रींकारदीर्घिका हंस्यै नमः |
| " ஹ்ரீங்காரோத்யானகேகின்யை நம: | ,, ह्रींकारोद्यानकेकिन्यै नमः |
| " ஹ்ரீங்காராரண்யஹரிண்யை நம: | ,, ह्रींकारारण्यहरिण्यै नमः |
| " ஹ்ரீங்காராவாலவல்லர்யை நம: | ,, ह्रींकारावालवल्लर्यै नमः |
| " ஹ்ரீங்காரபஞ்சரசுக்யை நம: | ,, ह्रींकारपंजरशुक्यै नमः |
| " ஹ்ரீங்காராங்கணதீபிகாயை நம: | ,, ह्रींकारांगणदीपिकायै नमः |
| " ஹ்ரீங்காரகந்தராஸிம்ஹ்யை நம: | ,, ह्रींकारकन्दरासिम्हयै नमः |
| " ஹ்ரீங்காராம்போஜப்ருங்கிகாயை நம: | ,, ह्रींकारांभोजभृंगिकायै नमः |
| " ஹ்ரீங்காரஸுமனோமாத்வ்யை நம: | ,, ह्रींकारसुमनोमाध्व्यै नमः |
| " ஹ்ரீங்காரதருமஞ்சர்யை நம: | ,, ह्रींकारतरूमंजर्यै नमः |
| " ஸகாராக்யாயை நம: | ,, सकाराख्यायै नमः |
| " ஸமரஸாயை நம: | ,, समरसायै नमः |
| " ஸகலாகமஸம்ஸ்துதாயை நம: | ,, सकलागमसंस्तुतायै नमः |
| " ஸர்வவேதாந்ததாத்பர்யபூம்யை நம: | ,, सर्ववेदान्ततात्पर्यभूम्यै नमः |
| " ஸதஸதாச்ரயாயை நம: | ,, सदसदाश्रयायै नमः |
| " ஸகலாயை நம: | ,, सकलायै नमः |
| " ஸச்சிதானந்தாயை நம: | ,, सच्चिदानन्दायै नमः |
| " ஸாத்யாயை நம: | ,, साध्यायै नमः |
| " ஸத்கதிதாயின்யை நம: | ,, सद्गतिदायिन्यै नमः |
| " ஸநகாதிமுனித்யேயாயை நம: | ,, सनकादिमुनिध्येयायै नमः |
| " ஸதாசிவகுடும்பின்யை நம: | ,, सदाशिवकुटुंबिन्यै नमः |

| | |
|---|---|
| ஓம் ஸகலாதிஷ்டானரூபாயை நம: | ओं सकलाधिष्ठानरूपायै नमः |
| ” ஸத்யரூபாயை நம: | ,, सत्यरूपायै नमः |
| „ ஸமாக்ருத்யை நம: | ,, समाकृत्यै नमः |
| ” ஸர்வப்ரபஞ்சநிர்மாத்ரே நம: | ,, सर्वप्रपंचनिर्मात्रे नमः |
| „ ஸமானாதிகவர்ஜிதாயை நம: | ,, समानाधिकवर्जितायै नमः |
| ” ஸர்வோத்துங்காயை நம: | ,, सर्वोत्तुंगायै नमः |
| ” ஸங்கஹீனாயை நம: | ,, संगहीनायै नमः |
| „ ஸகுணாயை நம: | ,, सगुणायै नमः |
| „ ஸகலேஷ்டதாயை நம: | ,, सकलेष्टदायै नमः |
| „ ககாரிண்யை நம: | ,, ककारिण्यै नमः |
| „ காவ்யலோலாயை நம: | ,, काव्यलोलायै नमः |
| „ காமேச்வரமனோஹராயை நம: | ,, कामेश्वरमनोहरायै नमः |
| „ காமேச்வரப்ராணநாட்யைநம: | ,, कामेश्वरप्राणनाडिकायै नमः |
| „ காமேசோத்ஸங்கவாஸின்யை நம: | ,, कामेशोतसंगवासिन्यै नमः |
| „ காமேச்வராலிங்கிதாங்க்யை நம: | ,, कामेश्वरालिंगितांग्यै नमः |
| „ காமேச்வரஸுகப்ரதாயை நம: | ,, कामेश्वरसुखप्रदायै नमः |
| „ காமேச்வரப்ரணயின்யை நம: | ,, कामेश्वरप्रणयिन्यै नमः |
| „ காமேச்வரவிலாஸின்யை நம: | ,, कामेश्वरविलासिन्यै नमः |
| „ காமேச்வரதபஸ்ஸித்யை நம: | ,, कामेश्वरतपस्सिद्ध्यै नमः |
| „ காமேச்வரமனஹப்ரியாயை நம: | ,, कामेश्वरमनःप्रियायै नमः |
| ” காமேச்வரப்ராணநாதாயை நம: | ,, कामेश्वरप्राणनातायै नमः |
| „ காமேச்வரவிமோஹின்யை நம | ,, कामेश्वरविमोहिन्यै नमः |
| „ காமேச்வரப்ரும்ஹவித்யாயை நம: | ,, कामेश्वरब्रह्मविद्यायै नमः |
| ” காமேச்வரக்ருஹேச்வர்யை நம: | ,, कामेश्वरगृहेश्वर्यै नमः |
| „ காமேச்வராஹலாதகர்யை நம: | ,, कामेश्वराहलादकर्यै नमः |
| „ காமேச்வரமஹேச்வர்யை நம: | ,, कामेश्वरमहेश्वर्यै नमः |
| „ காமேச்வர்யை நம: | ,, कामेश्वर्यै नमः |
| „ காமகோடிநிலயாயை நம: | ,, कामकोटिनिलयायै नमः |
| „ காங்க்ஷிதார்த்ததாயை நம: | ,, कांक्षितार्थदायै नमः |
| ” லகாரிண்யை நம: | ,, लकारिण्यै नमः |

| | |
|---|---|
| ஓம் லப்தரூபாயை நம:— — | ओं लव्धरूपायै नमः |
| „ லப்ததியே நம: | „ लव्धधिये नमः |
| „ லப்த வாஞ்சிதாயை நம: | „ लव्धवांचितायै नमः |
| „ லப்தபாபமனோதூராயை நம: | „ लव्धपापमनोदूरायै नमः |
| „ லப்தாஹங்கார துர்கமாயை நம: | „ लव्धाहंकारदुर्गमायै नमः |
| „ லப்தசக்த்யை நம: | „ लव्धशक्त्यै नमः |
| „ லப்த தேஹாயை நம: | „ लव्धदेहायै नमः |
| „ லப்தைச்வர்யஸமுந்நத்யை நம: | „ लव्धेश्वर्यसमुन्नत्यै नमः |
| „ லப்தங்ருத்யை நம: 270 | „ लव्धवृत्यै नमः |
| „ லப்தலீலாயை நம: | „ लव्धलीलायै नमः |
| „ லப்தயௌவநசாலின்யை நம: | „ लव्धयौवनशालिन्यै नमः |
| „ லப்தாதிசய ஸர்வாங்க ஸௌந்தர்யை நம: | „ लव्धातिशयसर्वांगसौन्दर्यायै नमः |
| „ லப்தவிப்ரமாயை நம: | „ लव्धविभ्रमायै नमः |
| „ லப்தராகாயை நம: 275 | „ लव्धरागायै नमः |
| „ லப்தபத்யை நம: | „ लव्धपत्यै नमः |
| „ லப்தநாநாக மஸ்தித்யை நம: | „ लव्धनानागमस्थित्यै नमः |
| „ லப்த போகாயை நம: | „ लव्धभोगायै नमः |
| „ லப்தஸுகாயை நம: | „ लव्धसुखायै नमः |
| „ லப்தஹர்ஷா பிபூஜிதாயை நம: | „ लव्धहर्षाऽभिपूजितायै नमः |
| „ ஹ்ரீங்காரமூர்த்யை நம: | „ ह्रींकारमूर्त्यै नमः |
| „ ஹ்ரீங்கார ஸௌதச்ருங்க கபோதிகாயை நம: | „ ह्रींकार सौधशृंगकपोतिकायै नमः |
| „ ஹ்ரீங்காரதுக்தாப்தி ஸுதாயை நம: | „ ह्रींकारदुग्धाब्धिसुधायै नमः |
| „ ஹ்ரீங்காரகமலேந்திராயை நம: | „ ह्रींकार कमलेन्दिरायै नमः |
| „ ஹ்ரீங்காரமணி தீபார்சிஷே நம: | „ ह्रींकार मणिदीपार्चिषे नमः |
| „ ஹ்ரீங்கார தருசாரிகாயை நம: | „ ह्रींकार तरुशारिकायै नमः |
| „ ஹ்ரீங்கார பேடிகாமணயே நம: | „ ह्रींकारपेटिकामणये नमः |
| „ ஹ்ரீங்காராதர்சபிம்பிதாயே நம: | „ ह्रींकारादर्शबिंबितायै नमः |
| „ ஹ்ரீங்காரகோசாஸிலதாயை நம: | „ हकारकोशासि लतायै नमः |
| „ ஹ்ரீங்காராஸ்த்தான நர்தக்யை நம: | „ ह्रींकारास्थाननर्तक्यै नमः |

| | |
|---|---|
| ஓம் ஹ்ரீங்கார சுக்திகா முக்தா மணயே நம: | ओं ह्रींकारशुक्तिकामुक्तामणये नमः |
| " ஹ்ரீங்கார போதிதாயை நம: | ,, ह्रींकारबोधितायै नमः |
| " ஹ்ரீங்கார மய ஸௌவர்ண ஸ்தம்பவித்ரும புத்ரிகாயை நம: | ,, ह्रींकारमय सौवर्णस्तंबविद्रमपुत्रिकायै नमः |
| " ஹ்ரீங்காரவேதஉபநிஷதே நம: | ,, ह्रींकारवेदोपनिषदे नमः |
| " ஹ்ரீங்காராத்வரதக்ஷிணாயை நம: | ,, ह्रींकाराध्वरदक्षिणायै नमः |
| " ஹ்ரீங்கார நந்தநாராம நவ கல்பக வல்லர்யை நம: | ,, ह्रींकारनन्दनाराम नवकल्पकवल्लर्यै नमः |
| " ஹ்ரீங்காரஹிமவத் கங்காயை நம: | ,, ह्रींकार हिमवत्गंगायै नमः |
| " ஹ்ரீங்காரவர்ணகௌஸ்து பாயை நம: | ,, ह्रींकार वर्णकौस्तुभायै नमः |
| " ஹ்ரீங்காரமந்த்ர ஸர்வஸ்யாயை நம: | ,, ह्रींकार नन्त्रसर्वस्वायै नमः |
| " ஹ்ரீங்கார பரஸௌக்ய தாயை நம: | ,, ह्रींकार परसौख्यदायै नमः ओं |
| " பவஸ்ய தேவஸ்ய பத்நியைநம: | भवस्यदेवस्य पत्न्यै नमः |
| " சர்வஸ்ய தேவஸ்ய பத்நியை நம : | शर्वस्यदेवस्य पत्न्यै नमः |
| " ஈசானஸ்யதேவஸ்பத்நியைநம: | ईशानस्यदेवस्य पत्न्यै नमः |
| " ருத்ரஸ்ய தேவஸ்ய பத்நியை நம. | रुद्रस्यदेवस्य पत्न्यै नमः |
| " உக்ரஸ்ய தேவஸ்ய பத்நியை நம: | उग्रस्यदेवस्य पत्न्यै नमः |
| " பீமஸ்யதேவஸ்ய பத்நியைநம: | भीमस्यदेवस्य पत्न्यै नमः |
| " பசுபதேதேவஸ்யபத்நியைநம: | पशुपतेदेवस्य पत्न्यै नमः |
| " மஹத: தேவஸ்ய பத்நியைநம: | महतःदेवस्य पत्न्यै नमः ओं |
| ஸ்ரீ மஹாத்ரிபுரஸுந்தர்யை ஸ்ரீ ராஜ ராஜேச்வர்யை நம: நாநாவித பரிமளபத்ர புஷ்பாணி ஸமர்ப யாமி | ओं श्रीमहात्रिपुरसुन्दर्यै नमः<br>ओं श्रीराजराजेश्वर्यै नमः<br>नानाविध परिमलपत्रपुष्पाणि समर्पयामि। |

---

# ஸ்ரீ ராஜராஜேஸ்வரி அஷ்டகம்

। श्री राजराजेश्वर्यष्टकम् ।

1. ஓம். அம்பா சாம்பவி சந்த்ரமௌளி ரபலாऽபர்ணா உமாபார்வதி
காளி ஹைமவதி சிவாத்திணயநா காத்யாயநி பைரவி
சாவித்ரி நவயௌவநா சுபகரி சாம்ராஜ்ய லக்ஷ்மீ, ப்ரதா
சித்ரூபி பரதேவதா பகவதி ஸ்ரீ ராஜராஜேச்வரி.

अंबा - शांभवि - चन्द्रमौलि - रबला - ऽपर्णा - उमा - पार्वती
काली - हैमवती - शिवा - त्रिणयना - कात्यायनी - भैरवी ।
सावित्री - नवयौवना - शुभकरी - साम्राज्यलक्ष्मी प्रदा
चिद्रूपी परदेवता भगवती श्रीराजराजेश्वरी ॥

2. அம்பா மோஹிநி தேவதா த்ரிபுவநீ ஆநந்த ஸந்தாயி நீ
வாணிபல்லவபாணி வேணுமுரளி காநப்ரியா லோலி நீ
கல்யாணி உடுராஜ பிம்பவ தநாதூம்ராக்ஷ ஸம்ஹாரிணி
சித்ரூபி பரதேவதா பகவதி ஸ்ரீ ராஜராஜேச்வரி.

अंबा मोहिनी देवता त्रिभुवनी ह्यानन्द संदायिनी
वाणी पल्लवपाणि वेणुमुरली गानप्रिया लोलिनी ।
कल्याणीह्युडुराज बिंबवदना धूम्राक्ष संहारिणी
चिद्रूपि परदेवता भगवती श्रीराजराजेश्वरी ॥

3. அம்பா நூபுர ரத்ந கங்கணதரி கேயூரஹாராவளி
ஜாதீ சம்பக வைஜயந்தி லஹரீ க்ரைவேய கைராஜிதா
வீணாவேணு விநோத மண்டிதகரா வீராஸநாஸம்ஸ்திதா
சித்ரூபீ பரதேவதா பகவதீ ஸ்ரீ ராஜராஜேச்வரி.

अंबा नूपुर रत्नकंकणधरी केयूरहारावली
जातीचपंकवैजयन्तिलहरी ग्रैवेयकैराजिता ।
वीणावेणु विनोदमंडितकरा वीरासनासंस्थिता
चिद्रूपी परदेवता भगवती श्रीराजराजेश्वरी ॥

4. அம்பா ரௌத்ரிணி பத்ரகாளி பகளாஜ்வாலாமுகீ வைஷ்ணவீ
பிரும்மாணீ த்ரிபுராந்தகீ ஸுரநுதா தேதீப்ய மாநோ ஜ்வலா.
சாமுண்டாச்ருத ரக்ஷபோஷ ஜநநீ தாக்ஷாயணீ வல்லபீ
சித்ரூபீ பரதேவதா பகவதி ஸ்ரீ ராஜராஜேச்வரீ.

अंवा रौद्रिणि भद्रकाली भगलाज्वालामुखी वैष्णवीं
ब्रम्हाणि त्रिपुरान्तकी सुरनुता देदीप्यमानो ज्वला ।
चामुंडाश्रित रक्षपोष जननी दाक्षायणी वल्लवी
चिद्रूपी परदेवता भगवती श्रराजराजेश्वरी ॥

5. அம்பா சூலதநு: குசாங்குசதரீ அர்த்தேந்து பிம்பாதரீ
வாராஹீ மதுகைடப ப்ரசமநீ வாணீ ரமாஸேவிதா
மல்லாத்யாஸுர மூக தைத்ய தமநீ மஹேச்வரீ அம்பிகா
சித்ரூபீ பரதேவதா பகவதீ ஸ்ரீ ராஜராஜேச்வரீ.

अंवाशूलधनु: कुशांकुशधरी अर्वेन्दु बिंवाधरी
वाराही मधुकैटभ प्रशमनी वाणी रमासेविता ।
मल्लाद्यासुर मूकदैत्यदमनी माहेश्वरी अंबिका
चिद्रूपी परदेवता भगवती श्रराजराजेश्वरी ॥

6. அம்பாச்ருஷ்டி விநாசபாலநகரீ ஆர்யா விசம்சோபிதா
காயத்ரீ ப்ரணவாக்ஷராம்ருத ரஸாபூர்ணாநு ஸந்திகிருதா
ஓம்காரீ விநுதாமராச்சிதபதா உத்தண்டதைத்யா பஹா
சித்ரூபீ பரதேவதா பகவதி ஸ்ரீ ராஜராஜேச்வரீ

अंबासृष्टि विनाशपालनकरी आर्या विसंशोयिता
गायत्री प्रगवाक्षरामृत रसापूर्णानु संधीकृता ।
ओंकारी विनतासुतार्चितपदा उद्दंडदैत्यापहा
चिद्रूपी परदेवता भगवती श्रराजराजेश्वरी ॥

7. அம்பாசாஸ்வதி ஆகமாதி விநுதா ஆர்யா மஹாதேவதா
யாப்ரும்மாதி பிபீலிகாந்தஜநநீ யாவை ஜகந்மோஹிநீ
யா பஞ்சப்ரணவாதி ரேப ஜநநீ யாசித் கலா கமலினீ
சித்ரூபீ பரதேவதா பகவதீ ஸ்ரீ ராஜராஜேச்வரீ.

अंवाशाश्वति आगमादि विनुता आर्या महादेवता
यात्रम्हादि पिपीलिकान्तजननी यावै जगन्मोहिनी ।
या पंचप्रगवादि रे(क)फजननी याचित्कलामालिनी
चिद्रूपी परदेवता भगवती श्रराजराजेश्वरी ॥

8. அம்பா பாலித பக்த ராஜதநிசம் சம்பாஷ்டகம் யப்படேத்
அம்பா லோக கடாக்ஷவிக்ஷ லலிதம் சைச்வர்ய மவ்யாஹதம்
அம்பா பாவந மந்த்ர ராஜ படநாதந்தே ச மோக்ஷப்ரதா
சித்ரூபி பரதேவதா பகவதி ஸ்ரீ ராஜராஜேச்வரி.

अंबापालित भक्तराजदनिशं चांबाष्टकं यःपठेत्
अंबा लोक कटाक्षवीक्ष ललितंचैश्वर्यमव्याहतम् ।
अंबापावन मन्त्रराज पठनादन्ते च मोक्षप्रदा
चिद्रूपी परदेवता भगवती श्रीराजराजेश्वरी ॥



